உ

கடவுள் துணை.

# சேதுபுராணவசநம்.

இஃது
நிரம்பவழகிய தேசிகராற் செய்யப்பட்ட
தமிழ்க்காவியத்திற்கு அருத்தமாக
இராமேச்சுரம்
முத்துவிஜயம்பிள்ளையவர்களால்
எழுதப்பட்டிருந்த ஏட்டுப்பிரதியைச்
சிலவித்துவான்களால்
பிழையறப்பரிசோதித்து,



இரண்டாம் பதிப்பு.



கோ-லோகநாதமுதலியாரவர்களால்
தமது
மநோன்மணிவிலாச அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1906.

சென்னை:



இதன்விலை ரூபா—௨.

சிவமயம்.

# சருக்கவகராதி.


| இலக்கம். | சருக்கத்தின்பெயர். | பக்கம். |
|---|---|---|
| | கடவுள்வாழ்த்து | ௩ |
| | நைமிசாரணியச்சிறப்பு | ௨௦ |
| | திருநாட்டுச்சிறப்பு | ௨௬ |
| | கந்தமாதனச்சிறப்பு | ௩௨ |
| ௧ | சேதுசருக்கம் | ௩௮ |
| ௨ | சேதுவந்தசருக்கம் | ௪௫ |
| ௩ | சக்கரதீர்த்தச்சருக்கம் | ௫௧ |
| ௪ | துத்தமச்சருக்கம் | ௫௫ |
| ௫ | விதூமச்சருக்கம் | ௬௦ |
| ௬ | தேவிபுரச்சருக்கம் | ௮௦ |
| ௭ | வேதாளவரதச்சருக்கம் | ௯௧ |
| ௮ | பாவநாசச்சருக்கம் | ௧௦௨ |
| ௯ | சீதாகுண்டச்சருக்கம் | ௧௦௮ |
| ௧௦ | மங்கலதீர்த்தச்சருக்கம் | ௧௧௪ |
| ௧௧ | அமுததீர்த்தச்சருக்கம் | ௧௨௧ |
| ௧௨ | பிரமகுண்டச்சருக்கம் | ௧௨௫ |
| ௧௩ | அநுமகுண்டச்சருக்கம் | ௧௩௧ |
| ௧௪ | அகத்தியதீர்த்தச்சருக்கம் | ௧௩௮ |
| ௧௫ | இராமதீர்த்தச்சருக்கம் | ௧௪௮ |
| ௧௬ | இலட்சுமணதீர்த்தச்சருக்கம் | ௧௫௮ |
| ௧௭ | சடாதீர்த்தச்சருக்கம் | ௧௬௪ |
| ௧௮ | இலக்குமிதீர்த்தச்சருக்கம் | ௧௬௮ |
| ௧௯ | அக்கினிதீர்த்தச்சருக்கம் | ௧௭௩ |
| ௨௦ | சக்கரதீர்த்தச்சருக்கம் | ௧௮௭ |
| ௨௧ | சிவதீர்த்தச்சருக்கம் | ௧௯௪ |
| ௨௨ | சங்கதீர்த்தச்சருக்கம் | ௨௦௪ |
| ௨௩ | முத்தீர்த்தச்சருக்கம் | ௨௧௦ |

| இலக்கம். | சருக்கத்தின்பெயர். | பக்கம். |
|---|---|---|
| ௨௪ | கோடிதீர்த்தச்சருக்கம் | ௨௧௮ |
| ௨௫ | சாத்தியாமிர்ததீர்த்தச்சருக்கம் | ௨௨௮ |
| ௨௬ | சர்வதீர்த்தச்சருக்கம் | ௨௪௧ |
| ௨௭ | தநுக்கோடிதீர்த்தச்சருக்கம் | ௨௪௫ |
| ௨௮ | அசுவத்தாமாச்சருக்கம் | ௨௫௭ |
| ௨௯ | தருமகுத்தச்சருக்கம் | ௨௬௮ |
| ௩௦ | பராவசுச்சருக்கம் | ௨௭௭ |
| ௩௧ | கவிசம்புச்சருக்கம் | ௨௮௪ |
| ௩௨ | துராசாரச்சருக்கம் | ௨௯௬ |
| ௩௩ | பாலோடைச்சருக்கம் | ௩௧௦ |
| ௩௪ | கத்துருச்சருக்கம் | ௩௧௫ |
| ௩௫ | கவிதீர்த்தச்சருக்கம் | ௩௩௩ |
| ௩௬ | காயத்திரி சரசுவதிதீர்த்தச்சருக்கம் | ௩௪௩ |
| ௩௭ | காசிபச்சருக்கம் | ௩௪௬ |
| ௩௮ | பலதீர்த்தச்சருக்கம் | ௩௫௪ |
| ௩௯ | இராமநாதச்சருக்கம் | ௩௫௮ |
| ௪௦ | இராமன் அருச்சனைச்சருக்கம் | ௩௬௮ |
| ௪௧ | பிரம்மஹத்திச்சருக்கம் | ௩௯௬ |
| ௪௨ | தோத்திரச்சருக்கம் | ௪௦௩ |
| ௪௩ | சங்கரபாண்டியச்சருக்கம் | ௪௧௫ |
| ௪௪ | சேதுமாதவச்சருக்கம் | ௪௨௭ |
| ௪௫ | சேதுயாத்திரைச்சருக்கம் | ௪௩௮ |
| ௪௬ | சேதுபலச்சருக்கம் | ௪௪௩ |

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சேதுபுராணவசநம்.

## காப்பு.

திங்களங்குழவியென்னத்திகழொருமருப்பிற்சோதி
தங்குகிம்புரிவயங்கத்தடாமணிமகுடந்தாங்கித்
துங்கநல்வரங்கணல்குந்தூயசீரிராமசேதுப்
புங்கவர்வணங்கும்யானைமுகத்தனைப்போற்றல்செய்வாம்.

இ-ள். பரிசுத்தமான ஸ்ரீராமபிரானால் கட்டப்பட்ட சேதுவில் பாலசந்திரன்போலப் பிரகாசிக்கின்ற ஒற்றைக்கொம்பினிடத்து ஒளியமைந்த கிம்புரி விளங்காநிற்கப் பெரிதாகிய ரத்நகசிதமான கிரீடத்தைத்தரித்து எழுந்தருளியிருந்து தன்னைவந்து தரிசிப்பவர்க்கு அவர்கள் விரும்புவனவாகிய மேலான நன்மையமைந்த நல்ல வரங்களைத் தடையின்றிக்கொடுத்தருள்வோரும் தேவர்களால் வணங்கப்படுவோரும் ஆகிய யானைமுகக்கடவுளாகிய ஸ்ரீவிநாயகமூர்த்தியை, இந்நூல் இனிது முடிதற்பொருட்டு, யாம் வணங்குவோம். எ-று. (க)

சைவசமயிகள் யாதானும் ஓர் நூல் செய்யப்புக்கால், அந் நூல் இனிது முடிதற்பொருட்டு முதற்கண் விநாயகக்கடவுளை வாழ்த்துதல் மரபாதலால், இந் நூலாசிரியரும் தாம் எடுத்துக்கொண்ட சேதுபுராணம் என்னும் இந்நூல் இனிது முடிதற்பொருட்டு இவ்வாழ்த்துக்கூறினர் என்றுணர்க. மருப்புவளைவினாலும் நிறத்தாலும் பாலசந்திரனுக்கு உவமையாயிற்று, இதனை வண்ணம் வடிவு என்பனவற்றைப்பற்றி வந்தபண்புவமை யென்பர்.

கயமுகாசுரனைச் சங்கரித்தற்பொருட்டு ஒருமருப்பை முறித்துக் கைக்கொண்டார் என்றும், வேதவியாசமுனிவர் பாரதகதையைக் கூறுங்கால், அதனை மேருவின்புறத்தில் எழுதுதற்குரிய எழுத்தாணியாகக் கோடற்கு முறித்துக் கைக்கொண்டார் என்றும் புராணங்

னில் கூறப்படுதலாலும், முகத்துள்ளது ஒற்றைக்கொம்பேயாதலாலும் "இகமொருமருப்பின்" என்றார். "சோதித்தங்கும்பரி" என்றதனால் மணிகளிழைத்த கிம்புரியென்றதாயிற்று. கிம்புரி, யானைக்கொம்பிற் கட்டும்பூண். வழங்குதல்-ஏராளமாகக்கொடுத்தல். சேதுவில் மூழ்கினோர் பெரும்பாவங்களையெல்லா மொழித்துப் புனிதர் ஆதல் திண்ணமாதலாலும், அவர்க்கு அப்புனிதத்தன்மை தருதல் உண்மையால் சேதுவைத் தூயசீரிராமசேது வென்றுங் கூறினர். வயங்க, தாங்கி, நல்கும் யானைமுகத்தன் என்றும் புங்கவர் வணங்கும் யானைமுகத்தன் என்றும் இயைத்துக்கொள்க.

போற்றல்செய்வாம்—என்னும் வினைக்கு யாம் என்னும் வினைமுதல்வருவிக்கப்பட்டது. இனிவரும் கடவுள்வாழ்த்தில் "பூமாது" என்னும் முதற்செய்யுளின் ஈற்றில்சேர்ப்பாம் என்பதற்கும் இரண்டாஞ்செய்யுள் முதலானவற்றின் ஈற்றிலுள்ளவாழ்வாம் என்பது முதலியவற்றிற்கும் இவ்வாறே அமைத்துக்கொள்க. தாம் ஒருவரேயாதலால் தனித்தன்மைப் பன்மையென்றாயினும் தம்போல்வாரையும் உளப்படுத்திக் கூறுவதால் உளப்பாட்டுத் தன்மைப்பன்மையென்றாயினுங் கொள்க.

தொடர்கின்றவிடுக்கண்வெற்புத்துகள்படத்துளைக்குமேலோ
னடர்கின்றவதற்குநாதனாகியவைங்கைமுக்கட்
படர்வென்றிப்பகவன்முன்னைப்பவமுதற்படியினெல்லா
விடர்நின்றும்புரக்கவெம்மையெங்கணுமெந்தஞான்றும்.

இ-ள். ஆன்மகோடிகளைத் தொடர்ந்துவருத்துகின்ற பிறவித்துன்பமாகிய மலையானது பொடிபடும்படி அதனைத் தொளைக்கின்ற மேலோனும் வருத்துகின்ற அத்துன்பத்திற்குத் தலைவனுமாகிய ஐந்துதிருக்கரங்களையும், மூன்றுகண்களையும், மிகுந்த வெற்றியையும் உடைய விநாயகக்கடவுள், அநாதியாய்த் தொடர்ந்துவருகின்ற பிறவிமுதலாகச்சொல்லப்பட்ட இவ்வுலகத்திலுள்ள எல்லாத் துன்பங்களினின்றும் எம்மை எவ்விடத்தும் எந்தக்காலத்தும் காத்தருள்வாராக. எ-று. (உ)

பிறவித்துன்பத்திற்குக் காரணமாகியவினை, ஆன்மாக்கள் சென்று பிறக்கும் பிறவிதோறும் விடாது தொடர்கின்றமையின், "தொடர்கின்றவிடுக்கண்" என்றும், அவ்விடுக்கண் யாவராலும் துளைக்கப்படாத நிலைபெறுதலால் அதனை வெற்பு என்றும், அந்து

அன்னதாயினும் மூத்தபிள்ளையார் தம்மையடுத்தாரது துன்பத்தை நிர்மூலமாக நீறுசெய்வது திண்ணமாதலால், "துகள்படத் துளைக்கு மேலோன்" என்றும், தம்மைவழிபடாதார்க்கு அத்துன்பதை யுண்டாக்குவோராதலால் "அதற்கு நாதன்" என்றும் கூறினர். வழிபடாதார்க்குத் துன்பஞ்செய்வர் என்பதனைத் திரிபுரசங்காரகாலத்தில் தமது தந்தையாரது இரதத்தின் அச்சிறுத்தமையே விளக்கும் எங்கணும் என்றது மூன்றுலகத்திலும் எனவும், எந்தஞான்றும் என்றது முக்காலத்தும் எனவும் கொள்க. படி, பூமி, மேலோன், நாதன், பகவன் என்பன ஒருபொருள்மேல்வந்த பலபெயர்கள். இவற்றுள் ஒவ்வொன்றும்புரக்க என்னும் வியங்கோள் வினையோடு சென்றியைந்து முடிவுபெறும். இதற்கு எம்மையென்பது செயப்படுபொருள்.

---

## கடவுள்வாழ்த்து.

சபாபதி.

பூமாதுபோலிவெய்தமுகுந்தன்காக்கும்
புவிமாதுவளம்பெருகப்புலமைசான்ற
நாமாதுநலந்தழைப்பவிருள்கால்சீக்கு
நகைநிலவுதவழ்மவுலிநன்னீர்க்கங்கை
மாமாதுபுனறுளிப்பமறைகள்வாழ்த்த
வளர்தில்லையம்பலத்துள்வாமநீங்காத்
தேமாதுவிழிகுளிர்ப்பவமரர்போற்றத்
திருநடஞ்செய்நூபுரத்தாள்சென்னிசேர்ப்பாம்.

இ-ள். தாமரைமலரில்வாழ்கின்ற திருமகள் பிரகாசத்தை யடையவும், திருமாலினால் காக்கப்படுகிற பூதேவியின் பலவகை வளங்களும் செழிக்கவும், கல்வி யறிவுமிகுந்த சரஸ்வதியின் அழகு செழிக்கவும், இருட்டையோட்டுகின்ற ஒளியையுடைய பாலசந்திரன் தவழ்தற்கிடமாகிய சடாமகுடத்திலுள்ள பரிசுத்தமான நீரையும், எல்லாருடைய பாவங்களையும் தீர்த்தலாகிய பெருமையையும் உடைய கங்காதேவி நீரைத் துளிக்கவும், நான்குவேதங்களும் துதிக்கவும், எப்போதும் ஒருகுறைவும் இன்றி அபிவிர்த்தியடைந்துவருகின்ற தில்லையம்பலத்தில் தனது இடப்பாகத்தை நீங்காதிருக்கிற தெய்வத்

தன்மைபொருந்திய உமாதேவியாரது கண்கள் குளிரவும், இந்திரன் முதலாகிய தேவர்கள்வந்து வணங்கவும் திருநடனஞ்செய்கின்ற ஸ்ரீசபாபதியினுடைய சிலம்பணிந்த திருவடிகளை எமது சிரத்தில் அமைத்துக்கொள்வோம் யாம். எ-று. (௩)

பூ எனப் பொதுப்படக் கூறினாராயினும் பூமாது என்பது திருமகளை யுணர்த்தி நிற்றலால் ஆஃது ஈண்டுத்தாமரை மலருக்காயிற்று. இவ்வாறன்றிப் "பூவெனப்படுவது பொறிவாழ்பூவே" என்றும், "பூந்தவிசில் வீற்றிருக்கும்பொன்" என்றும் பிறவிடங்களிலும் பூவென்பது தாமரைமலரையே யுணர்த்திநிற்றல்காண்க. பூமாதுபொலிவெய்தலாவது இவ்வுலகத்தில் செல்வம்மிக்குப்பொலிய என்றதாயிற்று. புவிமாது வளம்பெருகுதலாவது பைங்கூழ்முதலியன செழித்துப் பயன்தருதல். நாமாது நலந்தழைத்தலாவது கல்வி அபிவிர்த்தி அடைதல். சரஸ்வதி, கல்விக்கு அதிதேவதையாகலானும் அவளின் மிக்க புலமையுடையோர் ஒருவர் இல்லையாதலானும் "புலமைசான்ற நாமாது" என்றார். கங்கைமாமாது புனல்துளித்தலாவது, இறைவன் திருநடனஞ் செய்தலால், அசைவுற்றுத் ததும்பித் திவலைவீசுதல், அன்றிக் காலமழைபெய்தல்ஆம். "வாமநீங்கா" என்னும் விசேடணத்தால் "மாது" என்பது உமாதேவியாரை யுணர்த்திற்று. எய்த, பெருக, தழைப்ப, துளிப்ப, வாழ்த்த, குளிர்ப்ப, போற்ற என்னுஞ் செயவெனெச்சங்கள் திருநடஞ்செய்தல் என்னும் வினைகொண்டு முடிந்தன. திருநடஞ்செய் என்பது ஒருசொல். இஃது ஈண்டுப்பகுதி மாத்திரையாய்க் கொள்ளப்படுதலால், காலங்கரந்த பெயரெச்சமாகிய வினைத்தொகையாய்த் தாள் என்னும் பெயர்கொண்டு முடிந்தது.

மறைகள் வாழ்த்தலாவது தில்லையம்பலமும் அதில் திருநடஞ்செய் நூபுரத்தாளும் நீடூழிவாழ்கவென மங்கலவாழ்த்துக் கூறுதல். வாமநீங்காத்தேமாது விழிகுளிர்த்தலாவது, திருநடஞ்செய் நூபுரத்தாளையுடைய எம்பெருமானது திருமேனியின் பேரழகைக்கண்டு களித்தல். "தடக்கோட்டி மயத்தேனுக்கிநிற்கு மெழிலுடையான்" என்றார் பிறரும். அமரர்போற்றுதலாவது இந்திரன்முதலிய இமையவர் தத்தம் பதப்பேறுகளுக்கு ஓர் இடையூறுண்டாகாவண்ணம் காத்தருள்கவெனப் போற்றுதலாம். அம்பலம்—பொது. அம்பலத்துள் திருநடஞ்செய்வன இசையும்.

---

### இராமநாதசுவாமி.

பூந்தவிசினிருந்தபிரான்முதலோர்காணப்
புண்டரிகமகள்கொழுநன்புகழிலங்கை
வேந்தனுயிர்ப்பழிகழுவுமுகத்தால்யார்க்கும்
விடையவனேயுடையவனும்வேதவாய்மை
யாந்தரங்கம்வெளிசெய்வானனைவரோடு
மணைந்துகந்தமாதனத்திலருச்சித்தேத்து
மேந்துபுனற்சடிலமுடியிராமநாத
னிணையடிச்செந்தாமரைகளிறைஞ்சிவாழ்வாம்.

இ-ள். தாமரைமலராகிய ஆசனத்தில் வீற்றிருக்கின்ற பிரமன் முதலிய தேவர்கள் காணும்படி, திருமகள் நாயகனாகிய ஸ்ரீராம பிரான் பராக்கிரமம் முதலியவற்றால் பெருங்கீர்த்தியமைந்த இலங் காதிபனாகிய இராவணனது உயிர்க்கொலையால் சேர்ந்த பாவத்தைப் பரிகரித்தலாகிய வழியால் எல்லார்க்கும் இடபவாகனனாகிய சிவ பெருமானே தலைவன் என்கிற வேதங்களின் உண்மையாகிய இரக சியத்தை வெளிப்படுத்தும்பொருட்டுச் சுக்கிரீவமகாராஜன் முதலிய எல்லாரோடும் வந்து கந்தமாதனபர்வதத்தில் அருச்சனை செய்தற் குரிய மலர்களைக்கொண்டு அருச்சித்துத் துதித்த கங்கையைத் தாங் கிய சடாமகுடத்தையுடைய இராமநாதசுவாமியினது, இரண்டு திரு வடிகளாகிய செந்தாமரைமலர்களை வணங்கி வாழ்வோம் யாம். எ-று.

பூந்தவிசின் இருந்த என்னும் விசேடணத்தால் பிரான் என்பது பிரமனையுணர்த்திற்று. முதலோர் என்பது இந்திரன் முதலியோரை. உயிர்ப்பழி-உயிர்நீக்கியபாவம். கழுவுதல் ஈண்டுப்பரிகரித்தல் என்னும்பொருளது. அந்தரங்கம் என்பது ஆந்தரங்கம் என எதுகை நோக்கி நீண்டது. வெளிசெய்வான் என்பதில் வான்-எதிர் கால முணர்த்தும் செயவெனெச்ச விகுதி. கந்தமாதனம். இராமேச் சுரத்திலுள்ள ஓர் குன்று. அடிச்செந்தாமரை என்றாரேனும் செந் தாமரையடியெனச்சொல் முன்பின்னாகமாற்றிச் செந்தாமரை மலர் போன்ற திருவடி எனப் பொருள்கொள்க.

புண்டரிகமகள் கொழுநன் அருச்சித்து ஏத்தும் இராமநாதன் இணையடிச் செந்தாமரைகள் இறைஞ்சி வாழ்வாம் என வினைமுடிக்க.

---

### பர்வதவர்த்தனியம்மை.

தண்ணெனவும்வெச்செனவுந்தந்துசாயாத்
தகைபயின்றுவிடநீக்கித்தலைவற்கென்று
முண்ணமுதந்தனையுதவியிமையமேரு
வுயர்சிகரமந்தரத்தையொருவிச்சேர்ந்துங்
கண்ணுதலைவிள்ளப்புறலாற்கயிலையெள்ளிக்
கௌணியர்க்குத்தமிழ்சுரக்குங்காட்சியாலே
வண்ணமுலைமலயமலைமானுங்கன்னி
மலைவளர்காதலிமலர்த்தாண்மனத்துள்வைப்பாம்.

இ-ள். தட்பவெப்பங்களை யுடையனவாகியும், சாயாத பெருமையை யுடையனவாகியும், மதனுசமப்படி விடநிலையைநீக்கி அமுதநிலையைத் தனது நாயகனுகிய சிவபெருமானுக்குத் தந்தும், முறையே தட்பம் ஒன்றனையேயுடைய இமயமலையையும் திரிபுரசங்காரகாலத்தில் வளைந்த மேருமலையையும் திருப்பாற்கடல் கடையப்பட்டகாலத்தில் அதில் உண்டான விடம் அமுதம் என்னும் இரண்டனுள் அமுதமிருக்க, விடத்தைச் சிவபெருமானுக்குத் தந்த உயர்ந்த சிகரங்களையுடைய மந்தரமலையையும் இகழ்ந்தும், தலைவரைப் பிரிந்த தலைவியர் உடல் வெளுத்திருத்தல்போல நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானைச் சேர்ந்திருந்தும் வெளுத்திருத்தலால் கைலைமலையை யிகழ்ந்தும், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்க்கு ஞானப்பாலூட்டித் தமிழ்ப்பாடல் சுரக்கச்செய்த (உலகத்தார்க்குத் தமிழைத் தந்தருளிய) காட்சியளவையாலே பொதியமலையை நிகர்க்கின்ற அழகிய தனங்களையுடைய இளமைவாய்ந்த பர்வதவர்த்தனியம்மையின் தாமரைமலர்போன்ற திருவடிகளை யெமது மனத்தின்கண் இருத்துவோம் யாம். எ-று. (௫)

தண்ணெனவும் வெச்செனவும் என்பன ஈண்டுத் தொழிற்பெயராய்த் தண்ணென்றிருத்தல், வெச்சென்றிருத்தல் எனப்பொருள் கொள்ளக்கிடந்தன. சாயாத்தகை-இறுமாப்பு. மாதர்தனம், ஆலநிழல் முதலாயின உஷ்ணகாலத்தில் தண்ணென்றும் சீதளகாலத்தில் வெச்சென்றும் இருத்தல் இயல்பாதலால் தண்ணெனவும் வெச்செனவும் தந்து எனாதி தனத்தை விசேடித்தார். தந்து, நீக்கி, உதவி, ஒருவி, எள்ளி என்னும் செய்தெனெச்சங்கள் சுரக்கும் என்னும் வினை

*கொண்டுமுடிந்தன. தண்ணெனவும் வெச்செனவும் தருதல் முதலிய குணங்களையுடையதும், தமிழ்சுரக்கும் காட்சியில் மலய மலையை நிகர்த்திருப்பதும் ஆகிய வண்ணமுலை மலைவளர்காதலி மலர்த்தாள் மனத்துள் வைப்பாம் என வினை முடிபுசெய்க. பொழிப்பாதலான் இச்செய்யுளின் அகலவுரை வரையப்படவில்லை. கௌணியர்-திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்; பூமியிலுள்ளோர். பர்வதவர்த்தநி-மலைவளர்காதலி.*

---

### விநாயகக்கடவுள்.

வேணிமுடிப்பகீரதிநீர்புழைக்கைவாங்கி
விடுத்தயன்வெண்டலையுருட்டிமிளிர்வெண்கோட்டாற்
கோணிளையமதிக்குழவியுழுதுமேருக்
கோடுமுடியிற்கிளைத்தவெண்டோள்குழையத்தாக்கித்
தாணெடியவிடைமுனிந்துகயிலைமுக்கட்
டாதையோடும்விளையாடித்தன்பாலன்பர்
மாணிலவுமனத்தறிநின்றுலாவுந்தெய்வ
வாரணத்தைநினைந்திறைஞ்சிவழுத்தல்செய்வாம்.

*இ-ள். சடைமுடியில் அணியப்பட்டிருக்கிற கங்காநதியின் நீரைத் தனது துதிக்கையினால் உட்கொண்டு உமிழ்ந்தும், பிரமனது வெண்டலையை உருட்டியும், விளங்குகின்ற வெள்ளைக் கொம்பினால் கோணிய இளமையாகிய பிறைச்சந்திரனை உழுதும், மேருமலையின் கொடுமுடிகளைப் போலக் கிளைத்திருக்கிற எட்டுத் தோள்களும் குழையும்படி தாக்கியும், நீண்ட கால்களையுடைய இடபத்தைக் கோபித்துக்குத்தியும், திருக்கைலாயமலையில் எழுந்தருளியிருக்கிற மூன்றுகண்களையுடைய தந்தையாகிய சிவபெருமானோடும் விளையாடியும், தன்னிடத்து அன்பு செய்பவராகிய அடியார்களுடைய மாட்சிமைதங்கிய மனமாகிய கட்டுத்தறியில் கட்டப்பட்டு நின்று உலாவுகின்ற தெய்வத்தன்மை பொருந்திய யானைமுகத்தோனாகிய விநாயகக்கடவுளை மனத்தால் நினைத்துக், காயத்தால் வணங்கி, நாவினால்தோத்திரஞ் செய்வோம் யாம். எ-று.* (க)

*பகீரதி-பகீரதனால் கொண்டுவரப்பட்டது. புழைக்கை வாங்கி விடுக்கும் நீருக்கு விலாழி யென்று பெயர். இது "இவுளிவாயினும்*

யானைக்கையினு முமிழ் நீர் விலாழி யென்றுரைக்கப்படுமே" என்பத னால் இனிது விளங்கும்.

சிவபெருமான் தம் திருமிடற்றில் அணிந்திருப்பது அநேக பிரமர்களுடைய வெண்டலையாற் சமைத்த மாலையாதலால் அயன் வெண்டலையென்றது பன்மையைக் குறிக்கின்றது. அதிலுள்ள தலை களை எடுத்து விளையாட்டுக் கருவியாகிய பந்துபோல உருட்டுத லால் அயன் வெண்டலையுருட்டி யென்றார். பகீரதிநீர், வெண்டலை, மதிக் குழவி, எண்டோள், விடை என்பனவற்றை முறையே வாங்கி, உருட்டி, உழுது, தாக்கி, முனிந்து விளையாடச் சிவபெருமான் எவ் வாறு பொறுத்திருந்தனர் எனின், மூத்தபிள்ளையாதலால் இவர் மீது தந்தையாகிய தமது அன்பின் மிகுதி தோன்றப்பொறுத் திருந் தனர் என்க. தந்தைக்கு மூத்தபிள்ளைமீதும், தாய்க்கு இளைய பிள்ளைமீதும் அன்பு மிகுத்திருத்தல் உலகவியல்பு என்க.

இவ்வாறு விளையாடும் விளம்பருவ முள்ளவராயினும் அன்பர் மனம் விட்டகலாதவர் என்றுணர்த்துதற்கு, "தன்பாலன்பர் மா ணிலவு மனத்தறி நின்றுலாவும் தெய்வவாரணம்" என்றார். நினைந்து, இறைஞ்சி, வழுத்தல் செய்வாம் என்றது முக்கரணத் தாலும் வழிபடுவோம் என்றவாறு.

வாங்கி, விடுத்து, உருட்டி, உழுது, தாக்கி, முனிந்து, விளை யாடி உலாவும், தெய்வவாரணத்தை நினைந்து, இறைஞ்சி, வழுத்தல் செய்வாம் என வினைமுடிக்க.

---

சுப்பிரமணியக்கடவுள்.

குலவுமலைமகள்கலசமுலைப்பால்வாசக்
குமுதமவள்கோமுநர்மறைகோழிக்குஞ்சேவ்வி
நிலவுமுகமலர்கமழச்செய்துமுன்னோ
னெடுந்துளைக்கைபிடித்தேறிநெற்றிப்பட்டத்
துலவியிவரொருமுவருவப்பமாலோ
டும்பர்கணங்களிதூங்கவுலகமூடுங்
கலபமரகதமயிலூர்கழற்கால்வேன்றிக்
கந்தனைவந்தனைசெய்துகருத்துள்வைப்பாம்.

இ-ள். விளங்குகின்ற மலையரையன்மகளாகிய உமாதேவியின் பொற்கலசத்தை நிகர்த்த தனங்களிற்சுரந்த பாலையுண்ட மணத்தையுடைய செவ்வல்லிமலரை அந்த உமாதேவியின் நாயகராகிய சிவபெருமானது வேதங்களை வெளிப்படுத்துகின்ற அழகு நிலைபெற்ற முகமாகிய தாமரைமலரில் பரிமளிக்கச்செய்து, தன் தமையனாகிய விநாயகக்கடவுளின் நெடிய துவாரத்தையுடைய துதிக்கையினைப் பற்றி யேறி அவரது நெற்றிப்பட்டத்தின் மீது உலாவி, இந்த ஒப்பற்ற மூவரும் மனமகிழவும், திருமாலுடன் மற்றைய தேவர் கூட்டம் களிப்படையவும், எல்லா வுலகங்களையும் மறைத்தற்குரிய தோகையையுடைய மரகதமணியின் நிறமுள்ள மயிலை யேறி நடத்துகின்ற வீரக்கழலை யணிந்த திருவடியையும் வெற்றியையும் உடைய ஸ்ரீசுப்பிரமணியக்கடவுளைத் தோத்திரம் பண்ணி யெமது மனத்துள் இருத்துவோம் யாம். எ-று. (எ)

செய்து, ஏறி, உலவி, உவப்ப, களிதூங்க, மயிலூர்கந்தனை வந்தனைசெய்து கருத்துள்வைப்பாம் என வினைமுடிக்க.

சிவபெருமான் திருமுகத்தில் தம் திருமுகத்தைச் சேர்த்து தமது செவ்வல்லிமலர்போலும் திருவாய் முத்தம் அளித்தலை யுணர்த்துதற்குக் "குலவுமலை மகள்கலச முலைப்பால்வாசக் குமுதமலர் கொழுநர்மறை கொழிக்குஞ்செவ்வி நிலவுமுக மலர்கமழச் செய்து" என்றார்.

மூத்தபிள்ளையாரோடு இவர் விளையாடுதல் இயற்கை யாதலால் முன்னோனெடுங் தொளைக் கைபிடித் தேறி நெற்றிப்பட்டத்துலவி' என்றார். இவ்வாறு இவ்விருவரும் விளையாடுதலை அடியில்வரும் செய்யுளாலும் உணர்க.

அரனவனிடத்திலே யைங்கரன்வந்து தானையவன் செவியை மிகவும், அறுமுகன் கிள்ளினானென்றே சிணுங்கிடவுமத்தன் வேலவனைநோக்கி, விரைவுடன்வினவவே யண்ணனென் சென்னியில் விளங்குகண் ணெண்ணினனெனை, வெம்பிடும்பிள் ளையைப்பார்த்து நீ யப்படிவிகடமேன் செய்தாயென, மருவுமென்கைந்நீள முழமளந்தானென்ன மயிலவனகைத்துநிற்க, மலையரைய னுதவவரு மூமைய வனைநோக்கி நின்மைந்தரைப் பாராயெனக், கருதரிய கடலாடை யுலகுபலவண்டங் கருப்பமாய்ப் பெற்றகன்னி, கணபதியை யருகணைத் தகமகிழ்வு கொண்டனள் களிப்புட னுமைக்காக்கவே,

இம்மூவர். என்றது தந்தை, தாய், தமையன் என்பவரை, கலாபம் என்பது கலபம் எனக் குறுகிற்று.

---

சரசுவதி.

கவளமதகரியுரிவைப்போர்வைமூடுங்
கண்ணுதலோன்புகழ்விரிக்குங்கலைகள்யாவும்
பவளவிதழ்ப்பசுங்குதலைமொழியிற்காட்டும்
பைந்தொடியையந்தணன்றோய்பருமவல்குற்
றுவளுமணிமருங்குலிளநிலவெண்மூரற்
சுந்தரியைவெண்கமலத்தோட்டுவட்டத்
தவளமதிநடுவமர்வாலெகினம்போலுந்
தையலைமையலையகற்றித்தாளிற்றாழ்வாம்.

இ-ள். கவளங் கொள்ளுகின்ற மதயானையின் தோலாகிய போர்வையினால் தன்திருமேனியை மறைக்கின்ற நெற்றிக்கண்ணை யுடைய சிவபிரானது புகழை விரித்துச் சொல்லுகின்ற எல்லாக்கலைகளையும் பவளம்போலச் செவந்த திருவதரத்தில் உண்டாகிய மிருதுவாகிய மழலைச்சொற்களால் வெளியிடுகின்ற பசும் பொன்வளையலையணிந்தவளும், பிரமதேவன் தழுவப்பெற்ற பருமம் அணிந்த நிதம்பத்தையும் துவளாநின்ற அழகிய இடையையும் இளநிலவை யுமிழ்கின்ற வெள்ளியபற்களையும் உடைய கட்டழகியும், இதழ்களோடு கூடிய வெண்டாமரை மலரினிடையே யெழுந்தருளி வட்டவடிவையும் வெண்ணிறத்தையு முடைய பூர்ணசந்திரனுக்கு நடுவே பொருந்தியிருக்கின்ற வெண்மையாகிய அன்னப்பெடையை நிகர்க்கின்ற கைபுனையப்பட்டவளும் ஆகிய சரசுவதிதேவியின் திருவடிகளில் எமது மனமயக்கத்தை யொழித்து வணங்குவோம் யாம். எ-று. (அ)

கவளம் - யானைக்கு ஊட்டும் அரிசித்திரளை. உரிவை. தோல். பைந்தொடி. பசும்பொன்னாற் செய்த வளையல். பருமம்-பதினெட்டுக் கோவைமணி, இது மாதர்மேகலைமுதலிய இடையணியுள் ஒன்று. பைந்தொடி, சுந்தரி, தையல் இம் மூன்றும் ஒரு பொருள் மேல்வந்த பலபெயர்கள். இவற்றின் ஈற்றிலுள்ள ஐகாரங்கள் மூன்றும் எண்ணுப்பொருளன, தையலைத் தாளிற்றாழ்வாம் என இயையும்.

## திருநந்திதேவர்.

போதனுறைமலர்முகிழாதமரர்கோமான்
புரநிலைமைகுலையாதுமருதுபோழ்ந்த
பாதனுறைகடல்சுருங்காதரிணஞ்சூரல்
படைமழுவண்சுரிகைகரம்பரித்துப்பாந்தட்
காதனுறைசிதறுபுனற்கங்கைசூடுங்
கண்ணுதலெம்பரன்மதியுங்கதியுநல்கு
நாதனுறைதிருக்கயிலைகாவல்பூண்ட
நந்தியைநம்புந்தியின்கணயந்துவாழ்வாம்.

*இ-ள். பிரமதேவன் வாசம்பண்ணுகிற தாமரைமலர் குவிந்து போகாமலும், தேவர்களுக்கு இறைவனாகிய இந்திரனது நகரத்தின் நிலைமை குலையாமலும்; இரண்டு மருதமரங்களினிடையே சென்று அவ்விரண்டையும் முறித்துத் தள்ளின திருவடிகளையுடைய திருமால் அறிதுயிலமர்ந்த திருப்பாற்கடல் சுருங்காமலும், மான், பிரம்பு, மழுப்படை, வளவியசுரிகை என்பவைகளைத் தமது திருக்கரத்தில் தரித்து, ஆதிசேஷனைக் குழையாயணிந்த திருச்செவியை யுடையவனும் திவலைகளைச் சிதறுகிற நீரையுடைய கங்காநதியைச் சடாபாரத்தில் தரித்த நெற்றிக்கண்ணனும் எம்மால் விரும்பப்படுமேவனாகிய மேலோனும் நல் அறிவையும் நற்கதியையும் அடுத்தார்க்கு அருள் செய்கின்ற இறைவனும் ஆகிய சிவபெருமான் வாசம்பண்ணுகின்ற திருக்கைலாயமலையைக் காவல் செய்யும் தொழிலை மேற்கொண்ட திருநந்திதேவரை யெமது மனத்தினால் விரும்பி வாழ்வோம் யாம். எ-று.* (க)

*முகிழாது, குலையாது, சுருங்காது என்னும் எச்சங்கள் பரித்து என்னும் வினையையும் பரித்து என்னும் எச்சம் காவல்பூண்ட என்னும் வினையையும் கொண்டு முடிந்தன. பரித்து காவல்பூண்ட நந்தியை நயந்து வாழ்வாம் என வினை முடிபுசெய்க. போது-தாமரைமலர். அதை இடமாக உடையவனாதலால் பிரமனைப் போதன் என்றார். அமரர்-கற்பத்தளவும் இறவாதவர். மருதுபோழ்ந்த பாதனுறை என்ற விசேடணத்தால் கடல் என்றது திருப்பாற்கடற்காயிற்று. பாந்தள் பாம்புக்குப்பொதுப்பெயராயினும் பாந்தட்காதன் என்ற குறிப்பால் ஆதிசேடனுக்காயிற்று. சிவபெருமான் திருச்செவியில் குழையாக அணியப்படுவது ஆதிசேடனாகையால் இவ்வாறு பொரு*

னுரைக்கலாயிற்று. "அந்தகனைச் செற்றதாளர் திகழ்கனகாதின கரணந்தடனர்" என்றார் பிறரும். இவ்வாறு கூறினமையால் இவர் திருக்கைலைக்காவல் பூண்டமையே உலகநிலைபெற்றுக்குக் காரணம் என்றதாயிற்று.

---

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

சங்கமணிக்குழைதயங்கத்தழைந்தகாதுந்
தனிவிடையுமுதலபலதணப்பில்காட்சி
பொங்குமடையாளங்கள்புகன்றுபோற்றிப்
பொருவிறந்தபரஞ்சுடரைப்புந்திக்கெட்டா
வங்கணனைவழுதியுடல்வெப்புநீங்க
வணிதிகழ்வெண்டிருநீறள்ளிச்சாத்துஞ்
செங்கைவிரல்கொடுகுறித்துத்தெரிக்குந்தோன்றல்
சிற்றடியின்பெருந்தகைமைசிந்தைசெய்வாம்.

இ-ள். அழகாகிய சங்கக்குழையானது அணியப்பட்டு விளங்காநிற்கச் செழித்த திருச்செவியும் ஒப்பற்ற இடபவாகனமும் முதலாகிய நீங்காத அற்புதத்தோற்றமானது விளங்காநின்ற அடையாளங்களைப் புகழ்ந்து சொல்லி வணங்கி, ஒப்பற்ற பரஞ்சோதியும் மனாதிகளுக்கெட்டாத அங்கணனும் ஆகிய சிவபெருமானை, பாண்டியனது சரீரத்திலுண்டான சுரமானது தணியும்படி அழகுவிளங்குகின்ற திருவெண்ணீற்றை அள்ளிச் சாத்தும் செம்மையாகிய கைவிரலைக்கொண்டு சுட்டிக்காட்டின பெரியோனாகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருடைய சிறிய திருவடியின் பெருமையை யாம் சிந்திப்போம். எ-று. (௧௦)

இவர் அம்மையின் திருமுலைப்பாலுண்டதனாற் சுரந்த தமிழ்ப் பதிகங்களுள்ளே முதற்பதிக முதற்செய்யுளின் முதற்கண் "தோடுடைய செவியன்விடையேறி" என்று தொடக்கஞ்செய்ததை மனத்துக்கொண்டு "சங்கமணிக்குழைதயங்கத் தழைத்தகாதுந் தனிவிடையு முதலபல தணப்பில்காட்சி பொங்குமடையாளங்கள் புகன்று போற்றி" என்றும், அச்செய்யுளினிறுதியில் இறைவனை "பீடுடைய பிரமாபுரமேவிய பெம்மானிவனன்றே" எனச் சுட்டினதை மனத்துக்கொண்டு, பரஞ்சுடரை அங்கணனை செங்கைவிரல் கொடுகுறித்

துத் தெரிக்குந்தோன்றல் என்றும் கூறினர். வழுதியுடல் வெப்பு நீங்கவணிதிகழ் வெண்டிருநுண்ணேளள்ளிச் சாத்தின வரலாற்றைத் திருவிளையாடற்புராணத்துப் பாண்டியன் சுரந்தீர்த்தபடலத்தில் விரிவாய்க் காணலாம்.

காதும் விடையும் முதலகாட்சி அடையாளங்கள் புகன்று போற்றி பரஞ்சுடரை அங்கணனை வழுதியுடல் வெப்புநீங்க திருநுண்ணேள் அள்ளிச்சாத்தும் செங்கைவிரல் கொடு தெரிக்கும் தோன்றல் சிற்றடியின் பெருந்தகைமை சிந்தைசெய்வாம் என வினைமுடிபு செய்க.

---

### திருநாவுக்கரசுநாயனூர்.

தேவரையுமுனிவரையுந்துளவமார்பிற்
றிருவரையுங்குரவரையுஞ்செல்வமிக்கோர்
யாவரையுமேவல்கொளுநெற்றிநாட்டத்
திறைவரைமுன்னிகந்திருந்தவெண்ணந்தோன்றச்
சேவரையுநெடுங்கொடியின்தகைமையெல்லாத்
திசைவரையுஞ்சேலத்தமிழின்செய்யுள்பாடு
நாவரையர்புகழ்மொழிகள்வரைந்துகூறி
நயந்தவர்செய்திருத்தொண்டுவியந்துவாழ்வாம்.

இ-ள். பிரமன் முதலிய தேவர்களையும் சநகாதிமுனிவர்களையும் துளசிமாலையைத்தரித்த மார்பின்கண் திருமகளை யமைத்துக் கொண்டதிருமாலையும், திருநந்திதேவர் முதலிய ஆசாரியர்களையும், செல்வத்தால் மிக்கோராகிய குபேரன்முதலிய எல்லாரையும் ஏவல் கொள்ளுகின்ற நெற்றிக்கண்ணராகிய சிவபெருமானை முன்னே நீங்கியிருந்த தமதுகருத்து வெளியாகும்படி அந்தச் சிவபெருமானது இடபக்கொடியின் பெருமையானது எல்லாத்திசைகளிலும் சென்று வியாபிக்கத் தமிழ்ச்செய்யுளால் பதிகங்கள் பாடியருளிய திருநாவுக்கரசுநாயனூருடைய புகழ்மொழிகள் யாவையும் எடுத்துச்சொல்லி விரும்பி அவர்செய்த திருத்தொண்டினைப் பாராட்டி வாழ்வோம். எ-று. (கக)

முனிவர் - இறைவனை மநநஞ்செய்வோர். இவ்வாறு மநநஞ் செய்வோருள் சநகாதியர் சிறந்தமையின், முனிவர் என்பதற்கு சநகாதியர் எனப்பொருள் கூறலாயிற்று. சநகாதியர் என்றது சநகர்

முதலிய நால்வரை. அந்நால்வராவார், சநகர், சநந்தநர், சநற்குமாரர், சநத்சுஜாதர் என்போர். இந்நால்வரும் பிரமன் மாநஸபுத்திரரும் கல்லாலின்நீழலில் சிவபெருமான் தக்ஷிணாமூர்த்தியாய் எழுந்தருளி யிருந்து பிரமப்பொருளைச் சொல்லாமற் சொல்லப்பெற்றவரும் ஆத லால் இவர்க்கு முனிவருட் சிறப்புப்பெறப்பட்டது. இவருள் சநற் குமாரர் தன்னிடத்தில் மிகுந்த அன்புபாராட்டுவோனை விதுரனால் பிரார்த்திக்கப்பட்டு திருதராட்டிரனிடம்வந்து அவனுக்கு ஞானோப தேசஞ்செய்து போயினர் என்பது புராணகதை. இவ்வாறன்றி அத் திரிமுதலிய முனிவர் எனினும் அமையும். குரவர் என்றது நந்தி தேவர்முதலிய எழுவரை. செல்வப்பெருக்குள்ளோரில் குபேரன் சிறந்தோனாதலால், செல்வமிக்கோர் யாவரையும் என்பதற்குக் குபே ரன்முதலிய எல்லாரையும் எனப் பொருளுரைக்க லாயிற்று. இகந் திருந்த என்பதற்கு அவமதித்திருந்த என்றுரைப்பினும் அமையும் சே-இடபம். வரைதல்-எழுதுதல். தமிழ் என்றது தேவாரப்பதிகங் களை. தமிழின்செய்யுள் என்பதற்கு இனிய தமிழ்ச்செய்யுளா லமைந்தபதிகம் எனப் பொருள்கொள்க. நாவரையர் என்பது நாவுக் கரசு என்பதன் பரியாயம். இவரை வாகீசர் என்பர் வடநூலார்.

---

சுந்தரமூர்த்திநாயனார்.

தாதுகொண்டமலர்ச்சுரியற்பரவையென்பா
 டனத்துணைமேன்மயற்குளிரின்றளர்வுதீர
வேதுகொண்டுவிழையுநெறிவிரும்பிமாலும்
 விரிஞ்சனுமுன்றேடராதவெளியையாரும்
யாதுகொண்டேறிவரிதாயெங்குமான
 விரும்பொருளைநெருங்குமிருளிரவின்மீளத்
தூதுகொண்டார்தமையெமையாட்கொள்வீரென்று
 சொல்லியவர்பதம்புல்லித்தொழுதல்செய்வாம்.

இ-ள். காமமயக்கமாகிய குளிரினால் தமக்குண்டான தளர்ச்சி நீங்கும்படி மகரந்தத்தைக்கொண்ட பூமாலையைத்தரித்த கூந்தலை யுடைய பரவையென்பவளுடைய இருதனத்தின்மேல் வேது கொண்டு கலவிசெய்யும் நெறியை இச்சித்து, திருமாலும், பிரம தேவனும் முற்காலத்தில் தொடரவொண்ணாத ஒளியுருவனும், எல் லாரும் எதைக்கொண்டும் அறிதற் கருமையாய் எவ்விடத்தும் வியா பித்திருக்கிற பெரும்பொருளும் ஆகிய சிவபெருமானை மிகுந்த

இருளையுடைய இராக்காலத்தில் அவளிடத்திற்போய் மீண்டுவந்து, மீட்டும் போம்படித் தூதுகொண்டவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திநாயனாரைக்குறித்து, எம்மை ஆட்கொள்ளக்கடவீரென்று சொல்லி அவருடைய திருவடியையடைந்து வணங்குவோம் யாம். எ-று. (கஉ)

சுரியல்-பெண்மயிர். துணை-இரண்டு. வெளி-ஒளி. இருளினும் வெளியினும் என்புழி, வெளி ஒளியெனப் பொருள்படுதல் காண்க. வெளி சிதாகாயரூபி எனினும் அமையும். "பரவைதன் புலவிதீர்ப் பான் கழுதுகண் படுக்கும்பானு ளிரவினிற் றூதுகொண்டோன்" என ஆன்றோர் கூறுதற்கேற்ப இவரும் "நெருங்குமிரு ளிரவின் மேவத் தூதுகொண்டார்" என்றார். மாலும் விரிஞ்சனும் முன் தொடராத என்றது அவ்விருவர் மாறுபாட்டை நீக்குதற்கு நெருப்புப்பொருப்பாய் நிமிர்ந்த வரலாற்றைக் குறித்தது. தீர, வேது கொண்டு, விரும்பி, தூதுகொண்டார் என இயையும். விழைதல்-கலவி செய்தல். (புணர்தல்.) வேதுகொள்ளல் ஒற்றடங்கொள்ளல். என்பாள் செயப்பாட்டு வினைப்பெயர். இறைவனைத் தூதுகொண்டார்க்கு எம்போலியரை ஆட்கோடல்சால எளிதாமென உட்கொண்டு, வெளியைபொருளைத் தூதுகொண்டார் தமை எமையாட்கொள்வீ ரென்றுசொல்லி யவர்பதம் புல்லித்தொழுதல் செய்வாம் என்றார்.

வெளியை, பொருளை என்னும் இரண்டனுருபுகள் தூது கொண்டார் என்னும் வினைகொண்டன. எம்மை என்னும் இரண்டனுருபு ஆட்கொள்வீர் என்னும் வினைகொண்டது.

---

மாணிக்கவாசகசுவாமிகள்.

செழியர்குலபதிகொடுத்தமாடுகொண்டு
  சென்றுதிருப்பெருந்துறையிற்செறிந்தசம்புப்
பழிவிரவுபரித்திரள்கொண்டணைந்துமாறன்
  பணித்தவிடர்க்கிரங்கியருள்பாடிப்போற்றி
வழியமுதகிரணநிலாமகுடமீதே
  மதுரையமர்பரம்பரனைவந்திக்காகச்
சுழிபெருகுபுனற்றரங்கவைகைவாய்மண்
  சுமப்பித்தார்பதந்தலைமேற்சுமத்தல்செய்வாம்.

இ-ள். பாண்டியர் குலத்திற்பிறந்த அரிமர்த்தநன் என்னும் அரசன் குதிரை கொள்ளக்கொடுத்த பொன்னைக்கொண்டுபோய்த் திருப்பெருந்துறையில் யிருந்த பழிக்கிடமாகிய நரிப்பரிகளின் கூட்டத்தைக் கொண்டுவந்து பாண்டியன் தண்டித்ததனாலுண்டான துன்பத்துக் கிரங்கித் திருவருளைப்பாடி வணங்கி வந்தியாகிய செம்மனச்செல்வியென்னும் பிட்டுவாணிச்சியின்பொருட்டு வழிந்தோடுகின்ற அமிர்தகிரணங்களையுடைய பிறைச்சந்திரனையணிந்த சடாமகுடத்தின்மீது மதுரையில் எழுந்தருளிய சிவபெருமானாகிய ஸ்ரீசோக்கலிங்கப்பெருமானைச் சுழிகள்யிருந்த நீரையும் அலைகளையும் உடைய வைகையாற்றங்கரையில் மண்சுமக்கச் செய்தவராகிய ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகளுடைய திருவடியை எமது சிரத்தின் மீது தாங்குவோம் யாம். எ-று. (கந)

செழியர்-பாண்டியர். குலம்-வமிசம். பதி-அரசன். மாடு-பொன். சம்பு-நரி. வந்தி-மலடி. தாங்கம்-அலை. சென்று, அணைந்து, இரங்கி, பாடி, போற்றி, சுமப்பித்தார். என வினைமுடிபு செய்க. பரம்பரனை என்னும் இரண்டனுருபு சுமப்பித்தார் என்னும் வினை கொண்டது. "அக்கடுவிடத்தை யரனுக் கருள்வதென்றே மைக் கடலில் வைகவொழிவையை வளநாடு" என்னும் செய்யுளில் சிவபெருமானுக்கு நஞ்சளித்த கொடுமையைப் பொறாது கடலை வெறுத்து அதனோடு சங்கமம்செய்தலை யொழிந்த வைகைநதிபோல, வழியமுதகிரண நிலாமகுடமீதே மதுரையமர் பரம்பரனை மண் சுமப்பித்தாரை வெறுத்துக்கோடல். தமக்குக் கடமையாயிருக்க (அவரது) பதந் தலைமேற் சுமத்தல்செய்வாம் என்றதனால், இந் நூலாசிரியர்க்கு இறைவன் மண்சுமந்தமை உவப்புப்போலும். இறைவன் மண்சுமந்தமையால் யாம் பதம் சுமப்போம் என்றாராயிற்று.

---

## சண்டேசுரநாயனார்.

மனுதிகளுக்கெட்டாதபரமானந்த
வாழ்வினையங்கோரிலிங்கமணலாற்கூப்பித்
தனுதிதயந்தனினின்றுந்தாபித்தான்பா
றழைத்தவன்பாலாட்டவந்துதடுக்கத்தாதை
யெனுதவன்றனிருபதமுமழுவாற்றுண்டித்
திகழ்ந்தவனைப்பரபதத்துளிருத்தித்தானும்
பினுகியருளடைந்தவீறற்சண்டேசன்றாள்
பிரசமலரிறைத்திறைஞ்சிப்பரகவாமே.

இ-ள். அவ்விடத்து மணலால் ஒருலிங்கவடிவத்தைச் செய்து மனமுதலிய மூக்கரணங்கட்கும் எட்டாத மேலான இன்பவாழ்வாகிய சிவபெருமானைத் தம்து இருதயத்தினின்றும் அந்த லிங்கத்தில் தாபித்துத் தமது மிக்க அன்பினால் பசுவின்பாலைக்கொண்டு அபிஷேகஞ்செய்யக்கண்ட தந்தையானவர்வந்து தடுக்க, அவரைத் தந்தையென்று அன்புபாராட்டாமல் அவருடைய இரண்டு பாதங்களையும் மழுவாயுதத்தால் வெட்டி வைது அவரை மேலான் சிவபதத்தில் இருத்தித் தானும் சிவபிரானது திருவருளையடைந்த வெற்றியையுடைய சண்டேசுரநாயனாரது திருவடியைத் தேன் பொருந்திய மலர்களைத்தூவி வணங்கிப்புகழ்வோம் யாம். எ-று. ()

மனாதிகள்-மன்முதலியவைகள். அவை மனம், வாக்கு, காயம் என்னும் மூக்கரணங்கள். இவைகட்கு எட்டாமையாவது மனத்துக்கு நினைக்கலாகாமையும், வாக்குக்கு வாழ்த்தலாகாமையும், காயத்துக்கு வணங்கலாகாமையுமாம். பரமாநந்தம்-பேரின்பம். அங்கு என்றது-ஆனிரைமேய்த்த விடத்தை. கூப்புதல்-குவித்தல். "தனாதி தயந் தனினின்றுந் தாபித்து." என்றதனால் இறைவன் இவரது இதயத்தில் இடையறாமற் குடிகொண்டிருத்தல் பெறப்பட்டது. ஆனகரச் சாரியைபெற்று ஆன் என நின்றது. மழு ஓர் ஆயுதவிசேடம். பரபதம்-மேலானபதவி. பினாகம் என்னும் வில்லையுடையராதலால், இறைவனைப் பினாகியென்றார். தாதை யிருதாளைத் துண்டித்திகழ்தல் தலையாய தீமையேயாயினும் அது சிவலிங்கவாராதன பங்கத்தைப் பங்கப்படுத்தின பெரிதாகிய சிவபுண்ணியமாதலால், அத் தாதையைப் பரபதத்துயிருத்தித் தாமும் இறைவனருள் அடைதற் குரியராயினர் என்க. கூப்பி, வாழ்வினை, இதயந் தனினின்றுந் தாபித்து என இயையும். பிரசமலர் என்றது பேரரும்புகளை. இவற்றைப் போது எனவும் மொட்டு எனவுங் கூறுவர். "மொட்டறு மலர் பறித்திறைஞ்சி" என்றார் திருவாதவூரடிகளும்.

---

மெய்கண்டதேவநாயனார்.

அல்லாதபரசமயவலகைத்தேர்விண்
டகலவகல்புனற்பெண்ணையயல்சூழ்வெண்ணெய்ப்
போல்லாதவியமுகத்துப்புத்தேடன்பாற்
புனிதசிவாகமப்பொருண்மைபொருந்தவாய்ந்து

நில்லாதநிலையிதுமற்றென்றுமொன்றாய்
நிற்குநிலையிதுவெனமெய்ந்நெறிதேர்ந்தியாரும்
வெல்லாதசிவஞானபோதஞ்சொன்ன
மெய்கண்டான்சரணமுடிமீதுகொள்வாம்.

இ-ள். சைவசமய மல்லாத பிறசமயங்களாகிய கானற்சலமா னது நீங்க அகன்ற நீரையுடைய பெண்ணைநதியானது பக்கத்தில் சூழப்பெற்ற திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளி யிருக்கின்ற யானைமுகத்தையுடைய பொல்லாப்பிள்ளையாரிடத்தில் வழிபட்டுப் பரிசுத்தமாகிய சிவாகமங்களின் அர்த்தங்களைப் பொருத்தமாக வாராய்ந்து, நில்லாத நிலையிது அவ்வாறன்றி எக்காலத்தும் ஒருபடி யாய் நிற்கும் நிலையிது என்று உண்மைமார்க்கத்தைத் தெளிந்துணர் ந்து, எவ்வகைப்பட்டாராலும் வெல்லவொண்ணாத சிவஞானபோதம் என்னும் வீட்டுநூலைத் திருவாய்மலர்ந் தருளிச்செய்த **மெய்கண்ட தேவநாயனாருடைய** திருவடிகளை எமது சிரத்தின்மேற் றரித்துக் கொள்வோம் யாம். எ-று. (கரு)

அகல, ஆய்ந்து, தேர்ந்து, சொன்ன, மெய்கண்டான் சரணம் முடிமீது கொள்வாம் என வினைமுடித்துக்கொள்க. அல்லாத-சைவ சமயமல்லாத. பரசமயம்-வேறுசமயங்கள். அவை பௌத்தம், ஜைநம் முதலியவைகள். கானற்சலம், பேய்களுக்கு இரதமாதலால் அதனை அலகைத் தேர் என்றார். அலகை-பேய். தேர்-இரதம். "பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதிப் பேய்த்தேர் முகக்குறும் பேதை குணமாகாமே" என்றார் திருவாதவூரடிகள் "அலகைத்தேரி னலமருகாலின் உலகப்பொய்வாழ்க்கை யுடலையோம்பற்க" என்றார் திருவெண்காட்டடிகள். இதனை வடநூலார் பசாசரதம் என்பர். வெண்ணெய்-திருவெண்ணெய் நல்லூர். இபம்-யானை. புத்தேள்-தேவன். ஆகமம், பதிபசுபாசங்களி னிலக்கணங்களை விரிவாய்க் கூறும் நூல். இது இறைவன் திருவாக்காதலால் புனிதசிவாகமம் என்றார். பொருந்த-சுருதியுக்தி அநுபவங்களுக்கிணங்க. யாரும் வெல்லாத என்றது எச்சமயத்தாராலும் வென்று பூர்வபக்ஷம் செய் யப்படாத என்றபடி. சிவஞானபோதம்-வீட்டுநூல்களுள் முதனூல். இது சைவசித்தாந்தநூல்களுள் ஒன்று. சிவாகமப் பொருண்மை பொருந்தவாய்ந்து மெய்ந்நெறி தேர்ந்தோராதலால் இவர்க்கு **மெய் கண்டார்** என்னுஞ் சிறப்புத்திருநாமஞ் சூட்டலாயிற்று.

---

## திருந்தொண்டர்.

முன்னடையவரியசிவமுத்திபெற்றோர்
முதுலகிலதுவிரும்பிமுயலாநின்றோர்
பின்னடையவருமவர்கண்முதலாயுள்ள
பிள்ளையிளவெள்ளைமதிபிறங்குவேணி
மின்னடையுமணிமௌலிவேதகீதன்
வெண்ணீறுங்கண்டிகையுமெய்விடாமற்
றன்னடைநன்னெறிதம்மையடைந்துளார்க்குந்
தருந்தொண்டர்பெருந்தொண்டுதலைமேற்கொள்வாம்.

இ-ள். அடைதற்கரிய சிவமுத்தியை முன்னே யடைந்தவர்களும், பழமையாகிய இவ்வுலகத்தில் அச் சிவமுத்தியையடைய விரும்பி இப்போது முயல்கின்றவர்களும், அதனை இனி அடைய வருவோர்களும் முதலாகவுள்ளவர்களும், இளமைபொருந்திய வெண்ணிறமுள்ள பிறைச்சந்திரன் பிரகாசிக்கின்ற சடாடவியாகிய மின்னற்கொடிகளாற் செய்யப்பட்ட அழகிய மகுடத்தையுடையவரும், வேதகீதத்தை யுடையவரும் ஆகிய சிவபிரானது திருவெண்ணீறும் உருத்திராக்க மாலிகையும் திருமேனியை நீங்காதிருத்தலாகத் தாமடைந்துள்ள நன்னெறியைத் தம்மைவந்தடுத்தவர்களுக்கும் அருள் செய்கின்றவர்களும் ஆகிய திருந்தொண்டரது பெருமைபொருந்திய திருத்தொண்டினை யாம் சிரமேற்கொள்வோம். எ-று. (௧௯)

பிறங்குதல்-விளங்குதல். வேணி-சடை. மௌலி-மகுடம். வேதகீதன்-வேதமாகிய திருப்பாட்டையுடையவன்; வேதமாகிய திருப்பாட்டினால் புகழப்பட்டவன். கண்டிகை-உருத்திராக்கம். முதலாயுள்ள தொண்டர் என வியையும். தொண்டர்க்குத் தொண்டின்மேல் விருப்பமாதலால், யாமும் அவர் திருவுளத்துக்கு கப்பாகத்தொண்டு செய்தலே எமக்குய்யு நெறியென்பார், தொண்டர்பெருந் தொண்டு தலைமேற்கொள்வாம் என்றார். சிவசின்னங்கள் பலவற்றுள்ளும் சிறந்தமைபற்றி வெண்ணீறுங் கண்டிகையும் என்றாராயினும் மற்றைச் சிவசின்னங்களுங் கொள்ளப்படும்.

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம்-௧௯.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சேதுபுராணவசநம்.

## நைமிசாரணியச்சிறப்பு.

நைமிசம் அரணியம்-நைமிசாரணியம். இது ஒரு சிறந்த வநம். முற்காலத்தில், மரீசி, அத்திரி, பிருகு, வசிட்டர், கிறது, அங்கீரசன் என்று சொல்லப்பட்ட இவர்களுடைய வமிசத்தில் பிறந்தவர்களாகிய ஆறுவகையினரும், தாம் நிச்சலமாயிருந்து தவம்செய்தற்குத்தகுந்த இடத்தைக் காட்டவேண்டுமென்று பிரமதேவனைப் பிரார்த்திக்க, அவர், அவர்களுடைய பிரார்த்தனைக்கு மனமிரங்கி, ஒரு மநோமய சக்கரத்தைச் சிருஷ்டித்து, அதனை உருட்டிவிட்டு, அவர்களை நோக்கி, நீங்கள் இந்தச் சக்கரத்தின்பின்னே தொடர்ந்து செல்லுங்கள், இது எவ்விடத்தில் நிற்குமோ அவ்விடம் உங்களுக்குத் தவம்செய்யத்தகுந்த இடமாகும் என்று நியமித்தார். அவ்வாறே அவர்கள் அந்தச் சக்கரத்தைப் பின்தொடர்ந்து போகும்போது, அது நெடுந்தூரம் வரைக்கும் உருண்டோடி, அதன்மேலுள்ள இருப்புக்கட்டானது கழலவே, தடைபட்டு நின்றுவிட்டது, சக்கரத்துக்கு நேமியென்னும் பெயர் உண்டாதலால் அந்த நேமிநின்ற இடம் நைமிசம் என்றும், அவ்விடம் வநமாயிருத்தலால் நைமிசாரணியம் என்றும் சொல்லப்படும், இது புராணப்பிரசித்தமான அரணியம். இதில் அநேக இருடிகள் நெடுங்காலமிருந்து தவஞ்செய்தலால் இதனை மகாபுண்ணியக்ஷேத்திரமென்று அறிஞர்கள் கொண்டாடுவார்கள். இவ்வாறன்றி, பிரமதேவன் தன்கையிலுள்ள தருப்பைப்புல்லினால் ஒருவளையம் உண்டாக்கி அதனை

யுருட்டிவிட, அது ஓடிநின்ற இடமே நைமிசாரணியம் என்று சொல்லுவதும் உண்டு. இந்தவேறுபாடு புராணங்களில் காணப்படுகின்றது. இந்தநைமிசாரணியமானது, நான்குமுகங்களையுடைய பிரமதேவர்கள் ஒருகோடிபேர் பிறந்ததையும் இறந்ததையும் கண்ட பெரிய தபோதநர்களுக்கு உறைவிடமாயுள்ளது. இந்தத் தபோதநர்களுடைய தொகை, திருப்பாற்கடல்கடைந்த காலத்தில் அதிலுண்டான அமிர்தத்தை நாள்தோறும் புசித்து வாழ்வோராகிய தேவர்களுடைய தொகையினும் மிக்கதாயிருக்கும். குறைந்ததொகையுள்ள அந்தத் தேவர்களுக்கு இடமாயிருப்பதாகிய தேவலோகத்திலும், அதிகதொகையுள்ள இவ்விருடிகளுக்கு இடமாயிருப்பதாகிய இந்த நைமிசாரணியம் சிறந்ததென்பதைச் சொல்லவும் வேண்டுமோ; ஐம்பெருந்துன்பங்களையுடைய பிறப்புக்கு அஞ்சித் தன்னிடத்துவந்து அடைந்தவர்களை, சூரியன் உதித்துப் பிரகாசிக்கிற பகற்காலமும் சூரியன் அஸ்தமித்து மறைந்துபோகிற இராக்காலமும் என்று சொல்லப்பட்ட இரண்டும் இல்லாததாகிய அகண்ட சிற்பரம்பொருளாகிய சிவத்துடன் சேர்க்கின்ற செய்கையால் இந்த நைமிசாரணியம் அளவில்லாத கற்பகாலங்களைக் கடந்துள்ளது. யானைக்கூட்டம் முதலாகிய பெரியமிருகங்களின் சத்தத்தையும், பல துறைகளையுடைய காறுகள் அலைகளோடு தாவியெழுகின்ற பெரிய நீர்ப்பெருக்கின் சத்தத்தையும், நெருங்கிய மரங்களின் மேல் தவழ்கின்ற மேகக்கூட்டத்தின் சத்தத்தையும், இந்த நைமிசாரணியமானது தன்னிடத்தில் நீங்கா திருக்கிற வேதமுழக்கத்தைக்கொண்டு அடக்குகின்ற பெருமையையுடையது.

மேன்மேலும்பெருகுகின்றகாமம்வெகுளிமயக்கம்என்று சொல்லப்பட்ட முக்குற்றங்களையும், இறப்புப்பிறப்பு என்று சொல்லப்பட்ட இரண்டினையும், தன்னிடத்தில் வந்தடைந்தவர்களுக்குக் கொடாத உறுதிப்பாட்டினை யுடையதாதலால், இந்தநைமிசாரணியமானது எல்லாவுலகத்தினரோடும் போர்

செய்கின்ற மன்மதனும் யமனும் தரிசநஞ்செய் தறியாதது. உவர்ச்சுவையுள்ள கடல்வற்றினாலும், மேகங்கள் மழைபெய்யாமல் வறுமையடைந்தாலும் தான் வறுமையடையாமல் எல்லாவளங்களையும் பூர்ணமாகப் பெற்றிருக்கும். அன்றியும் காமமுதலிய குற்றங்களில்லாத சிறந்த மாதவர்களுடைய நித்திய நைமித்திகாதிகளுக்கு ஒருகுறைவு நேரிடாதவண்ணம் நீர்வளமுதலிய எல்லாவளங்களாலும் ஒப்பற்ற ஆதரவாயிருக்கும். ஆதலால் இந்த நைமிசாரண்யமானது இந்தப் பூமியிலுள்ளார்க்குப் பெருமைபொருந்திய ஸ்வர்க்கத்தை நிகர்த்திருக்கிறது. தேனை ஆராய்கின்ற வண்டுக்கூட்டங்களும், கிளிக்கூட்டங்களும், குயிற்கூட்டங்களும், தபோதநர்கள் தங்குகிற சாலைகளைச்சூழ்ந்து ஒலிக்கும் ஒலியானது, அழகுக்குப் பிறப்பிடமான மன்மதனுடைய கரும்பு வில்லுக்கு நாணாகியும், அவனுக்கு வாகநமாகியும், திருச்சின்னமாகியும் அலைந்த எங்கள் பாவத்தையொழித்து எங்களை ஆண்டருளவேண்டுமென்று தோத்திரம் பண்ணுவதை நிகர்த்திருக்கும். அவ்விடத்துள்ள தபோதநர்கள் தமக்கெதிரே வந்திருக்கிற பிரமதேவன் முதலான தேவர்களுக்கு, அவர்கள் முன்னோர்கள் பெருமையுடனே முற்காலத்தி லிருந்ததையும், அவர்கள் நடந்த நல்லநடையையும் சொல்லுவதைக்கேட்டு, அச்சொற்களைப் பாடம்செய்துகொண்டு. அவ்வாறாகவே பேசுகின்ற நாகணவாய்ப் புட்களும் இறந்தகாலத்தை அறிந் திருப்பது போன்றிருக்கும். நீட்சியையுடைய பாம்புகள் பகையில்லாமல் மயில்களோடு கூடி ஆடிக்கொண்டே, வேதசாஸ்திரங்களையறிந்த தபோதநர்களுடைய சாலைகளுக் கெதிரில்வருதல், அந்தத் தபோதநர் தாம்செய்யும் விரதரூபமாகிய தவத்தினால் ஐம்புலப்பகையை யொழித்துவிட்டார்கள் என்னும்பொருளை எதிரேநின்று காட்டுஞ் செய்கையை நிகர்த்திருக்கும். அந்த நைமிசாரணியத்தில் சஞ்சரிக்கிற கரிய எருமைக்கடாக்களின் கூட்டங்கள் நமக்கிது தகுந்த காரியமல்லவென்று நினைக்காமல் அங்குள்ள அருமையாகிய தபோதநர்மீது, அநேகந்தரம்

பண்டையெடுத்துவந்து அவர்களுக்குத் தோற்றோடின காலர்கள் விட்டுப்போன பலவாகனங்களை நிகர்த்திருக்கும். வண்டுகள் வேதவொலிபோலச் சூழ்ந்தொலிக்க, அவ்விடத்துள்ள முனிப் புதல்வர்கள், நெருப்புப்போலச் சிவந்து மொட்டு விரிந்து அழகாயிருக்கிற செங்காந்தட் பூங்கொத்தின்மேல், பலாச்சுளைத்தேனை நெய்யாகக்கொண்டு, நீண்ட மாவிலைச் சுருளினால் வார்த்து யாகஞ்செய்து விளையாடுகிற இடங்களை எங்கும் விளங்கிக்கொண்டிருக்கும். ஐம்புலவாசியை வென்ற தபோதநர் வசிக்கிற பர்ணசாலைகளின்மேல் படர்ந்து அசையாநின்ற மெல்லியகொடிகள் அவர்கள் செய்கிற யாகாக்கினியின் சிகையினாலும், அவர்களுடைய கருணைநோக்கத்தாலும், பலமுறை வாடுவதும் தளிர்ப்பதுமாயிருக்கும்.

துதிக்கையினையுடைய யானையும், சிங்கமுமாகிய இவைகள், தபோதநர்வாழு மிடங்கள்தோறும், தமக்கு அநாதியாயுள்ள பகைநீங்கி ஒருதுறையில் நீர்பருகும். இதை நோக்குமிடத்தில், உபசாந்தியடைந்த மனத்தையுடைய மேலோர் கொண்ட கோட்பாட்டை மூன்றுலகத்தாரும் கொள்வார்கள் என்கிற அறிஞர்வார்த்தை விளங்காநிற்கும். அங்குள்ள முனிவர்கள் பலவகையாகிய பூஞ்செடிகளையும் கொடிகளையும் வளர்ப்பதனோடு முல்லைக்கொடிகளுக்கும் நீர்வார்த்து வளர்க்குஞ்செய்கையை நோக்குமிடத்து, பகைநட்புக்களைப் பாராட்டாத சமநிலையானது அவர்மனத்திற் பதிந்திருப்பதை வெளிப்படுத்துவதுபோ லிருக்கும். அந்தவனத்திலுள்ள பிரமசாரிகள் கூட்டமோ, இல்லறத்தார் கூட்டமோ, வானப்பிரஸ்தர்களுடைய கூட்டமோ, முற்றத்துறந்த சந்நியாசிகள் கூட்டமோ, யாதோ பெரிதென்று கண்டோர்சொல்லும்படி அந்த நைமிசவனம் சிறந்திருக்கும்.

அந்தவனத்தின் ஒருபக்கத்தில் யாகஞ்செய்கிற ஓமகுண்டங்களிருக்கும், மற்றொருபக்கம் யோகீசுவரர்கள் யோகஞ்செய்யுமிடமாயிருக்கும். மற்றொருபக்கம் ஆகமமீ முதலிய நூல்களை ஆராய்கிற இடமாயிருக்கும், மற்றொருபக்கம் யோக

நிஷ்டாபரர் திருவருளோடு இரண்டறக் கலக்கும்படியான இட மாயிருக்கும். அழகான தண்டகாரணியம், பதரிகாசிரமம் முதலான இடங்களிலிருந்து, தம்முடைய மனைவி மக்களோடு அரிய தபோதநராகிய உறவினர், கூட்டங் கூட்டமாய் விருந் தாகவந்து மீண்டுபோகின்றதனு லுண்டாகிற ஓசையே நாள் தோறும் அவ்வனத்தில் மிகுந்திருக்கும். அழகாகிய அந்த நைமிசவனத்தில் வாழ்கின்ற பெருந்தவத்தினையுடைய முனிவர் கள், ஆன்மாவில் மறைந்திருக்கும் ஆணவமலத்தைப்போல மண்ணில் மறைந்திருக்கிறதென்று கிடைத்தற்கரிய கிழங்கு களைத் தோண்டியெடுப்பதும், துன்பஞ்செய்யும் மனத்தைப் போலக் கிளைத்திருக்கிறதென்று செழுமையாகிய சமித்தை யொடிப்பதும், ஊழ்வினை முதிர்ந்து கனிந்தாற்போல முதிர் ந்து கனிந்திருக்கின்றனவென்று அருமையான கனிகளைப் பறிப்பதுமா யிருப்பார்கள். நன்மை தீமைகளையும், பகை உறவுகளையும், இன்பத்துன்பங்களையும் நாடாத முனிவர்கள், தேவர்களும் சென்று காண்பதற்கரிய சிவபிரானை, உயர்ந்த திருவருட் கதியானது உணர்த்த, தம்மனத்திற் பொருந்திய அன்போடு கண்டு, அத்திருவருளோடு இரண்டறக் கலந்து, விளங்காநின்ற சித்திரப்பாவைபோல எப்பொழுதும் அசை வற் றிருப்பார்களாகையால், நைமிசவனத்தில் முனிவர்கள் இல்லையோவென்று கண்டோர் எண்ணவும் சொல்லவும் தகுதியானதா யிருக்கும். மனமொழி மெய்கள் என்கிற யா வும் சிவபிரானுடைய உடைமையென்று அம் முனிவ ருணர்ந் திருந்தாலும், சாருவாகன் முதலானோ ருடைய மதங்களைச் சிலர் எடுத்துச்சொல்ல, வேறு சிலர்வந்து அந்த மதங்களை மறுக்கும் நூல்களை யெடுத்துச் சொல்ல, கண் டோர்களுக்கு இந்த நைமிசவனத்தில், வைதிகர்கள் சைவர் கள் என்பவர்களையன்றி, எல்லா மதத்தர்களும் தங்கியிருப் பார்களோ என்கிற சந்தேகம் உண்டாகும். பெருந் தவத் தோராகிய முனிவர் நீராடி அந்த நீர் புலரத் தடாகக்கரை களில் நிற்கையில், அவருடையசடைகளின் நுனியிலிருந்து

வடிந்து வீழ்கின்ற நீர்த்துளிகளை நோக்குமிடத்தில் யோகிகள் மூலாதாரத்தில் மூண்டெரிகின்ற மூலாக்கினியைத் தமது முயற்சியால் மேலெழுப்பி, இடை பிங்கலைகளை யடைத்து, சுழுமுனையைத்திறந்தபோது, சந்திரமண்டலத்தி லிருந்து அமுததாரைகள் சிந்துவதுபோலிருக்கும். முறுக்கவிழ்ந்து விரிந்த செந்தாமரை மலர்போலச் செந்நிறமா யெரிகின்ற யாகாக்கினிக்கெதிரில் நிலைபெற்றிருக்கிற மாதவர்களை நோக்குமிடத்தில், அந்தக்காட்சி செந்தாமரைமலர்மேல் வீற்றிருக்கின்ற எண்கண்ணராகிப் பல பிரமதேவர்களுடைய காட்சியை நிகர்த்திருக்கும். மிகவும் அருமையாகிய தவத்தை யல்லது வேறொன்றை விரும்பாத முனிவர்களும் விரும்பி வாழ்கின்ற அந்த நைமிசாரணியத்தின் பெருமையை யெடுத்துப்பேச வல்லவர் யாருளர், ஒருவருமில்லை. அப்படிப்பட்ட பெருமையுள்ள புண்ணியக்ஷேத்திரமாகிய அந்த நைமிசாரணியத்தில், ஸ்ரீவேதவியாசபகவானுடைய மாணாக்கராகிய சூதபுராணிகர், சௌனகாதிகளாகிய இருபத்தாறாயிர முனிவர்களுக்கு அநேகமான தலமான்மியம், மூர்த்திமான்மியம், தீர்த்தமான்மியம் முதலியவற்றை யெடுத்துச் சொல்வது வழக்கமாதலால் ஒருநாள் அந்தச் சௌனகாதிமுனிவர்கள் சூதபுராணிகரை வணங்கி, சுவாமி, தேவரீர் இதுவரையில் எங்களுக்குச் சொல்லிக்கொண்டுவந்த புண்ணியகதைகளுக்கு ஒரு எல்லையில்லை, அவற்றைக்கேட்டு மனங்களித்த எங்களுக்கு ஸ்ரீரகுநாதனால் கட்டப்பட்ட திருவணையாகிய சேதுவின் மகிமையையும், அங்குள்ள தீர்த்தங்களின் மகிமையையும், அங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீராமநாதனாகிய மூர்த்தியின் மகிமையையும் கேட்டுக் களிக்கவேண்டுமென்கிற ஆசை மிகுந்திருப்பதனால் அந்தப் புண்ணியக்ஷேத்திரமாகிய சேதுவின் மான்மியத்தை அடியோங்களுக்குத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, சூதமுனிவர் அவர்களுடைய வேண்டுகோளுக்கிரங்கி, அவர்களைநோக்கி, நான் இந்தக்கதையை இதற்கு முன்னே ஒருவருக்கும் சொல்லவில்லை, இப்பொழுது நீங்கள்

மிகவும் ஆசையோடு கேட்டுக்கொள்ளுவதனால் உங்களுக்குச் சொல்லுகிறேன், சாவதாநசித்தத்தை யுடையவர்களாய்க் கேளுங்கள் என்று சொல்லி, தமது ஆசிரியராகிய ஸ்ரீவேத வியாசபகவானுடைய திருவடிகளைத் தியானித்துக்கொண்டு சொல்லத் தொடங்கினார்.

---

## திருநாட்டுச்சிறப்பு.

தலைமைபெற்ற தமிழ்மொழிக்கெல்லை யிரண்டிலொன்று தன்னிடத்ததாக நிலைபெற்றுநின்ற வேங்கடமலைக்குத் தென்பாலில், உலகத்திற் கபாயநீக்க இறைவன் ஆணையால் வந்த அகத்தியர் வீற்றிருந்தருளிய பொதியமலையினின்றுந் தோன்றின பொருநையாறென்னுந் தாமிரபருணிநதியால் மிகு வளம்பெற்ற திருப்பாண்டிநாட்டிலே, திருவருள் மிகுதியால் அறுபத்துநான்கு திருவிளையாடல்களைச் செய்தருளிய நினைத்தற்கரிய பரம்பரனை, அங்கயற்கணம்மையொடு நெருங்கிச்சூழ்ந்து, மலரினையிட்டு வழிபட்டுத் தேவர்கள் இடம்பெறாது புறத்தேநிற்க, மாதர்கள் ஆடவருடன் தொழுத்தக்கதும், ஞானசொரூபியாகிய உமாதேவியை மூன்றுதனங்களையுடைய தடாதகைப்பிராட்டியாராகத் தந்து, அளவிடற்கரிய ஆனந்தவடிவாகிய சிவபிரான் பாண்டியனாகி முடிதரித்து அரசினை யாண்டுவரச்செய்து, சங்கப்புலவரெதிர்நின்று சந்தேகமொழிந்து நிற்கத்தந்ததும், என்னாலும் பிறராலும் அளவிடுதற்கரிய புகழினையுடையதுமாகிய மதுரையும்; அற்பமாகிய சமணசமயத்தவர் ஏவலால் பாண்டியர் பெருமானாகிய கூன்பாண்டியன்மீது படர்ந்த கொடியசுரப்பிணி தணியத் திருஞானசம்பந்த சுவாமிகள் எழுந்தருளிய திருமடம்விளங்குங் காட்சியையுடையதும், அலையாற் பொன்னைக்கொழித்து வரும் வைகையாற்றின் வடபாகத்துள்ளதுமாகிய திரு ஆப்பனூரும்; உமாதேவியின் திருமுலைப் பாலருந்தியவராகிய ஆளுடைய பிள்ளையார் பொய்யாகிய சமணமதத்தாரோடு வாது

குறித்தெழுதிவிட்ட திருப்பாசுரமெதிரேறி வரப்பெற்றதும், மாதர்கள் ஆடவருடன் நீர்மூழ்கி விளையாட் டயர்வதுமாகிய திருவேடகமும்; தாமரைத்தடாகத்தும், சோலையிடத்தும், பளிக்கறை நெருங்கிய இடங்களிலும், மாதரும் ஆடவரும் போல, மதவெள்ளம்பெருக இளம்பிடிகளும் களிறுகளும் விளையாடுகின்ற கொடுங்குன்றமும்; முத்தினைச் சொரியும் சங்குகள்தவழ்ந்து திரண்டுமாளிகை முற்றங்களின் எந்தப் பக்கத்தும் மாதர் அடிபெயர்த்துவைக்க இடமில்லாமல் மந்தரமலையாகிய மத்திட்டுக்கடைந்த பெரிய திருப்பாற்கடல் போலத் தாமரைத்தடாகங்கள்சூழ்ந்த புத்தூரும்; பிறப்பிறப்பில்லாதவனும், நினைப்புமறப்பில்லாதவனும், வேறொன்றோடும் கூடுதலுடன் பிரிதலற்றவனும், குணங்குறியற்றவனும், ஆறுமுகப்பிரானையும் ஆனைமுகப் பிரானையும் அளித்தருளினவனும் ஆகிய சிவபரஞ்சுடரைவழிபட்டுத் தேவர்கள் தங்கள்வறுமை நீங்கப்பெற்ற திருவாடானையும்; மனுநிகளுக் கெட்டாததாய் அகண்ட சுடர்ப்பிழம்பாய், பேரின்பமயமாய், யாவராலும் நினைக்க அரிதாகி, அவர் உள்ளம்புகும் லொன்றை திருத்தொண்டர் கூட்டமாகிய வாயிலாற் பெறுவோர் பெற வழங்கும் பெருந்தன்மையால், யாவரும்போற்றும் திருப்புனவாயிலும்; தேவர்கள் உயர்வாகிய மாளிகையாகிய சோபானங்களின் வழியேவந்து கடல்சூழ்ந்த நிலவுலகத்தைச் சேர்ந்து, தந்திமடுவிற்புகுந்து நீராடித் தலையால்வணங்கும் ஞானத்தையுடைய முனிவர் மனத்திருக்கோயிலில் வீற்றிருக்கும் சிவபிரானது திருக்கானப்பேரும்; கோவணமுங் கீளும்பெற்றுத் திருவெண்ணீற்றினிடத் தன்புடையார் கூட்டங் கூட்டமாய், வசிக்கும் மடாலயங்கள் மிகநெருங்கி அளவில்லாத காட்சியைப்பெற்று, செந்தீயி னிறம்விளங்கிய சடைமுடியையுடையார் புகழ்கூறுமொலி தேவர்கள் காதிற்றூக்கப்படும் திருப்பூவணமும்; பருமையாகிய சுழியிலே மிதக்கும் யானையிலத்திற் செல்லப்பாய்ந்து படரும் ஆழமாகிய ஆற்றுச்சுழிவரிசைப் பட, வளையலணிந்த மாதருந்தியிடத்து ரோமவரிசையைக்

காட்டும் கங்கையாறுபுனைந்த சடைமுடியையுடைய இறைவன் வாழுந் திருச்சுழியலும்; தாரகனும் அவனுக்கு முன்னவனும் பெற்றவரங் கெட்டழிய வேலேவிய மயில்வாகனக் கடவுளாகிய இளையபிள்ளையார், வள்ளிநாயகியாரைத் திருமணஞ்செய்வதற்கு முன்பு தெய்வகுஞ்சரியைத் திருமணஞ் செய்துகொண்ட திருப்பரங்குன்றமும்; வானோர் கடல் கடைந்தபொழுது ஆலாலவிடந்தோன்ற வருந்துவதுகண்டு, அதனையுண்டு அவர்களைக் காத்தருளிய மூர்த்தியும், சனகாதி நால்வருக்கும் வேதாகமமுடிவாகிய தத்துவப்பொருளைக் கல்லாலினீழலிலெழுந்தருளி யிருந்து சொல்லாமற் சொன்னவனுமாகிய சிவபெருமான் எழுந்தருளிய திருக்குற்றாலமும் திருக்குறும்பலாவும்; செந்தீயினிறம் படைத்த தேமாங்கனியுடைந்த செந்தேன் மணக்கும் வாழைச்சோலையையுடைய பாண்டிநாட்டணியை விளக்குந் தன்மையதாகி, பிரமனாலும் அளவிடற்கரியதாய், வேயீன்ற முத்தம் ஒளிவிட்டெறிக்கும் திருநெல்வேலிப்பதியும் ஆகிய பதினான்கு திருப்பதிகளையும் தன்னிடத்திற்கொண்ட தமிழ்நாடு உலகிற் சிறந்திருக்கும்.

இந்நாட்டில், தமிழ்ச்சங்கமூன்று மிருந்தன, அன்றியும் எம்மிறைவனே பாண்டியனாய் மகுடஞ்சூட விரும்பினான், தென்றிசையிலுள்ளநாடு தென்னாடாயினும், அழகுடைய நாடென்றும் பொருள்படுதலால் இந்தத் தமிழ்நாட்டையுணர்த்துவதாகிய தென்னாடு என்னுஞ் சொல்லே இந்நாட்டின் வளத்தைத் தெரிவிக்கும். கடல்சூழ்ந்த இவ்வுலகத்தில், எம்மால் புகழப்பட்ட மதுரைமுதலாகிய திருப்பதிகளை யுடையதும், பொருநையாறு சூழ்ந்ததும் ஆகிய தமிழ்நாட்டின் சிறப்பைத் தொகுத்துச் சொல்லினோம், இனி வகுத்துச் சொல்வோம். அஃதெங்ஙனெனின்:—கொடைக்குணம் மீக்கொண்டு தம்மைவிடாதிருப்பதினாலே கைம்மாறெவ்வளவுமெதிர்நோக்காது வரையாது தளிக்கும் வள்ளலைப்போல வெண்மைநிறம் பொருந்திய மேகக்கூட்டங்கள் ஒருங்கு சேர்ந்து, கடலிற்படிந்து, அதிலுள்ள சலத்தையருந்தி, அக்

கடல் வண்ணமாகக்கறுத்து, மீண்டும் ஆகாயவீதியாகவந்து, பூமியிலுள்ள வுயிர்க்கூட்டங்கள் சோர்வடைந்திருப்பதைக் காண்பதுபோல, மின்னலாகிய விளக்கையேந்தி, கோடையரசனை யதட்டிச் சீறி வைவதுபோ லிடிமுழக்கஞ்செய்து, வானவில்லை வளைத்துப் பலவித ஆயுதங்களைப் பிரயோகித்ததை யொப்பத் திசைகளெங்கும்பரவி, தவசிரேஷ்டரான அகத்தியமுனிவ ரிருக்கையெனப் பலராலுந் துதிக்கும் மகிமையினையுடைய பொதிகைமலையாகிய யானையைவளைந்து, போர்க்களத்தில் சுத்தவீரன் விடும் சரமாரியைப்போல நீர்த்தாரைகளைப் பொழிந்தன. அதனால் பெருகியவெள்ளம் அம்மலையிலுள்ள நவமணிகள் முதலிய சகலவிழுப்பொருள்களையும் வாரிக்கொண்டு, அதன்மேலிருக்கும் நெருங்கிய சந்தனச்சோலைகளின் வேர்களைக் கல்லிப்பொலிவுற்று, பொருநைநதியிற்சேர்ந்து, அதிலிடங்கொள்ளாமல் கரைபுரண்டு, பெரிய அணைகளையுமுடைத்து, சமுத்திரத்தை நோக்கிச் செல்லுகையில், வழியிலெதிர்ப்பட்ட மிருகங்களை யுருட்டிக்கொண்டும், செங்காந்தட்புட்பங்களை வேங்கைமரத்தின்மேல் சேர்த்தும், வேங்கைப்புட்பங்களை வெண்காந்தட்கொடிமேல் சேர்த்தும், கொடிச்செடிகளை மரங்களின்மேல் சேர்த்தும், இங்ஙனந் தாறுமாறுகச்செய்து, பெரிய விருட்சங்களை வேருடனே கல்லிச்சாயாமல் அடித்துக்கொண்டுபோவதினால் அவற்றிலுள்ள பறவைகள் ஓடிப்போகாமல் நித்தியப்படி யூடாடிக்கொண்டிருக்கவும், சந்தனமரங்கள் பொதிகைமலைப் பாறைகளில் உராய்ந்துதேய்ந்து வெள்ளத்துடன்கலந்து குழம்பாகிப்பாய அதில்தோயும் மனிதர்களுடைய தேகத்தில் படிந்த சந்தனச்சேறுபோகும்வண்ண மழுந்தத் தேய்த்துக் கழுவிலமே யென்று கரையேறுமல் மீளவும் குளிக்கவும், மலைபடுதிரவியங்களை வரிசைவரிசையாக மாலையைப்போல இருபக்கங்களிலும், ஒதுக்கியும், பலவாய்க்கால்வழியாகவும் பலதிக்கிலும் சென்று வயல்கள்முழுவதிலும் பரவி உழவர்களைப் பூரிக்கச் செய்யும்.

பொருநைநதி குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தலாகிய ஐந்திணைகளின் வழியாகச்சென்று, அவ்வவற்றுள்ள திரவியங்களைக் கிரகித்துச் சமுத்திரத்திற் கலப்பது, குறிஞ்சிநிலப்பெண் பொருநைநதியாகிய கன்னிகையை வருணனுக்கு விவாகஞ்செய்துகொடுப்பதை யொத்திருக்கும்.

இவ்வாறாக வெள்ளம்பாயும் ஆரவாரமும், அதிலுற்பத்தியாகுஞ் சங்கின்கூட்டங்களினுடைய வோசையும், உழவர்கள் கொண்டாட்ட ஓசையும், உழுங் கால்நடைகளுடைய கோலாகலமும், பட்சிகளின் ஓசையும் வலிமைபொருந்திய கடலின் முழக்கத்தை யடக்கியவாம்.

மள்ளர்கள் எருமைக்கடாக்களின்மேல் அழகிய பெரிய நுகத்தடிகளைப்பூட்டி, வைரத்தினாற்செய்த கலப்பைகளைத் தாங்கிச்சென்று, பூமியைப்பிளக்கத் திருமாலெடுத்த வராகாவதாரமும் அதிசயப்படும்படியாக ஏருழும்போது பேர்க்கப்படும் செம்பொற்கட்டிகளையும் சாலின்வழியிற்கிடக்கும் சங்குகளையு மெடுத்தெறிந்து, இனிமையாகிய இராகத்துடன் தேவேந்திரனைப் புகழ்ந்துபாடி, சேறுபழமைப்பட, நாற்றங்காலில் செந்நெல்லைவிதைத்து, அதுமுளைகிளம்பும் பக்குவமறிந்து, தாய்மார் குழந்தைகளுக்குப் பால்வேண்டுங் காலமறிந்தூட்டுவதையும் வேண்டாக்காலந்தெரிந்து நிவர்த்திப்பதையும்போல, வேண்டுங்காலத்தில் நீர்பாய்ச்சியும் வேண்டாக்காலத்தில் நீரை வடித்தும்வர, அப்பயிர் நாளுக்குநாள் சகல மேம்பாடுமுள்ள செல்வக்குழந்தைகள்போல வளர்ந்து, முன்வெண்ணிறமாகிப் பின்பு பச்சென்று தளிர்த்து வருவதைநோக்கி, வாணிபர் முதலைக் கையில்வைத்துக்கொண்டு இலாபம்கிடைக்கும் வழியைத் தேடிச்செல்வதுபோல வேறு கழனிகளில் இந்நாற்றை நட்டு இலாபமடையக்கருதி, நாற்றுகளைப்பறித்து, சத்துருக்களின் முடிகளைப் பாண்டியன் கொணர்ந்து குவிப்பதுபோல அந்நாற்றுமுடிகளை யிடமில்லாமலெங்கும் நிரப்பி, கழனிகளிற் சேடையுழுது, பரம்

படித்து, அண்டைகழித்து, பக்குவப்படுத்த, கடைசியர் பலபல களியாடல்களுடன் அந்நாற்றுகளைக் கழனிகடோறும் வரிசையினொழுங்குபெற நடவுசெய்து, துன்மார்க்கர் மானிடவுருவங்கொண்டு அதேயுருவம் பொருந்திய சன்மார்க்கருடன் கலந்திருந்து அவருக்குத் தீங்கிழைப்பதுபோல, தழைத்தோங்கிவரும் பயிர்களுக்கு விரோதமா யவற்றுடன்கூட அடர்ந்து வளர்ந்து அவற்றின் வளப்பத்தைக் கெடுக்கும் புல், கருநெய்தல், குவளை, தாமரை, அல்லிமுதலிய பல களைகளைத் தலைவரேவலா லுழத்தியர் வெகு கோலாகலத்துடன் களைந்தெறிந்து, பயிர்களைக் காக்கவேண்டிய முறைமைப்படி காத்துவர, அந்தப்பயிர்கள் தமக்குச் சத்துருவாயிருந்த களைகள் நீங்குதலும், ஒருவனைத்தொடர்ந்த பெரும்பாவம் தொலைந்தவுடனே அவன்செய்திருந்த நல்வினையானது அவனுக்குப் பயனைத்தருவதுபோல, பசுமையாகிய சுருள்விரித்து, தாம் கொண்டிருந்த கருவை வெளிப்படுத்தி, கதிர்த் தொகைகளையீன்று, நாளுக்குநாள் விருத்தியடைந்து, சாக்கியர்போலத்தலைநிமிர்ந்து, ஆளுடையபிள்ளையாரோடு வாதுசெய்து தோல்வியடைந்தபிறகு, அவர்கள், பிள்ளையாரை வணங்கும்பொருட்டுத் தலைவளைத்தாற்போல, நெற்பொறையால் தலைசாய்ந்தன, அவை முதிர்ந்து தலைசாய்ந்த பக்குவமறிந்து, மள்ளர்கள் அரிவாள்கொண்டு செந்நெல்லை அரிந்து, அரிபரப்பி, சிவபெருமான் வளைக்காத பல மேருமலைகள்போலப் பலபோர்கள் செய்து, அவைகளை, இந்திரன் மலைகளைச்சிறகரிந்து வீழ்த்தினாற்போல இரண்டுபக்கங்களிலுஞ் சரித்துவீழ்த்தி, கொற்கைவேந்தன் மேகங்களை விலங்கிட்டதுபோலக் கரிய எருமைக்கடாக்களைப் பிணித்து, வளைவித்துத் துவைப்பித்து, வைக்கோலை உதறியெறிந்து, குற்றத்தையும் குணத்தையும் வேறுபிரித்தறியும் விவேகிகள்போலக் காற்றுவரும்போது அவற்றைத் தூற்றி, ஆகாயத்தை அளாவும்படி உயரப்போட்ட நெற்றிரளின் பொலிக்கூட்டங்கள் எவ்விடத்திலும் நெருங்கிநிறைந்தன. பிறகு அவற்றைக் கலைத்தெடுத்து, ஆறிலொரு

பங்கு அரசனுக்குக்கொடுத்து, மற்ற ஐந்துபங்குகளை, தெய்வத்துக்கொரு பங்கும், தென்புலத்தார்க் கொருபங்கும், விருந்தினருக் கொருபங்கும், உறவினருக் கொருபங்கும், தனக்கொரு பங்குமாக உபயோகித்துப் பெருங்குடிகளாய் வாழ்வோருக்கு உறைவிடமாயுள்ள பலவூர்கள் அந்தப் பாண்டி நாட்டிலுண்டு. இப்படிப்பட்ட பாண்டிநாட்டின் பெருஞ்சிறப்பானது ஆயிரநாக்களுள்ள ஆதிசேடன்சொல்ல, ஆயிரங் கைகளுள்ள வாணன் எழுதினாலும், அவர்களுடைய சொல்லுக்கும் எழுத்துக்கும் அடங்காது. ஆதலால் அதை எமது அறிவிற்குப் புலப்பட்டவரைக்கும் ஒருவாறு சுருக்கிச்சொன்னோம். இனி இந்நாட்டில், தேவர்கள் அமுதவுண்டியில்லாமல் பசித்துவந் தடைந்தாலும் அவர்களைத்தாங்கும்படியான செல்வப்பெருக்கினால் உயர்ந்துள்ள சேதுவில், அலைகளையுடைய சமுத்திரநீரால் சூழப்பட்ட கந்தமாதநமலையின் சிறப்பை, சிவபெருமானது திருவருளால் ஒருவாறு சுருக்கிச சொல்லுவோம், கேளுங்கள் சௌநகாதி முனிவர்களேயென்று சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினார்.

---

## கந்தமாதநச்சிறப்பு.

---

அந்தப் பாண்டிநாட்டில், கந்தமாதநம் என்னும் ஒரு மலையுண்டு, அது, அழகிற்சிறந்த ஸ்ரீராமமூர்த்தியானவர், முற்காலத்தில், இராமநாதன் என்னும் பெயருள்ள சிவபெருமானைப் பிரதிஷ்டைசெய்து அருச்சித்து வணங்கின எல்லையாகும். இந்த மலையின்மேல் மழைபொழியவரும் மேகக்கூட்டங்களைக் கலைக்கவரும் வாடைக்காற்றினால் அந்த மேகக்கூட்டங்கள் இந்த மலையைநீங்கிக் குமுறிக்கொண்டு நெடுந்தூரம் போவதை நோக்குமிடத்தில், ஆலகாலவிஷத்தை யுண்டருளின சிவபெருமானது திருவருளால், ஸ்ரீராமமூர்த்திக்கு இராவணசங்காரத்தால் நேரிட்டபாதகம் தொலைந்தோடுவதை நிகர்த்திருக்கும். மேகக்கூட்டங்கள் ஆகாயத்திலெழும்பி, மின்

னலைவிரித்து, இந்தமலையைமூடி இதில் ஓடுங்குவதை நோக்கு மிடத்தில், நடுராத்திரியிற் சஞ்சரிக்கிற யோகினிதேவியின் பரி சாரகர்களாகிய கொள்ளிவாய்ப் பசாசங்களின் கூட்டங்கள் நன்மையைக்கொண்ட வீடுகளின் முற்றங்களில் உலாவுதலை நிகர்த்திருக்கும். இந்த மலையின்மேல் நெருங்கி வளர்ந்திருக்கிற மூங்கில்கள் தூண்களாக, அவற்றின்மேல் கரியமேகங்கள் கவிந் திருக்கிறதை நோக்குமிடத்தில், ஸ்ரீராமமூர்த்தியானவர் முற் காலத்தில், சிவபெருமான் திருமேனியின்மீது வெயில் படா திருக்கும்படி கரிய துகிலினாற்செய்யப்பட்ட கூடாரங்கள் அமைத்திருப்பதை நிகர்த்திருக்கும். ஒளிபொருந்திய மின் னல்களோடுகூடி வெவ்வேறாகப் பற்பல மேகங்கள் பரவித் தோன்றுதலை நோக்குமிடத்தில், பிறவிகள்தோறும் சிவபெரு மானது திருவுருவத்தை வணங்கி வழிபட்ட பல ஸ்ரீராமமூர் த்திகளின் கூட்டத்தை நிகர்த்திருக்கும். இந்த மலையின்மீ துள்ள யானைகளை நோக்கினால், இடித்தல், நீர்த்துளிகளை எவ் விடத்திலும் இறைத்தல், பொடித்தலையுடைய துளிமழை யைச் சொரிந்துலாவுதல், இவையாவுமிருந்தாலும், இதனிடத் தில் மின்னலொன் றில்லாமையால் இது மேகத்தின் சாதி பேதமா யிருக்கலாமென்று அம்மலையடிவாரத்தி லிருப்பவர் பேசிக்கொள்வதற்குப்பொருத்தமாயிருக்கும். பலவகையாய்ப் பெருகிவருகிற நீரில் வெண்பாம்புகள் அகப்பட்டு இந்தமலை யின் கல்முதலியவைகளைப் பற்றிக்கொண்டு தொங்குவதை நோக்கினவர், ஒலிக்கின்ற அருவியாறுகளிற்சில, ஆகாயத்தி லிருந்து கீழேயிறங்காமலிருந்ததற்குக் காரணம் யாதென்று பேசிக்கொள்வார்கள். பலபாம்புகள் அம்மலையின்மேலிருந்து கீழேவிழாமல் கல்முதலியவற்றைப் பற்றிக்கொண்டு தொங்கு வதை நோக்கினால், இந்தமலையின்மேலுள்ள மாதவர்கள் விரித் துலர்த்தின சடைத்திரள்களை நிகர்த்திருக்கும். கடலின்நீரை மொண்டுகொண்டு மேலேறின கரியமேகங்களும், அவற்றோடு கூடவே யேறின யானைகளும் உருண்டுவிழுவதை நோக்கு மிடத்தில், மிகுந்த ஒலியையுடைய அருவியாறுகளில் மூழ்கு

கின்ற மக்களுடைய பாவத்துண்டங்கள் அவர்களைவிட்டுத் தொலைந்து உருண்டுவிழுவதை நிகர்த்திருக்கும். வெள்ளைவஸ்திரத்தை விரித்தாற்போலவும், இந்தமலையானதுபட்டு உரிஞ்சுதலால் ஆகாயத்திலுள்ள பூர்ணசந்திரனது அமிர்ததாரைகள்போலவும், தொண்டர்களுடைய மெய்ஞ்ஞானச் சுடர்த்திரள்போலவும், இந்தமலையின் எல்லாவிடங்களிலும் வற்றாத அருவியாறுகள் விளங்கிக்கொண்டிருக்கும். இந்த மலைக்கு நேராகப் பிரகாசிக்கிற பூர்ணசந்திரனைக் கண்டோர், உண்மையாக இதிலுள்ள நீலநிறக்களங்கமானது இயற்கையன்று, நிறைமதிக்குக் களங்கமுண்டோ, இம்மலையின்மீதுள்ள உயர்ந்தசோலைகளின் பச்சிலைகள் படுதலாலுண்டான பசுமையேயாகுமென்பார்கள். இந்த மலையின்மீதுள்ள மரக்கூட்டங்கள், தம்மீது வாழ்கின்ற மேகங்களை கூந்தலாகவும், வெண்மையாகிய நக்ஷத்திரங்களை அந்தக் கூந்தலிலணிந்த மல்லிகைப் பூங்கொத்துக்களாகவும், அசையாநின்ற கொடிகளை இடையாகவும்கொண்டு, வில்லைநிகர்த்த நெற்றியையுடைய மாதரைப்போலத் தூரப்பார்வைக்குக் காணப்படும். யாசர்கள், இந்தக் கந்தமாதநத்திலுள்ள தேவதாரமரங்களைக் கற்பகமரங்களென்று நினைத்துத் தாம்வேண்டியவற்றை யிரந்து அவை கொடாமையால், இவை நாம்விரும்பினவற்றைக் கொடுத்தில ஆதலால், இவைகளும் நம்மைப்போலவே வறுமையடைந்தனவோ என்பார்கள். இருபுறத்திலுமுள்ள மரங்களின்நீண்ட கிளைகள்மேல்படர்ந்து பின்னிக்கொண்டிருக்கிற கொடிகளின் மீது மயிற்கூட்டங்கள்நின்று தட்தோகையைவிரித்து ஆடுவதை நோக்குமிடத்தில், அழகாகிய கயிற்றின்மீதேறி யாடுகின்ற கழைக்கூத்துப்பெண்களை நிகர்த்திருக்கும். தம்மீது ஏறிநிற்கும் வானரங்கள் கூத்தாடும்படி, நடுவே அலங்கரிக்கப்பட்ட படர்கொடிகளின் அயலில் கொம்புகளில்லாத மரங்கள் காணப்படுவது, கழைக்கூத்தாடிகள் நட்டகம்பங்களை நிகர்த்திருக்கும். சூரியன் நாள்தோறும் இந்தமலையின்மீதுள்ள குளிர்ந்த சுனைநீரில் மூழ்கியும் செவந்த வெங்கதிரென்று சொல்லும்

படியாகவே திரிவான், அதுநோக்குமிடத்தில், துஷ்டர்கள் நல்லோர்களுடனே சிநேகித்தாலும் தமக்கு மிகுதியாயிருக்கிற துற்குணத்தை விடார்கள் என்பதை விளக்குகின்றது.

குயில்களும், வண்டுகளும், கிளிகளும், மயில்களும் நெருங்கி யிருத்தலால் இம்மலையிலுள்ள பரிமளப்பூஞ்சோலைகள், மன்மதனனவன் அங்குள்ள முனிவர்மேல் படையெடுத்து வந்திறங்கின மதில்சூழ்ந்த படைவீட்டின் அழகைக்கொண்டிருக்கும். இந்த மலைச்சுனைகளில் சேல்முதலிய மீன்கூட்டங்கள் உலாவித்திரிவதை நோக்குமிடத்தில், இச்சுனைகளைக் கண்டு களிக்கின்ற தெய்வப்பெண்களின் கண்ணிமலை நிகர்த்திருக்கும். சுனைகளில் நீரை முற்றும் மறைத்திருக்கிற பசிய தாமரையிலைகளை நோக்குமிடத்தில், இம்மலையானது, தாமரை மலராகிய தன்பெண்ணுக்குச் சூரியன் கணவனும், தனக்கு மருமகனும் ஆதலால், நாணத்தால்; அவனுக்கு எதிரில் நிற்க மாட்டாமல், பச்சைவஸ்திரத்தால் தன்னைமறைத்துக் கொண்டதை நிகர்த்திருக்கும். வாசனையுள்ள நீரோடைகளில் இந்திரன் வசிக்கிற தேவலோகமுழுதும் பிரதிபிம்பித்தலை நோக்குமிடத்தில், முற்காலத்தில் அரியதவத்தையுடைய துருவாச முனிவர் சாபத்தால் அந்தத் தேவலோகமுழுதும் கடலில் விழுந்த செய்கையை நிகர்த்திருக்கும். இதிற் பிரவேசித்தவர்கள் பேரின்பமடைந் திவ்விடத்திற்றானே நிலைபெறுதலன்றி மீளுதலில்லாமையால் இம்மலையானது பரமசிவனுடைய திருவடியை நிகர்க்கும், ஆனால் இதையறிந்தால் எல்லாரும்வந்து பிரவேசிப்பார்களென்றெண்ணி, வித்வான்கள் இதை மலையென்று மறைத்துச்சொன்னார்கள். வாழை, மா, பலா என்னு முக்கனிகளின் தேனும் ஒன்றாய்க்கூடிப் பெரிய நதிகளாயோடும். முற்காலத்தில் நாங்கள்செய்த தீமைக்காக தேவரீர் எங்கள் தோலையுரித்துப் போர்த்துக்கொண்டீர், இனியாகிலும் எங்களைக் காத்தருளவேண்டுமென்று சொல்லுவனபோல, மான், யானை, புலி, சிங்கம் என்பவை இம்மலையையடைந்து சூழ்ந்திருக்கும். அருவியாறுகள் கொழிக்கின்ற

பொற்குவியல்கள் அழகாகப் பக்கங்களில் விளங்குவதை நோக்கினால் பொன்னாலாகிய மேருமுதலாகிய மலைகள் இந்த மலையோடு நீங்காத நட்புக்கொண்டிருப்பதை நிகர்த்திருக்கும். மான் கன்றுகள் புலி முலைப்பாலுண்ணும், யானைக்கன்றுகள் சிங்கங்களோடுகூடி நித்திரைசெய்யும். வெயிலைப் பொறுக்க மாட்டாத பாம்பின் குஞ்சுகள் கருடன்சிறைநிழலில் ஒதுங்கி நிற்கும். குளிர்ந்தபளிக்கறைபோலக் காணப்பட்டுத் தம்மிடத்து வந்தவர்களை அமிழ்த்திவிடுகிற பூஞ்சுனைகள், முனிவர் வேடம்பூண்டிருந்து, தன்னிடத்துவரும் பெருந்தவத்தினருடைய உருவுயிர்களைக் கவர்கின்ற வில்வலனை நிகர்த்திருக்கும். மிகவும் பகைகொண்டு வாலைவளைத்துக்கொண்டிருக்கிற பச்சோந்திக்கெதிரில் மயில்கள் நடித்துக்கொண்டிருக்கும். தம்முடலில் தினவுநீங்க விரும்புகிற சிங்கங்கள், எட்டுக்காலுள்ள சரபப் பக்ஷியின்மூக்கில் உராய்ந்துகொள்ளும். வளைந்த கொடியவில்லையுடைய குறவர்கள் மான்களோடு புலிகளும் அகப்படும்படி வளைத்துக் கட்டினவலைகள், நல்லோர் தீயோர் என்னும் இருதிறத்தாருக்கும் ஒரேதன்மையாய் முடிவையுண்டாக்குகிற யமனுடைய கொடுங்கோலை நிகர்த்திருக்கும். அருளையுடைய முனிவர்போல அவர்களுடைய புதல்வரும் யாகங்களைச் செய்து விளையாடுவார்கள், அப்படி அவர்கள் செய்வது பூர்ணசந்திரன்போலவே இளம்பிறையும் அமுதகிரணத்தையே வீசுவதுபோன்றிருக்கும். இந்தக் கந்தமாதநத்திலுள்ளவர்களுடைய உயிரைக்கவர்ந்து சுவைத்தயமனுமில்லை, இங்குள்ள முனிவர்மீது புஷ்பபாணங்களையேவி அவமானமடையாத மன்மதனுமில்லை, பெரியோர்வசிக்கிற இம்மலையின்மீது அருவியாறுகள் குதித்துப்பாயும் ஓசையும், யானைகளின் முழக்கமும், யாகாக்கினிகள் சுவாலித்துக் கிளைவிட்டெரியு மோசையும் ஒன்றோடொன்று கலந்தொலிக்கும். இலைகள்நெருங்கின மரங்கள் அடர்ந்து வெயில்புகுதற் கிடமாயிருத்தலால் ஒருபக்கத்தில் என்றும் இராக்காலமாகவேயிருக்கும், மாணிக்கங்கள் விளங்கிக்கொண்டிருத்தலால் ஒரு

பக்கத்தில் என்றும் பகற்காலமாகவே யிருக்கும். திரிமூர்த்தி களும் தேடிக்காணாத பொருள்கள்யாவும் இந்தக் கந்தமாத நத்திலுண்டு, இதில் இல்லாதபொருள் எவ்வுலகத்திலுமில்லை. பவளக் கொடிகளின்மேல் நெருங்கியிருக்கிற முத்துகள், தநுக் கோடியில் குளித்தோர்களுடைய பாவம் தெறித்தோடுவது கண்டு கடலாகியபெண் புன்னகைசெய்வதுபோன் றிருக்கும். பனைமரங்கள் தலைவிரித்தெழுந்து, விளங்கும். உருவமொன் றாகி, நீண்டு, தம்மீதுள்ள அண்டங்களையும் அவற்றிலுள்ள சீவராசிகளையும் தாங்குதலால், அவை இந்தப்பூமியைத் தாங்குகின்ற ஆதிசேடனை நிகர்த்திருக்கும். புன்னைமரங் களின்மேலுள்ள அரும்புகளின் காட்சியானது, மரகதமணி அழகும் பசுமையுமுள்ள பச்சிலைவடிவமா யமைந்திருக்கின்ற தென்று, முத்துக்கள் தாமும் வெண்மையாகிய அரும்புருவங் கொண்டு நெருங்கியிருப்பதை நிகர்த்திருக்கும். வாசனையுள்ள குங்குமமரங்களினின்றும் விழுந்த மகரந்தப் பொடியின்மேல் புரண்ட சங்குக்கூட்டங்கள், இங்குள்ள சங்கினங்கள் செந்நிற முள்ளனவென்று கண்டோர் சொல்லும்படி காணப்பட்டுப் பெரியோர்களையும் அறிவிலிகளாக்கும். நுளைச்சியர், நீர்க் குடத்தில் உள்ள இரண்டு சேல்மீன்களோடு தமது கண்ணிழு விரண்டையும் சேர்த்து நான்கு மீனென்றுவிற்க, விலைகொ டுத்து வாங்கினவர்கள் நீரையூற்றிப்பார்த்து இரண்டே யுள்ளன, மற்றிரண்டுமீன்களைக் கண்டிலேம், இது என்ன அதிசயமென் றெண்ணுவார்கள். நுளையர் தாழைச்செடி களின்மேல் வலையை விரித்துலர்த்தும்போது, அந்த வலைக் குள்ளே அடங்கித்தோன்றுகின்ற தாழைப்பூவின் அரும்புகள், அந்த வலையிலகப்பட்ட கொக்குகளை நிகர்த்திருக்கும். ஸ்ரீ கோதண்டதீக்ஷாகுருவாகிய ஸ்ரீராமமூர்த்தியால் உண்டாக் கப்பட்ட சேதுவாகிய கந்தமாதநமலையின்வளமும், அதைச் சூழ்ந்த கடலின்வளமும் அளவைகளைக்கொண்டு அளக்கப்படு மோ, அளக்கப்படா, சிவபெருமான் தானே வேதமுதலாகிய நூல்களைக்கொண்டு தன்பெருமையைச் சொன்னாற்போல,

இந்தக்கந்தமாதநமும் தன்பெருமையைத்தானே வாய்திறந்து சொன்னால் எல்லாரும் அறியலாகும் என்றுசொல்லிமுடித்து, மேலே சேதுவின்சிறப்பைச் சொல்லத் தொடங்கினார்.

## சேதுசருக்கம்.

கேளுங்கள், சௌநகாதிமுனிவர்களே, இந்தக் கடல் சூழ்ந்த உலகத்தில் ரகு என்னும் அரசன்மரபில் அவதரித்த ஸ்ரீராமமூர்த்தியால் வாநராதிபர்களைக்கொண்டு உண்டாக்கப் பட்டதும், கடல்நீர் மோதப்பெற்றதும் ஆகிய சேது விராமேச்சுரம் என்றொரு திவ்யக்ஷேத்திரமுண்டு, அதில், மேன்மையாகிய பலதீர்த்தங்கள் உண்டு, அந்தக்ஷேத்ரமும் தீர்த்தங்களும் பிறவூர்களிலுள்ள க்ஷேத்ர தீர்த்தங்களினும் மிகவுஞ் சிறந்தன. அந்தச் சேது விராமேச்சுரதீர்த்தம் தன்னைத் தரிசித்தவர்களுக்கு உடனே மோனானந்த முத்தியைக்கொடுக்கும். அன்றியும் சங்கரன் திருமால் என்பவர்களிடத்தில் அன்பு முண்டாகும். முத்தொழிலை நடத்தும் வல்லமையும் உண் டாகும், இதில் ஒருசந்தேகமில்லை. இந்தப்பிறப்பில் எவன் இந்தச்சேதுவைவந்து கண்டாலும், அவன் சிவபெருமான் சந்நிதியில், தந்தைதாய்வமிசத்தோராகிய கோடி உறவின ரோடு முன்னே இன்புற்றிருந்து, பின்னே மோக்ஷத்தையும் அடைவான். பூமியிலுள்ள நுண்ணிய துகள்களும் ஆகாயத்தி லுள்ள நக்ஷத்திரங்களும் ஆகிய இவற்றின் தொகையினும் மிக்கு விளங்குகிற தேவர்களுடைய தொகையும்போல, இந்தச் சேதுவைத் தரிசித்தவர்களுக்கு உண்டாகும் அநேக பலன் களையெண்ணிச் சொல்லவல்லவன் யாவன், ஆயிரநாவுள்ள ஆதிசேடனும் சொல்லவல்லவனல்லன். பெருமைவாய்ந்த ஸ்ரீராமமூர்த்தியால் உண்டாக்கப்பட்ட ஆழ்ந்த நீரையுடைய இந்தச் சேதுவை ஒருதரம் கண்ணினாற்கண்ட மனிதன், அளவில்லாத யாகங்கள், தவங்கள், தீர்த்தயாத்திரைகள் என்ப வற்றைச்செய்துமுடித்தபயனை யுடையவனாவான். உலகத்தில்

ஒருவனைநோக்கி, நீ சேதுயாத்திரைபோவென்று சொன்னவன் இந்தப்பலன்களை யெல்லாம் அடைவானானால், வேறு பற்பலவகையாக நாம் எடுத்துச்சொல்வதில் என்னபிரயோஜநம். இந்தச் சேதுவில் ஸ்நானமாநுடன், தன் ஏழுகோடி வமிசத்தாரோடும் புனிதனாகி, மாயாரூபமான பிரபஞ்சத் தொடர்பை நீக்கி மேலான முத்திப்பயனை யடைவான். இந்தக் கந்தமாதநமலையையும், அதிலுள்ள சிவபிரானையும், சேதுவையும், நினைத்தவனுடைய தீவினைப்பகுதிகள் யாவும் முடிந்து அவனும் உயர்ந்த பதவியையடைவது உண்மையேயாகும். அதுவுமல்லாமல், அவன் தன்னைப்பெற்ற தாய்தந்தையென்னும் இரண்டுபேருடைய வமிசத்திற்றோன்றின கோடிலக்ஷம் தொகையாகிய உறவினரோடு, மூன்று கற்பகாலம் வரைக்கும் சிவபதமடைந்திருந்து, அதற்குமேலே அவ்விடத்திலிருந்து, உயர்ந்த முத்திப்பேற்றையும் அடைவான். சேதுவில்ஸ்நானஞ்செய்தவன் பஞ்சமஹாபாதகங்களைச்செய்தாலும், பிரமதேவன்வாழ்கின்ற மூன்றுதினங்களாகிய ஆறாயிரம் சதுர்யுகங்கள்வரைக்கும் ஸ்ரீவைகுண்டத்தில், தன்தந்தைதாய் உறவினர் நூறுகோடிபேர் என்பவர்கள் விரும்பும்படியிருந்து, பந்தவிமோசநமடைவான். சேதுவைத்தொழுது அதில் ஸ்நானஞ்செய்தவன், துன்பத்தைத் தருவதான உலைக்களத்தின்மேலிருந்து உருகமாட்டான், வழுவழுப்பாகிய நிணக்கிணற்றில் மூழ்கி யழுந்தமாட்டான். இழுமென்னும் ஓசையுடனோடுகின்ற வைதரணிநதியில் இறங்கமாட்டான். ஆசையோடு இந்தச் சேதுவில் ஸ்நானஞ்செய்தவன் வளைந்த வாலையுடைய நாய்த்தசையை உண்ணமாட்டான், தானும் அந்தநாய்க்கு இரையாகமாட்டான். மூத்திரபாநத்தையும் நினைக்கமாட்டான், முன்னே சேதுவில் ஸ்நானஞ்செய்தவன், உலைக்களத்திற்காய்ந்த சூலத்தினால் கருங்கல்போலக் கரிந்துபோகமாட்டான், உதிரத்தோடும் புழுக்களை யுண்ணமாட்டான், முள்ளிலவமரத்திலேறமாட்டான், மலமடுவில் மூழ்கமாட்டான். சேதுவில் வந்து தங்கினவன், கல்மழை, நெருப்புமழை, வெந்நீர், கடுங்

காரநீர், உதிரநீர், என்பவை நிறைந்திருக்கிற கிணற்றில் குளிக்கமாட்டான், நீப்பாயமாட்டான். சேதுவுக்குப் போனவன், தலைகீழாகத் தொங்கமாட்டான், செக்கிலிட்டரைப்புண்ணமாட்டான், நெருப்பின்மீது புரளமாட்டான், வாயுவினால் அலைப்புண்ணமாட்டான். சேதுவுக்குப்போனவன், விந்துநீரைக் குடிக்கமாட்டான், மலத்திரளை புண்ணமாட்டான், உடல்மீதும் பூசிக்கொள்ளமாட்டான், தடியாலடிக்கப் பெருந்துயரடைந்து வருந்தமாட்டான். சேதுவில் மூழ்கினவன், கூர்மையாகிய அரிவாளினால் அரியப்பட மாட்டான், பித்தம் கோழைகள் பெருகாநின்ற கைப்பான உணவுகளையுண்ணமாட்டான், எலும்போடுகூடிய தசையை விரும்பமாட்டான். அறுப்புண்ணமாட்டான் பாசவிமுக்தனாவான். போய்ச் சேதுவில் மூழ்கினவன், பாம்புகளின் நெருங்கின தொளைகளோடு கூடின பற்களால் கடிக்கப்படமாட்டான், மலையைநிகர்த்த யானைக்கொம்பினால் குத்தப்படமாட்டான், காய்ந்தபாஷாணத்தெண்ணெயைக் குடிக்கமாட்டான், அதில் விழுந்தெழுந்திருக்கமாட்டான், முனையில் நெருப்பையுடைய ஊசியின்மேல் இருக்கமாட்டான், முகத்திலும் மூக்கிலும் மிருந்தகாரம் சிந்தமயங்கமாட்டான். ஒப்பில்லாத சேதுவில் மூழ்கினவன், தன்சரீரத்தினின்றும் எலும்பைப்பிடுங்க ஒடுங்கமாட்டான், மரத்தின்மேலிருந்து மலப்பள்ளத்திற் குதித்தழுந்தமாட்டான், அச்சத்தைச்செய்கிற முத்தலைச் சூலத்தால் இறக்கமாட்டான், பரிசுத்தமாகிய சேதுவில் மூழ்கியெழுந்த பரிசுத்தன், கொடிய யமபாசத்தினால் சரீரம் கட்டுண்ணமாட்டான், வெப்பமாகிய புகையினால் மூடப்படமாட்டான், காய்ந்த இருப்புப்பலகையின்மேல்நட்ட ஆயுதங்களின்மேல் படுத்துறங்கமாட்டான். நெடிய நீரால்நிறைந்த சேதுவில் சேர்ந்தவன், ஆண்குறியில் இருப்புண்டைகளைக் கட்டித்தொங்கவிடமாட்டான், முகத்திலும், கண்களிலும், சந்துகளிலும், ஊசியைச் செருகவருந்தமாட்டான். இப்படிப்பட்ட கொடிய நரகங்கள் அளவற்றனவாயினும், நீண்ட கடலாற்சூழப்பட்ட

சேதுவில் நனைந்த சரீரத்தையுடைய மாநுடன், இந்த நரகவேதனைகளை மனத்தால் நினைக்கவுமாட்டான். சேதுவின் அலைகளோடுகூடிய நீரில் மூழ்கப் போவேனென்று நூறடிபெயர்த்து வைத்தாலும், அப்படிவைத்தவன் மஹாபாதகங்களைச் செய்தாலும், அந்தப்பாதகங்களினின்றும் நீங்குவான், நரகத்தை யடையமாட்டான். அழகிய ஸ்ரீராமமூர்த்தியால் உண்டாக்கப்பட்ட சேதுவின்மேல் கண்ணுறங்குவோர் தம்சரீரத்தில் ஒட்டிக்கொள்ளுகிற மணலின்தொகையாகிய அந்தணரைக் கொன்றபாவமுழுதும் அற்றுப்போகும், இதற்குச் சந்தேகமில்லை. கோசலநாடனாகிய ஸ்ரீராமமூர்த்தியால் உண்டாக்கப்பட்ட சேதுவில் வீசுகின்ற குளிர்ந்த காற்றானது மேலே பட்டால், கள்ளுண்டலால் உண்டாகிற பதினாயிரம்பாவங்கள் அந்தக்ஷணிகத்திலேயே தொலைந்துபோகும். முத்துக்களைக் கொழிக்கிற குளிர்ந்தநீரையுடைய சேதுவில் சிரமுண்டனம் செய்துகொண்டால், பதினாயிரம் குருபத்நீ கமநஞ்செய்த பாவம் நீங்கிவிடும். பசும்பொன்னைக்கொண்டுவந்து கொழிக்கின்ற அலைகளையுடைய சேதுவில், தம்முடைய புத்திர பௌத்திரர்களால் தம்முடைய மரணத்திற்குப் பிறகு தமது சரீரத்தின் எலும்புகள் நனைக்கப்பட்டால் அந்தக்ஷணமே ஸ்வர்ணஸ்தேயம்செய்த பதினாயிரம் பாவங்களும் நீங்கிவிடும். வளைந்த வில்லையுடைய ஸ்ரீராகவனால் உண்டாக்கப்பட்ட திருவணையாகிய சேதுவில் சிரத்தையுள்ள மனத்தோடு சென்று மூழ்கினால் பெருமபாதகர்களோடு புணர்ந்தபாவமும் விரைவிலே ஒழிந்துவிடும். நல்வழியை மாறுபடுத்துகிறவனும் மாதவர் வேதியர் என்பவர்களைப் பழுதுசொன்னவன், உடன் பிறந்தார் முதலியோருடைய பாகத்தைத் தனக்காக்கிக்கொள்ளுகிறவன், பெருண்டியுண்பவன், வேதசாஸ்திரங்களை விற்கிறவன், அந்தணரைக் கொலைசெய்தவன் என்கிற ஐவரும், பிராமணருக்குப் பொருள்கொடுப்பேனென்று சொல்லிப் பிறகு இல்லையென்றுசொல்லுகிற அறிவிலி, தன் ஆசிரியரை வணங்காதவன், மிக்க கோபமுள்ளவன், பிரமகத்திசெய்

தவன், தாகத்தோடு நீருண்ணச்செல்லும் பசுக்களை வெருட்டி யோட்டுகிறவன் என்கிற இந்தப் பாவிகளும் இவர்போல்பவரும் சேதுஸ்நாநத்தினால் ஒப்பற்ற பாவத்தொகுதியினின்றும் நீங்குவது நிச்சயம். நாள்தோறும் வேதியர்கூட்டம் செய்கின்ற அக்கிநிகாரியங்களுக்கு விரோதம்செய்தவன், பதிதனும், தாசியும் ஆகிய இவருடைய உணவையும், தேவருணவையும் உண்பவன், கள்ளுண்ணும் மாதுக்குக் கணவனாயிருப்பவன் என்று சொல்லப்பட்டவரும, கள்ளுண்டவரும், சிவபெருமான்முதலியதேவர்களுக்கென்று அமைத்துவைத்த கந்தமூல பதார்த்தங்களையும் கனிகளையும் தாம்பூலத்தையும், பட்டாடையையும், சந்தநம் கஸ்தூரிமுதலிய சுகந்தவர்க்கங்களையும், தாமிரம் வெள்ளி பொன் முதலியவற்றாற் செய்த பூஜாபாத்திரங்களையும், தேன் நெய் பால் முதலிய திரவியங்களையும், கண்டிகைமுதலிய பூஷணங்களையும் அபகரித்துக் கொண்டவன், சிற்றன்னை, சிநேகன்மனைவி, மகன்மனைவி, நாற்றவாயினளாகிய தாரஸ்த்ரீ, நம்பினவள், இழிந்தசாதிப் பெண், பிறன்மனைவி என்று சொல்லப்பட்டவருடைய சுகத்தைவிரும்பி அவர்களைத் தழுவினவன், குருமனைவியை யிச்சித்துப் புணர்ந்தவன் என்று சொல்லப்பட்ட இவர்களுடைய பாவங்களெல்லாம் சேதுவில் மூழ்கினமாத்திரத்தில் பற்றறவொழிந்துபோகும். தேவதைகளையும், அக்கிநியையும், பூமியையும் பூசித்தலும், யாகங்களைச்செய்தலும் ஆகிய இவைகளில்லாமலே [illegible] தர்களுடைய போகத்தை விரும்பினவர் யாவரும் சேதுயாத்திரை செய்யுங்கள். பூமி பொன் தானியம் அரிசி என்பவற்றைத் தானஞ்செய்தலும், விரதமுதலியவற்றால் உடம்புவாடுதலும் ஆகிய இவைகள் வேண்டியதில்லை, சேதுவைத் தரிசித்து அதில் மூழ்கினால் தேவர்களாகலாம். சேதுஸ்நாநபலமானது ஓமம் யாகம் ஜபம் தபம் என்னும் இவற்றின் பலனைப்பார்க்கிலும் அதிகமென்று புராணங்கள் சொல்லுகின்றன. மனத்தில் வேறு எண்ணங்களில்லாமல் இந்தச் சேதுவில் மூழ்கினால், அப்படி மூழ்கினவர்களுக்கு

மறுபடியும் இவ்வுலகத்தில்வந்து பிறக்கவேண்டியதில்லை. அலைகளையுடைய இந்தச் சேதுவானது, செல்வத்தை விரும்பினாலும், தெய்வப்பெண்களுடைய சுகத்தை விரும்பினாலும், பற்றற்றமனத்தை விரும்பினாலும் தடையில்லாமல் கொடுக்கும். தீவினையைநீக்கி நல்வினையை மிகவுந் தருவதாதலால் இந்தச்சேதுவில் மூழ்கினவர்கள் தாம்விரும்பும் இன்பங்களெல்லாவற்றையும் அடையலாம். இந்தச் சேதுவில் மூழ்குதல், எல்லாயாகங்கள் செய்தலினும், எல்லாத் தீர்த்தங்களில் மூழ்குவதினும், பிறவியச்சத்தை நீங்குதற்குக் காரணமாகிய யோகங்களைச் செய்தலினும் மிகவும் சிறந்தது. சுவர்க்கலோகத்தையும், திருமாலுலகமாகிய வைகுண்டத்தையும், சிவபெருமானுலகமாகிய கைலாயத்தையும், பிரமலோகத்தையும் விரும்பினவர்கள் இந்தச் சேதுவில் மூழ்கக்கடவர். இந்தச் சேதுஸ்நாநமானது, செல்வம், ஆயுள், சிறப்பு, கல்வி, மந்திரசித்திமுதலானவைகளையும் தரும். இந்தச்சேதுவில் அன்போடாயினும் அன்பின்றியாயினும் எப்படி மூழ்கினாலும், மூழ்கினவர்களை இம்மை மறுமைகளில் துன்பமானது தொடரமாட்டாது. ஆதலால் இந்தச் சேதுவானது தன்னிடத்தில் மூழ்கினவருடைய வறுமையாகிய பாம்புக்குக் கருடனை நிகர்க்கும். இதைத் தரிசிக்கிற உயிர்களுக்கெல்லாம் இளம்பிறைபோல எல்லாத்தருமங்களும் தழைத்துவளரும், காமதேநு, கற்பகவிருக்ஷம், சிந்தாமணி என்பவை தம்மிடத்து வந்து இரப்பவர்க்கு அவர்விரும்பின எல்லாவற்றையும் கொடுப்பது போல, இந்தச் சேதுநீரானது தன்னிடத்தில்வந்து மூழ்குவோர்க்கு அவர்விரும்பின எல்லாவற்றையும் கொடுக்கும். சேதுஸ்நாநத்துக்குப்போகிறவன், கையிற்பொருளில்லாமையால் பெரியோரிடத்தில் வாங்கிக்கொண்டு போகலாகாது, போனால் பொருள்கொடுத்தவர் ஸ்நாநபலத்திற் பாதியைக் கைக்கொள்வார். சேதுயாத்திரை போகிறவர் கைப்பொருள் குறைந்ததானால் அந்தணரிடத்தில் வாங்கலாம். அன்றி அரசர் வைசியரிவர்களிடத்திலும் வாங்கலாம், சூத்திரரிடத்தில்

வாங்கலாகாது, அப்படிவாங்குதல் பெரியபாவமாகும். ஆடை, பொருள், பலவகைத்தானியம் இவைகளை மனமிசைந்து தானஞ்செய்து சேதுயாத்திரைக்குப் போவென்று ஒருவனை இசைவித்தேவினவன், வேதபாராயணத்தாலும் அசுவமேத முதலிய யாகங்களாலும் சொர்ணதானத்தாலும் அடைகிற பயன்முழுதும் அடைவான். சேதுயாத்திரை போய்வந்தால் உனக்குப் பொருள்கொடுக்கிறேனென்று ஒருவனுக்குச் சொல்லி, அவன் போய்வந்தபிறகு கொடாமல் இல்லையென்று சொல்லுகிறவஞ்சகனை, பிரமகத்திசெய்த மகாபாதகன் என்று அறிவுடையோர் சொல்வார்கள். சேதுயாத்திரை போகிறே னென்றுசொல்லிப் பொருள்யாசித்து அவ்வாறு போகாத வலியநெஞ்சமுடையவனை, பூசுரரைக் கொன்றவனென்று உலகஞ்சொல்லும். செல்வனுயிருந்தும் சேது ஸ்நாநம் செய் யப்போகிறேனென்று யாசித்துப்பொருளைச் சேகரிப்பவனை, பொற்கள்ளன் என்று சொல்லுவார்கள். பூசுரரைச் சேது யாத்திரை போவதற்கு வேண்டிய பொருள்முதலிய வுதவி செய்து ஏவினால் அது சிறந்த புண்ணியமாகும். யாகங்களைச் செய்வதற்கு யாவரிடத்திலும் பொருள்முதலியவற்றை யேற் றாலும் தீமையுண்டாகாததுபோலச் சேதுயாத்திரையின் பொருட்டும் எவரிடத்திலும் பொருள்வாங்கலாம், அதனால் ஒருகுற்றமுமில்லை. இந்தச் சேதுவானது கிரேதாயுகத்தில் ஞானசொரூபமாயிருந்து யாவருக்கும் மோக்ஷத்தையும், திரேதா யுகத்திலே வேதசொரூபமாயிருந்து மேலான புண்ணியலோகங்களையும், துவாபரயுகத்தில் சிவசொரூபமா யிருந்து சக்கரவர்த்தித்வம் முதலான சம்பத்துக்களையும், கலியுகத்தில் சேது சொரூபமாயிருந்து அவரவர்கள் நினைத்த காரியங்களெல்லாவற்றையும் தருதலால், இதின்பெருமையை யாவர்சொல்லவல்லவர், ஒருவருமில்லை, ஆனாலும் ஒருவாறு சுருக்கிச்சொன்னோம், இனி யிந்தச் சேதுவந்த வரலாற்றைச் சொல்லுவோம், கேளுங்கள் என்று சௌனகாதிமுனிவர் களுக்குச் சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினார்.

## சேதுவந்தசருக்கம்.

கோசலதேசத்துக் கரசனாகிய ஸ்ரீரகுநாயகன், தந்தை யாணையால் தன்காதலியாகிய சீதாபிராட்டி பின்தொடர்ந்து வரத் தம்பியாகிய இலக்குமணனோடு தண்டகாரணியத்தை யடைந்து, பஞ்சவடிதீரத்தில் வாசஞ்செய்யுங்காலத்தில் மாரீசன் பொன்மானாய்வந்துசெய்த மாயையால் இராவணன் பிராட்டியைக் கொண்டுபோக, ஸ்ரீராமரும் தம்பியுமாக அந்தக் காடெல்லாந்தேடியும் காணாமல், பம்பைக்கரையில் வந்து ஒருவாநரம் நிற்பதைக்கண்டார்கள். அப்பொழுது, அந்த வாநரமானது கோதண்டபாணியாய் வருகிற ஸ்ரீராமமூர்த்தியையும் இலக்குமணனையும் கண்டு, மிகுந்த ஆசையோடு நின்று, உம்மையொத்தவர் இந்தவனத்தில் இதற்குமுன்னே வந்ததில்லை, நீங்கள் யாவர், உமது இருப்பிடம் யாது, உம்முடையபெயர் யாது, வந்தகாரியம் என்ன, என்று கேட்டது; அதுகேட்ட கேள்விகளுக்கு ஸ்ரீராகவன் விடைகூறினபின்பு அதின்வரலாற்றை வினவ, கலைக்கடலாகிய அந்தவாநரம், என்பேர் அநுமான், சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவமஹாராஜனுக்கு நான் மந்திரியாவேன். எங்கள் அரசன் உன்னோடு நட்புக்கொள்ள நினைத்து என்னை இங்கே யேவினான், அவனிடத்துக்கு வந்தால் உம்முடைய காரியங்களெல்லாம் நன்மையாய் முடியும் என்று சொல்ல, அவ்வாறே ஸ்ரீராமமூர்த்தி அந்த அநுமானோடுசென்று சுக்கிரீவமஹாராஜனைக்கண்டு வார்த்தையாடினபிறகு, தானும்தம்பியும் அக்கினிசாக்ஷியாய் அவனோடு நட்புக்கொண்டார்கள். இப்படியிருக்கையில் ஸ்ரீரகுநாயகன் வாலியைக் கொல்வேனென்று உறுதிமொழி கூறினன், சுக்கிரீவனும் ஜாநகியைத் தேடிக்கொண்டுவந்து தருவேனென்றான். இவ்வாறு மிகுந்த அன்போடு அவ்விடத்தில் இருக்கையில், ஸ்ரீரகுநாயகனது வலியையறிய விரும்பிச் சுக்கிரீவன் பிரார்த்திக்க, அவனது பிரார்த்தனைக்கிசைந்து அங்குக்கிடந்த துந்துபியின் பேருடலைப் பத்துயோசனைக் கப்பாற்சென்று விழும்

படித் தன்திருவடியின் பெருவிரலால் உந்தினதுமன்றி, அங்கேயிருந்த மராமரங்கள் ஏழும் தொளைபடும்படி ஒருபாணத்தால் எய்தனன், இந்தப் பேராற்றலைக்கண்ட வாநரவேந்தனாகிய சுக்கிரீவன், இனி இந்திரனாலும் எனக்கு அச்சமில்லை, உனது நட்பைக்கொண்டு அரக்கனாகிய இராவணனுடைய வலியையழித்துச் சாநகியைத் தரவல்லேன், இப்பொழுது வாலிவாழ்கின்ற கிட்கிந்தைக்கு என்னோடு வரவேண்டுமென்று பிரார்த்திக்க, ஸ்ரீரகுநந்தனன் அதற்கிசைந்து வாலியின் இருப்பிடத்துக்கு இலக்குமணனோடும் சென்றனன். அப்பொழுது சுக்கிரீவன் கோபித்துச்சென்று வாலியைப் போர்செய்ய வாவென்றழைகூவினன். அதைக்கேட்ட வாலிவந்து போர்செய்யவே, அவனுக்கெதிர் நிற்கமாட்டாத சுக்கிரீவன் பயந்து ஸ்ரீரகுநாதனைவந் தடைந்தான், ஸ்ரீரகுநாதன் அவனை அஞ்சாதேயென்று ஆதரித்து, நீங்களிருவரும் கலந்து போர்செய்யுங்காலத்தில், நான் அவன்மீது அம்பெய்வேனானால் உன்மீது பட்டாலும்படும், ஆகையால், அவனுக்கும் உனக்கும் வேற்றுமை தெரியும்படி இதை அடையாளமாகத் தலையிற் சுற்றிக் கொள்வாயென்று ஒருகொடியை அவன்தலையிற்சுற்றி அனுப்பினான், சுக்கிரீவன் அவ்வாறே சுற்றிக்கொண்டு மறுபடியும் வாலியை அதட்டிப் போர்க்கு அழைத்தலும் அவன்வந்து போர்செய்துகொண் டிருக்கையில், ஸ்ரீரகுநாதன் ஒரு அம்பினால் வாலியினுயிரைக் கவர்ந்தனன், சுக்கிரீவனும் தனது பட்டணத்தில் பிரவேசித்துக் கார்காலம் நீங்கினபிறகு, தன் வாநரசேனையுடன் ஜாநகியிருக்குமிடத்தைக் கண்டுபிடிக்கும்பொருட்டு ஸ்ரீரகுநாயகன் எழுந்தருளியிருக்கு மிடத்துக்கு வந்தனன், வந்து அங்கிருந்துகொண்டே வாநரவீரரை நாற்றிசையிலுந் தேட விடுத்தான், அவர்களுக்குள்ளே வாயுகுமாரனாகிய அநுமான் ஜாநகியைக்கண்டு சூடாமணியையுங் கொண்டுவந்து ஸ்ரீராகவனுக்கு அறிவிக்க, அந்தச் சூடாமணியைக் கண்டு துன்பக்கடலிலும் இன்பக்கடலிலும் மூழ்கினான். பிறகு தேறின ஸ்ரீரகுநாதன், தன் தம்பியாகிய இலக்குமணன், சுக்கிரீ

வன், சாம்பவன், நளன், அநுமான், அங்கதன், நீலன் முதலிய வாநரவீரரோடும்சேனைகளோடும் கிட்கிந்தையைநீங்கி, மகேந்திரமலையையடுத்த தென்கடற்கரையில்வந்து சேர்ந்தனன். இப்படியிருக்க, இராவணன் தம்பியாகிய விபிஷணன் அநலன் முதலிய மந்திரிமார் நால்வரோடும் இலங்கையிலிருந்துவந்து, தாசரதீ, அடைக்கலம் என்று வேண்ட, அவனுக்கு அபயம் நல்கி, அவனிடத்தில் சுக்கிரீவன்கொண்டிருந்த சந்தேகத்தை நிவர்த்திசெய்து, முரசம் சத்திக்க, அவனுக்கு இலங்காதிபத்தியமருளி, முடிசூட்டித் தனக்கு அவ்விபிஷணனையும் ஒரு அமைச்சனாக்கிக் கொண்டனன். அதின்பிறகு, ஸ்ரீரகுநாதன் அவர்கள் யாவரும் அறியும்படி ஆலோசித்து, நமது சேநா சமுத்திரமோ அளவிடப்படாதது, கடற்பரப்போ மிகவும் அகன்றுள்ளது, மலைப்பாம்புகள்போல அலைகள் புரளாநின்றன, பிளந்தவாயையுடைய முதலைகள் அநேகமாகத் திரியாநின்றன, சுறாமீன்கள் மோதாநிற்கும், கடுங்காற்றுவீசும், கடிய முதலைகளும் நீந்துதற்கரிதாகிய பெருங்கடலை நீந்துதற்குவழியாதோ, கண்ணால் நோக்கவும் பயமாயிருக்கின்றதே, மனமும் அஞ்சும்படியான நூறுயோசனை யகலமான பரப்புள்ளதென்று கணிதஞ்செய்திருக்கிறார்களே, இடியேறுகள் கூடி யொலிக்கப்பெற்ற மேகத்தொகுதிகள் நெருங்கி வருணனுக் கிருப்பிடமாகிய கடலைப் பேருதவி யொன்றில்லாமல் கடந்து கரையேறுவதாகிய உபாயம் வேறுயாதோ, துன்பம் பெரிது, சேனையோடு கடப்பதற்குவழியுமில்லை, இவ்விடத்தில் தெப்பம் விடுப்பவராகிய துணைவரையும் காண்கிலேம், சாநகியையும் தந்தையையுமிழந்து படுந்துயரத்திலும் கடல் கடக்கும் துயரம் பெரிதாயிருக்கின்றது. இந்தக்கடலை எந்த விதமாய்க் கடப்போம், அகத்தியமுனிவர், இலங்காதிபனாகிய இராவணனைக்கொன்று, அந்தக்கொலைப்பாவம் நீங்குதற்குரிய இடமாகிய கந்தமாதநத்தைச் சேர்வாயென்று சொன்ன சொல்லும் பொய்யாகுமோவென்று சொல்லி மனம் புழுங்கினன். இப்படி இராகவன் இரங்குதலும், சுக்ரீவன்முதலி

மயன் என்தாயைநோக்கி, சிற்பத்தொழிலில் அதிக சமர்த்தனாகிய என்னைப்போல ஒரு சிறுவனைப் பெறுவாயென்று வரந்தந்துபோனபடியே பிறந்த நான் தேவரீர் கட்டளையிட்டபிரகாரம் செய்து முடிக்கிறேன் என்றனன். ஸ்ரீராமபிரானும் வாநரவீரரை நோக்கி, நீங்களும் உம்முடைய சேனைகளோடு கூடி அணைகட்டப்போங்கள் என்று நியமித்தான். உடனே வாநரக்கூட்டங்கள் கருடனைப்போலவும், காற்றைப்போலவும் எழுந்து ஸ்ரீராமபிரானிடத்தில் விடைபெற்று, உலகமுழுதும் பரவிச்சென்று, காட்டுமரம் கொடி செடிகள் முதலிய எல்லாப்பொருள்களையும் எடுத்துக்கொண்டுவந்து கொடுக்க, தெய்வத்தச்சன் மகனாகிய நளன் கடலையடைத்தான், இவ்விதமாகச் செய்யப்பட்ட அணை எழுநூற்றுமுப்பதுயோசனை நீளமுள்ளது, இந்தச் சேதுவின்கீழ்ச் சந்திரசடாதரனாகிய சிவபெருமான் எழுந்தருளியிருந்து, இதில் மூழ்குவோராகிய முக்தாத்மாக்களிடத்தில் கருணைவைத்து, அவர்களுடைய மநோரதங்களையெல்லாம் நிறைவேற்றுவர். பலவகையான விரதங்கள் யாகங்கள் தவங்கள் முதலானவற்றைச் செய்கிற உண்மைநெறியை யுடையவர்களும் இதில் மூழ்கினால் சர்வபாபவிமோசநத்தை யடைவார்கள். அச்சந்தைத்தருகிற இருட்கூட்டத்தைக் கிழித்தெழுகின்ற சூரியனுடைய ஒளிபோல நிகரில்லாததாகிய வெற்றிப்புகழையுடைய ஸ்ரீரகுநாயகன், வாநரங்களால் கட்டுவித்த சேதுவின் மூலமாகிய இடத்தை நன்மையைத்தருகிற தருப்பசயநம் என்று உலகம் சொல்லும். முற்காலத்தில் கடலில் சேதுபந்தநஞ்செய்த கதை யிதுவேயாகும். ஸ்ரீராகவன்வகுத்த இந்தச் சேதுவில் அளவற்ற தீர்த்தங்கள் இருக்கின்றன. அவற்றின் அளவும் பெயருஞ் சொல்லுதற்கு, அவன்விட்டுவந்த அணையாகிய ஆதிசேடனாலும் முடியாது, இந்த அளவற்ற தீர்த்தங்களுள்ளே முக்கியமானவை இருபத்துநான்கு. அவை சக்கரதீர்த்தம், வேதாளதீர்த்தம், பாபவிநாசம், சீதாகுண்டம், மங்களதீர்த்தம், அமுததீர்த்தம், பிரமகுண்டம், அநும

குண்டம், அகஸ்தியதீர்த்தம், இராமதீர்த்தம், இலக்குமண தீர்த்தம், சடாயுதீர்த்தம், இலக்குமிதீர்த்தம், அக்கினிதீர்த்தம், சுக்ரீவதீர்த்தம், சிவதீர்த்தம், சங்குதீர்த்தம், கங்கை யமுனை கேகயகோடிதீர்த்தம், சாத்தியவமுதசர்வதீர்த்தம், தநுக்கோடிதீர்த்தம் என்பனவாம். இவற்றில் தம்மனைவியரோடு மூழ்கினவர்கள் பாசவேரறுத்துப் பரகதியடைவார்கள். இந்தக்கதையை யெடுத்துப் பேசுவோரும் பிறப்பிறப்பில்லாதவராய்ப் பேரின்பவாழ்வை யடைவார்கள் என்று சூதபுராணிகர் சௌநகாதிமுனிவர்களுக்குச் சொல்லியருளினர்.

---

## சக்கரதீர்த்தச்சருக்கம்.

கேளுங்கள் முனிவர்களே! முன்னொருகாலத்திலே காலவமகாரிஷி; தென்பாகத்திற் புல்லாரணியப் பாலோடை யென்னும் நதிக்கருகில் விஷ்ணுவைநோக்கித் தவஞ்செய்யவேண்டி ஊணுறக்கமின்றிப் பொறிபுலனடக்கி, மவுனத்தோடுஞ் சாந்தமடைந்து வாயுபக்ஷணம் பண்ணிக்கொண்டு, ஆகாயத்தினின்றிலங்கு மேழுமேகங்களில் ஆவர்த்தமென்னு மேகத்தால் பெய்கின்ற மழையோடுமழையாயும், காற்றோடுகாற்றாயும், தீயோடு தீயாயும், மகாவிஷ்ணுவினது அஷ்டாக்ஷரத்தை இடைவிடாமல் தியானித்துக்கொண்டு, தேவவருடத்தில் ஆயிரம்வருடம்வரையில் தவஞ்செய்துகொண் டிருக்கையில், அம்முனிவரர்மீது ஸ்ரீமந்நாராயணன் கருணைசுரந்து, சங்கு சக்ர கதாபாணியாய், கருடவாகனமீது, மகாலட்சுமிசமேதராய், முப்பத்துமுக்கோடி தேவர்கள், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள், கின்னரர், கிம்புருடர், கருடர், காந்தர்வர், சித்தர், வித்யாதரர் உரகர், ஆகாயவாசிகள், போகபூமியர் யாவரும் புடைசூழ வெழுந்தருளி, புல்லாரண்ய க்ஷேத்திரத்தில் பஞ்சாக்கினி மத்தியில் தவஞ்செய்துகொண் டிருக்குங் காளவ முனிவனுக்கு ப்ரசன்னமாக, அப்போது முனிவன் கண்ணை

விழித்துக் கடவுளைநோக்கி யெழுந்து, மகாபக்திவிராய்த் தோடும் அஷ்டாங்க பஞ்சாங்க கிரியாங்கமாய்ப் பணிந்தெழுந்து, இருகரங்களையுஞ் சிரத்தின்மேற் கூப்பி, ஆனந்தக்கூத்தாடி புளகாங்கிதங்கொண்டு இருகண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் தாரைதாரையாய்ப் பெருக, ஆண்டவனை ஸஹஸ்ர நாமங்களாலுந் தோத்திரஞ்செய்துநிற்க, ஜகதீசனாகிய திருமால் மனமகிழ்ந்து, காளவமுனிவனைப்பார்த்து, முனிவரனே! நீ செய்ததவத்திற்கு யாம் மெச்சியதால் உமக்கென்னவரம் வேண்டுமென்றுகேட்க, காளவமகாரிஷி, ஸ்வாமி, வேதாந்த மூர்த்தியே, அடியேன் தேவரீரைப்போல வுருவங்கொண்டு வைகுண்டத்தி லெப்போதும் உம்மைவிட் டகலாதிருக்கவும், உமது சரணாரவிந்தத்தை நித்யமுத்தராகிய பரமபாகவதாளுடனே வணங்கிக்கொண்டிருக்கவும் வாக்கருளவேண்டுமென்று கேட்டனன், அப்போது ஸ்ரீமந்நாராயணன், காளவ முனியே! நீ ஒருவருங் கேளாதவரத்தைக் கேட்டமையால் நாம் அப்படியேகொடுப்பதற்குத் தடையில்லை, ஆயினும், இக் கர்மபூமியிலே யின்னுஞ் சலன மநுபவிக்கவேண்டி யிருப்பதினாலே, அவை தொலையும்படியாய் நீரிப்போது தவஞ்செய்து கொண் டிருக்குமிடத்திற்குச் சமீபத்தில் உத்தரபாரிசத்திலே, தருமபுட்கரிணியென் றொரு தடாகமிருக்கின்றது. அந்தத் தடாகத்தினிடம் இதற்குமுன் னொருகாலத்திலே, தரும தேவதையானது, தான் அன்பால் சிவபிரானைநோக்கித் தவஞ் செய்து கொண்டிருக்கையில், சிவபெருமான் மான்மழு சதுர்ப்புஜ காளகண்ட திரிநேத்ர சூலபாணியாயும், சந்திரசடாதர மூர்த்தியாயும், பார்வதிசமேதராயும், சிவகணங்கள்சூழ, வெள்ளைவிடைமீ தெழுந்தருளித் தருமதேவதைமுன் ப்ரத்யக்ஷமாகி, உனக் கென்னவரம்வேண்டுமென்று கேட்க, தருமதேவதையும் வணங்கித் தோத்திரஞ்செய்து, சுவாமி, அடியேன் சர்வகாலமும் தேவரீரது திருப்பணிசெய்து தேவரீரைச் சுமந்துகொண்டிருக்க ஆவல்கொண்டமையால், அவ்வாறருள்செய்யவேண்டுமென்று கேட்க, அதற்குப் பரமசிவன்

ஷந்தோஷமடைந்து அவ்விடத்திலோர் தடாகத்தை, தெய்வீகமா யுண்டுபண்ணி அதில் தருமதேவதையை மூழ்கச் சொல்லினன், அவ்வுரைகேட்ட தருமதேவதையும் அப்படியே மூழ்கையில், முன்னிருந்த வுருவமாறி, நந்தியுருவமாய், நான்குகால்களும் இரண்டுகொம்பும் வாலுமாய்த்தோன்றி, சுவாமியின் முன்னிற்க, அதுகண்ட நீலகண்டமூர்த்தியாகிய பரமசிவன், பார்வதியாருடனே அதன்மீதெழுந்தருளி யாவருக்குங் காட்சிகொடுத்து, இத்தடாகத்திலே தீர்த்தமாடி, நமமைத் தாங்கினமையால், இத்தடாகத்திற்கு இதுமுதல் தருமபுட்கரிணி யென்று நாமம வழங்குதலோடும், இதில் தீர்த்தமாடியபேர்கள், நினைத்தபடி எல்லா நன்மைகளையும் பெறுவார்களென்று திருவாய்மலர்ந்தருளி, பின் தேவர்களுடனுஞ் சிவகணங்களுடனுங கயிலாயத்திற் கெழுந்தருளினன்.

ஆதலால் அத்தடாகத்திற்கு அன்றுமுதல் தருமபுட்கரிணியென்றும, தெய்வீகத்தன்மை யுடையதென்றும், மகத்துவ மிருப்பதால், நீரும அதில் மூழ்கிச சதாகாலம் அக்கரையிலே தவஞ்செய்துகொண் டிருந்தால், நம்முடைய வுருவம் பெற்று வைகுண்டத்துக்கு வருவீர், மேலும், அவ்வண்ணம் நீர் தவஞ்செய்கையில், அன்னியரால் இடையிலேதேனுந் தவத்துக்குப் பின்னம் நேரிட்டால், அப்படி நேரிடச்செய்தவரை, நம்முடைய சக்கரம் உடனேவந்து, அக்கொடியரைச் சங்கரித்து விடுமென்று திருவாய்மலர்ந்தருளி, மாயப்பிரான் ஸ்ரீவைகுண்டத்துக் கெழுந்தருளினன். பின்னர் காளவமுனிவனும் அவ்வாறுசென்று, உதபாதி அக்கிநேரத்திற்குள், அத்தருமபுட்கரிணியில் மூன்றுகாலந் தீர்த்தமாடி, அதின் கரையில் தனது தேவபூசையாகிய சாளக்கிராமங்களை வைத்துப் பிரதிஷ்டைசெய்து, பூசைபண்ணிக்கொண்டு, சங்கிரம சஷ்டி அஷ்டமி சதுர்த்தசி பூரணை அமாவாசை முதலாகிய தினங்களிலே தர்ப்பண முதலாகிய கிரியைகளை நடாத்தித் தவஞ்செய்துகொண் டிருக்கையில், அம்முனிவனை ஒரு அரக்கன்

வந்து மாயையால் பாய்ந்தெடுத்தான், அப்போது காளவ முனிவன் ஸ்ரீமந் நாராயணனை நினைந்து துதிக்கையில், உடனே விஷ்ணுசக்கரம் கோடிசூரியப்ரகாசம்போல் கரகரவென்று சுழன்றுவந்து, அவ்வரக்கனைச் சங்கரித்துக் காளவமுனிவனை விடுவித்துவிட்டது. அப்போது அம்முநிவன் மிக நடுக்கங் கொண்டு, விட்டுநீ சக்கரத்தைப் பணிந்து, நீ யெந்நேரமு மென்னை யிடைவிடாமற் காக்கவேண்டுமென்று வேண்டிக் கொள்ள, அப்போது சக்கரஞ் சொல்லுகின்றது, யான் எந்தை யாகிய ஸ்ரீமந் நாராயணனது உத்தரவின்படி வந்து அரக்கனைச் சங்கரித்தது சரியே, இனிமேல் உமதுவேண்டுத நிமித்தம் நான்வந்து இருக்கவேண்டுமாயின் எம்பிரானிடம் விடை பெற்றுக்கொண்டு உன்னிஷ்டப்படி வந்திருக்கின்றேன் இப் போது நானிந்த அரக்கனைக் கொன்ற பாவந்தீர எனக்கொரு வகை சொல்லுமென்று சக்கரங் கேட்க, அதற்கு அம்முநிவன் சந்தோஷமடைந்து, இத்தடாகத்திலே மூழ்கென்றுசொல்ல, அதுபோலச் சக்கரம் உடனே மூழ்கித் தெய்வீகமாய்த் தன் கருமத்தையொழித்து, பழையபடிப் பிரகாசம்பொருந்திச் சொல்லுகின்றது, நானித்தடாகத்தில் முழுகியபடியால், இன்றுமுதலாக இதற்குச் சக்கரதீர்த்தமென்று பெயர் விளங் கக்கடவதென்று திருவாய்மலர்ந்தருளி, இன்றுமுதல் இத் தீர்த்தத்தில் யார்மூழ்கினாலும் அன்னவரைப்பற்றிய பேய் பசாசம் அலகை வேதாளங்களெல்லாம் விலகிப் போகக்கடவ தென்றும் வாக்குத்தந்து, ஆசிர்வாதஞ்செய்து, காளவமுனிவ னிடத்தில் விடைபெற்றுச் சக்கரம் வைகுண்டம்போய்ச் சேர்ந்தது.

அவ்வாறுண்டாகிய சக்கரதீர்த்தம் ஆதியிற் சேதுபந்த னஞ்செய்த திருவணையி லுண்டாக்கப்பட்டு, தருமபுட்கரிணி யென்றுபெயர் விளங்கிக்கொண்டிருக்கின்றதன்றி, இத் தீர்த் தத்தின்பெருமை யொருவராலுஞ் சொல்லிமுடியாது. அன்றி யும், ஆயிரங்கோடி ஜன்மங்களிலே செய்தபாவங்களை யெல்

லாம் அச்சேதுவிலுண்டாயிருக்குஞ் சக்கரதீர்த்தத்தைநினைத் தாலும் விமோசனமாகும். மேலும், உலகிற் சொல்லப்பட்ட கங்கை யமுனை துங்கபத்திரை கிருஷ்ணை நருமதை கோதாவரி காவேரிமுதலியவும் இதற் கிணையல்லவென்று சூதமுனிவன் சொல்ல, அதைக்கேட்ட நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவரர், பிரமானந்த பரிதராய் ஆச்சரியங்கொண்டு சூத முனிவரை நோக்கி சுவாமி, இத்தன்மைபொருந்திய சக்கர தீர்த்தக் கரையில் தவஞ்செய்திருந்த காளவமுனிவனைத் தாக்கிய அரக்கன் யார் அதனையும், ஸ்ரீமந்நாராயணன் அவ்வரக்கனைத் தனது திகிரியை விடுத்துக் கண்டித்தகாரணத்தையும், அடியோங்களுக்குப் புலப்படுத்தவேண்டுமென்று பணிய, அவர்களுக்குச் சூதபுராணிகர் சொலலத்தொடங்கினர்.

சக்கரதீர்த்தச்சருக்கம்
முற்றுப்பெற்றது.



## துந்நமச்சருக்கம்.

நைமிசாரணிய வாசிகளாகிய முனிவர்களே, இவ்வுலகின் நாற்றிசையினுள், தென்பாகமாகிய தென்றிசையில், திருவாலவா யென்னும் திருநாமமுடைய மதுராபுரித்தலத்தில் திருவுருக்கொண் டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமதுரேசனாகிய சோமசுந்தரக்கடவுளைப் பூசைசெய்துகொண்டு, சதாகாலமும் எக்கியங்களும் யாகாதிகிர்த்தியங்களும் வழுவின்றி நிறைவேற்றிக் கொண்டுவருகின்ற வசிஷ்டமுனிவர் முதலிய இருபத்துநாலாயிர முனிவர்களும் தீவினைக்கெட்டாதவர்களாய், நற்கிரியைகளை யநுட்டித்து வருகையில், விசுவாவசுவென்னு மோர் காந்தர்வ ராஜகுமாரனாகிய துந்நமனென்பவன், தன்னுடைய கர்வத்தால் அநேகங் காந்தர்வமாதரைக்கூடி யுலாவி, தான் பிடியானையின் கூட்டத்துள் மும்மதங்கொண்ட யானையைப் போலும், மான்கூட்டத்துள் கலைபோலும், பசுக்கூட்டத்துள் இடபம்போலும் கர்ஜித்துக்கொண்டு, பூலோகத்திற்கு வந்து

வேப்பமரங்களாலும் கடப்பமரங்களாலுஞ் சூழ்ந்து நெருங்கியிருண்ட காலைபோற் பிரகாசிக்கின்ற அம் மதுராபுரியென்னுந் தலத்தில், விசாலத்தோடும் விளங்கிக்கொண்டிருக்கும் பொற்றாமரை யென்னுந் தடாகத்திலே, நிர்வாணமாய்த் தானுந் தன்மாதர்களுடனிறங்கி ஜலக்கிரீடை செய்துகொண்டிருக்கையில், அத்தலத்தில் வாசஞ்செய்துகொண் டிருக்கும் வசிஷ்டர் முதலிய மகாரிஷிகள் இருபத்துநாலாயிரம்பேரும், ஸ்நாநஞ்செய்து நித்தியகருமங்களை முடிக்க அத்தலத்திலிருக்கும் பொற்றாமரைத் தடாகத்தை நாடிவருங்காலையில், அவர் வரவுகண்ட காந்தர்வமாதர் யாவரும் அதிக நாணத்தோடுந் தடாகத்து ணின்றுங் கரையேறி, அவரவர்கள் சேலைகளை யெடுத்து உடுத்திக்கொண்டனர். துத்தமனென்னுங் காந்தருவன்மாத்திரம் இறுமாந்து சிறிதேனு மச்சமில்லாமலும் நாணமில்லாமலும் அசட்டைசெய்து நிற்கக்கண்ட மகாரிஷிகளியாவருங் கோபங்கொண்டு, கண்களில் தீயெழ நோக்கி, அடா காந்தர்வா, நீ யெங்கள் வரவுகண்டும் நிர்வாணமாய்நின் றெங்களை யலட்சியஞ்செய்தமையால் அரக்கனாகக் கடவையென்று சபித்தனர்.

தபோதனர்களாற் கொடுக்கப்பட்ட சாபத்தைத் துத்தமன் கோடைகாலத்திடி முழக்கங்கேட்ட கட்செவிபோலும், அரிமாவென்னுஞ் சிங்கத்தின் கர்ஜனைகேட்ட யானைபோலுங் கேட்டு நடுங்கி, உள்ளம்பதைத்து, யாதுந் தோன்றாமற் சித்திரப்பாவையென நின்றனன். இப்படி நிற்கிற மனைவனைக் கண்ட காந்தருவமாதர் யாவரு மிரக்கங்கொண்டு, அந்தோ அரசே; என்செய்வோம், உம்மைவிட் டெவ்வா றய்வோம். நீர் அம்மகாமுனிவர்களை அணைந்து அவர்கள் பாதபத்மங்களிற் சரணாகதியென் றடைந்தால், உமது குற்றத்தை மன்னித்தருள்கொள்வரன்றோ, மேலும், "சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம், பெரியோராயிற் பொறுப்பதுகடனே" என்னும் நீதிவாக்கியமிருக்கின்றமையால் எவ்விதமும் க்ஷமிப்பார்கள்,

போய்ப் பணியுமென் றுரைத்தனர். அதைக்கேட்ட துத்தமன், முனிவரர் சாபத்தினால் திக்பிரமைகொண்டு யாதுந் தோன்றாது நிற்க, அம்மாதர்கள் மனமவெதும்பித் துக்கசாகரத்திலாழ்ந்து, நாயகனைவிட்டுப் பிரியமாட்டாதவர்களா யாவரு மொருமித்துக்கூடி, வசிஷ்டர்முதலிய முனிவர்களை யொருங்கிக் கண்ணீர் விடுத்துச சண்டமாருதத்தாற் சாய்ந்த தாபராதிகளைப்போல் இருடிகளது பாதபத்மங்களிற்சாய்ந்து, தேவரீர்பெருமை தெரியாமையினாற் செய்த துத்தமனது அபசாரத்தை மன்னித்து, விமோசனஞ் செய்யவேண்டுமென்று அநேகமாய்த் துதித்துப் பாதத்தடியிற் பணிய, வசிஷ்டர் முதலிய யாவருங் கூறுவார்கள்.

பெண்களே, இக்கொடியவனாகிய துத்தமன் எங்களால் நேரிட்ட சாபத்தை யநுபவித்தாலொழியத் தீராது, ஆகிலும் உங்களை வேண்டிச்சொல்லுகின்றோம், இவன் இந்த அரக்கவுருவத்துடனே பதினாறுவருடம் வரையில் நரமாமிசமுதலிய ஜீவ இம்சையாற் பசிதணித் துலாவி, பின்னர் முடிவில் சிறப்போங்கிய சேதுவி லிருக்கப்பட்ட சக்கரதீர்த்தக்கரையில் தவஞ்செய்துகொண்டிருக்குங் காளவமுனிவனைப் பட்சணஞ் செய்யவேண்டி அவரைக் குறுகியெடுப்பான், அப்போது அம்முநிவர் நடுக்கமுற்று ஸ்ரீமந்நாராயணனைச் சிந்திப்பார். அச்சிந்தனைகேட்ட ஜகதீசன் தன்சக்கரத்தைப் பிரயோகிப்பன். அச்சக்கரம் அதிவேகத்தோடுங் கூடிவந்து இவன் சிரத்தைக்கண்டித்தவுடனே சாபவிமோசனமாகும், பின்பு காந்தர்வவுருவங்கொண்டு உங்களைச்சேர்ந்து சுகித்திருப்பானென்று சொல்லி, வசிஷ்டர் முதலிய யாவருந் தங்களாசிரமத்திற் கெழுந்தருளினர். உடனே துத்தமனாகிய காந்தர்வனும் மூன்றாம் பிறைபோன்ற வக்ரதந்தங்களும், அர்தகாரம் போன்ற தேகமும், செம்மேசம்போன்ற கேசங்களும், வளைந்த புருவமும், தீவர்த்தியைப்போன்ற கண்களும், மலைபோன்ற மூக்கும், நிலைபோன்ற நாக்குமுடையவனாய்த் தன்னை சோதித்திருந்த யாதனரைப் பசியினாற் பக்ஷிக்கவேண்டித் துரத்தினான்,

உடனே காந்தர்வமாதர் யாவருங்கண்டு நடுக்குற்று, மெய்சோர்ந்து, எவ்வணமீள்வோமென்று அதிவேகமாயோடிக் காந்தர்வலோகம்புகுந்தார்கள். அப்பால் காந்தருவனாகிய அரக்கன் காடுமலைவனம் வனாந்தரங்களிலும் காணாறுமுதலிய பல இடங்களிலும் பதிகளினும் சுடுகாடுகளினும் சூறாவளியென்னுங் காற்றைப்போற் பசிப்பிணியாற் சுழன்று, மான், மரை, காட்டானை, சிங்கம், கரடி, புலி, முட்பன்றி முதலியவற்றை யருந்தியும், பறவையினங்களைப் புசித்தும், ஜலத்தில்வாழ்கின்ற மச்சங்களை ஜலத்தோடே வாரிவாரி யருந்தியும், தனக்குச்சிக்கிய முனிவர்களைப் பிடித்துக்கொன்று தின்றும், உதிரங்களைக் குடித்தும், மலமூத்திரங்களைப் புசித்தும், ஊர்வனவாகிய ஜெந்துக்களில் மலைப்பாம்புமுதலிய சர்ப்பங்களையும், உடும்பு, மலையுடும்பு, பல்லி, அரணைகளைக் கையினாற்பிடித்துக் கடலைபோற் கொறித்தும், தன்பசிநோ யடங்காமல், ஓர்நாள் சக்கரதீர்த்தக்கரையை நாடி, அதன்கரைமேல் தருப்பாசனம் பரப்பி, அதன்மேல், அங்கவாதனமாகிய பதுமாசனஞ்செய் துட்கார்ந்து, மனத்தைச் சுத்தசத்துவத்திற்பொருத்தி ஸ்ரீமந்நாராயணனது அஷ்டாக்ஷரத்தைச் செபித்துக்கொண் டிருக்குங் காளவமுனிவனைக்கண்டு, அதிக ஆவல்கொண்டு, திடீரெனப் பாய்ந்துபற்றித்தூக்கினான், அப்போது வசிட்டரால் நியமித்த சாபத்தின் பிரமாணங்குறுகிச் சமீபித்தமையால் இவனது கர்மவிமோசன மாம்பொருட்டுக் காளவரும் மிகநடுங்கி, கருணைக்கடலாகிய திருமாலைச் சிந்திக்க, அப்போது ஆபத்பந்துவாகிய ஜகதீசன் தன் திகிரியைப் பிரயோகஞ்செய்த மாத்திரத்தில் அச்சக்கரம் கோடிசூரியப்பிரகாசமாய் ஜொலித்துக்கொண்டு அதிவேகத்தோடும்வந்து, அரக்கன்தலையைக் கண்டித்துத் தள்ள, அத்தீர்த்தத்தி லழுந்தியவுடனே, அரக்கனாகிய துத்தமனுங் காந்தர்வ சொரூபங்கொண்டு, அருகேயிருக்குங் காளவமுனிவனது பாதகமலங்களை வணங்கித் தோத்திரஞ்செய்து, சுவாமீ, தேவரீராலே அடியேனுக்குச் சாபவிமோசனங் கிடைத்ததென்று பணிந்துநிற்க, அதுகண்ட

முநிவர் சித்தங்களித்து, துத்தமனாகிய காந்தருவனைப்பார்த்துக் கூறுவார், அப்பா காந்தருவனே, உன்சாபவிமோசனம் எனக்கு மிகவும் சந்தோஷமாக இருப்பதால், நீ இந்தச் சக்கரதீர்த்தத்தில் மூழ்கென்றுசொல்ல, அதுபோல் அவனு மூழ்கியவுடனே, தெய்வலோகத்திலிருந்து விமானம்வர, அதன்மீதேறிக் காளவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, காந்தர்வலோகம் போய்ச்சேர்ந்து, முன்னே தன்னைவிட்டுப் பிரிந்திருந்த காந்தர்வ மாதருடனே கூடி சுகித்திருந்தான்.

இத்தன்மைவாய்ந்த சக்கரதீர்த்தம் இந்தத் தேவிபட்டணத்தில்மாத்திர மிருக்கிறதென்று யோசிக்கவேண்டாம்; இது போலவே தர்ப்பசயனத்திலும் ஒரு கடைப்பக்க மிருப்பதன்றியும் இதனது விசாலங் கிழக்குமேற்கு ஒருயோசனை யுள்ளதாயும் விளங்கியிருக்கையில், பிரமசிருட்டியிலுண்டான மலைகளுக்கெல்லாஞ் சிறகுகளிருக்கும்போது, அவைகள் லோகாலோகங்களெல்லாம் பரந்து திரிந்தும் ஊர் நாடு தேசங்களையும், கோயில் குளங்களையும் இருடிகள் வசிக்கும் பன்னசாலை முதலிய மடங்களையும் இராக்காலங்களிலும் பகற்காலங்களிலும் ஆகாயமார்க்கமாய்ப் பறந்துவந்து, திடீரென்று கீழே தாழ்ந்து, யாவற்றையும் நாசப்படுத்திக்கொண்டு திரிந்ததுமல்லாமல்யாவருக்குந் துன்பத்தைக்கொடுக்க, உலகிலுள்ள தபோதனராகிய இருடிகண் முதலிய யாவருந் தேவர்கட் கிறைவனாகிய இந்திரனிடத்தில் முறையிட, அம்முறைகேட்ட தேவராஜனுங் கோபங்கொண்டு, வச்சிராயுதபாணியாய் பூலோகத்திலே ப்ரவேசித்துப் பார்த்து உண்மையெனக் கொண்டு, ஆகாயவீதியிலெழும்பிவரும் பருவதங்களையெல்லாம் வளைத்துச் சின்னபின்னப்படுத்தியும், சிறகுகளை வெட்டியெறிந்தும், பலவிதமாகத் துன்பப்படுத்துகையில், அவற்றிலோர்மலை தன் இரண்டு செட்டைகளு மிழந்தமையால், ஆகாயத்தினின்றும் பூமியில் பிரகாசித்துக்கொண்டிருக்குஞ் சக்கரதீர்த்தத்தில் வீழ்ந்து அழுந்திப்போனபடியால், அம்மலையால் திட்டாகிய

இடந்தவிர இரண்டு கடைப்பக்கமுங் கொஞ்சமிருந்த தீர்த் தந்தானிப்போது நவபாஷாணத்திலும் தர்ப்பசயனத்திலும் விளங்கிக்கொண் டிருக்கின்றது. இதுவல்லாமலும் இச் சக்கர தீர்த்தத்தில் அஷ்டவசுக்களி லொருவனாகிய விதூமனென்ப வனும் அலம்புசை யென்னு மோரரம்பை மாதுக்கும் நர ராகஜனிக்கும்படிப் பிரமதேவனால் நேரிட்டசாபமும் விமோ சனமா யிருக்கின்றதென்று சூதமுனிவன் சொல்ல, நைமிசா ரண்ய வாசிகளாகிய முனிவர்கள்கேட்டு ஆனந்தித்ததோடும், பிரம்மதேவனால் அஷ்டவசுக்களி லொருவனாகிய விதூமனுக் கும அலம்புசையென்னுந் தெய்வலோகத்துக் கணிகைமாதுக் கும மானிடவகையாய்ச் சாபம்நேரிட்டதோ, அதையும், அவ் விருவரும் பூலோகத்தில் எப்படி உற்பவித்தாரோ அதையும் தேவரீர் திருவாயமலர்ந்தருள வேண்டுமென்று கேட்கச சூத முனிவர் சொல்லத்தொடங்கினர்.

துத்தமச்சருக்கம்
முற்றுப்பெற்றது.

---

## விதூமச்சருக்கம்.

நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்களே, ஸ்ரீவைகுண்ட வாசனாகவும, சர்வாந்தரியாமியாகவும், சகலபுவன கர்த்தாவாக வும், அனுதிவஸ்துவாகவும், ஆதிமூலப்பொருளாகவும், அஷ் டாக்ஷரனாகவும், அடியார்க ளெளியனாய் திருவருள் சுரந் தாட்கொள்ளும் ஸ்ரீமந்நாராயணனருளா லிலங்கும் அண்டப் பரப்பின்கண் ஓங்கும் அசராசரங்களைப் படைக்கும்பொருட்டு ஓர் புதல்வனைவேண்டித் தன் உந்தியாகிய பத்மத்தினின்றுஞ் ஜனிப்பித்து, பிரமலோகத்துக் கதிபதியாக்கப்பட்டுக் கலைமகள் சமேதனாய் விளங்கும் சதுர்முகப் பிரமனென்னுஞ் சிருஷ்டி கர்த்தனும், அமராவதிக்கிறைவனாகிய தேவேந்திரனும், முப் பத்துமுக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷி களும், கின்னரர் கிம்புருடர் கருடர் காந்தருவர் தும்புருநார

தர் சித்தர் வித்யாதரர் பன்னகருரக சாரணர்களும், நவகோடி சித்தரும், சப்தரிஷிகளும், அஷ்டவசுக்கள் அஷ்டதிக்குப்பாலகாள்முதலிய தேவதேவருஞ் சூழ்ந்தகாலையில், கணக்கூட்டங்களணியணியாய் நின்று, ஆலவட்டந் தாலவட்டம் முத்துக்குடை பீலிக்குடைகளை கவிக்க, சாமரை களாஞ்சி கின்னரி தம்புரு சுரமண்டலி வீணை முகவீணைகளும், காகளபூரி பேரி தவுண்டை துத்தாரி புள்ளாங்குழல் நாகசுர முதலிய வாச்சியங்களும் முழங்கவும், அரம்பை யூர்வசி மேனகை திலோத்தமைமுதலிய அப்சரஸ்திரீகள் பரதநாட்டிய சங்கீதம் பாடவும், இருக்கு, யசுர், சாமம், அதர்வணமென்னும் நான்கு வேதங்களும் ஒலிசெய்ய, தேவரிஷிகள்முதல் யாவரு மாசிகூறிநிற்க, மகரகுண்டல கேயூரமணி மகுடங்கள் பிரகாசிக்கப் பல்லாயிரங்கோடி அண்டபுவன சராசரங்களிலும் எறும்புகடை யானைமுதலாகிய எண்பத்துநான்கு நூறாயிரம் ஜீவாத்மாக்களின் சிரத்திலே அவரவர்களுடைய நல்வினை தீவினைகளும் எழுதப்பட்ட எழுத்தாணியானது வலக்கரத்திற் பிரகாசிக்கவும், தான் ஆரோகணிக்கு மன்னமானது கவரிமான் கற்றையைப்போன்ற தோகையும், ஒப்புவமையில்லா வளைப்போங்கிய சிரமும், பவளம்போன்ற கால்களும், மெல்லிய வடிகளும் ப்ரகாசிக்கத்தக்கதாகவும், சத்தியலோகத்திலே பிரமதேவன் கொலுமண்டபத்தி லெழுந்தருளி யிருக்கும்போது, அரம்பாஸ்திரீகளில் அலம்புசை யென்பவள் பரத சாஸ்திர விதிப்படி சுத்தமத்தளம் புள்ளாங்குழலோடுங் காலகதி பிறழாமல் நடனஞ் செய்கையில், அந்நடன சிங்காரத்தை விநோத விசித்திரமாகப் பிரமதேவன்முதலிய யாவரும் கண் இமையாமலும் வாய்பேசாமலும் கரசரணாதிக ளசையாமலும் பிரமைகொண்டவர்போற் பார்த்துக்கொண் டிருக்கையில், அலம்புசையின் தேகலாவண்ய விசித்ரவஸ்திரத்தை வாயுபகவான் விளையாட்டுநிமித்தம் அவிழ்ந்து கீழேவிழும்படி செய்தமையால், அம்மாது நிர்வாணமாய் அதிநாணத்தோடும் நிற்க, பிரமன்முதலிய தேவர்களியாவரும் வெட்கித் தலைகுனிந்

திருக்க, அவள்நடிக்கையி லவன்மீது அதிமோகத்தைக் கொண்டும் தான்கொண்ட மோகக்குறிப்பை யவளறியக் காட்டியுந் தானும் மோகங்கொள்ளவுமாய் இப்படி யிருவரு மொருவர்க்கொருவர் கொண்ட மையலையறிந்த மன்மதன், இருவர்மீது மலர்ப்பகழியெய்ய, அதனைச் சகிக்கமாட்டாத வனாய் மூர்ச்சித்திருந்த அஷ்டவசுக்களி லொருவனாகிய விதூம னென்பவனையும் அலம்புசையினது கோலக்களிப்பையுங் கண்ட பிரமன் உடனே விதூமனையும் அலம்புசையையு மழைத்து, நீங்கள் தேவசபையிலே நாணமென்பதை மோகத் தினாலே மறந்து, இத் தேவசபையிலிருக்கு மெங்களையுங் குறியாம லொருவர்க்கொருவர் கண்ஜாடைகள் செய்திருந்த மையால், இக்கணமே நீங்க ளிருவரும் பூலோகத்திலே ஸ்த்ரீ புருஷராகப் பிறந்து பாணிக்கிரகணம் பண்ணிக்கொள்ளக் கடவீரென்று சாபங்கொடுத்தனன். அவ் வுரைகேட்ட விதூ மனும் அலம்புசையும் திடுக்கிட்டு மெய்சோர்ந்து, யாதுந் தோன்றாமல் பிரமனைவணங்கிப் பலவகையாய்த் தோத்திரஞ் செய்து, சுவாமி, அடியேங்கள் செய்தபிழையைப் பொறு த்துக் காக்கவேண்டுமென்று அனேகம் வேண்டுதல்செய்தும் அஷ்டாங்கமாய் பூமியிற்படிந்தும் வருந்திநின்றனர், அவர் மீது பிரமன் கருணைகூர்ந்து சொல்லுவான்.

காமாந்தகரே, நாமிட்டசாபத்தை விலக்கக் கூடாதா யினும் நீங்களிருவரும் நம்மை வணங்கித் துன்புறுகின்றமை யால் உங்கள்மேற் கருணைகூர்ந்து புகலுவ தியாதெனின். நம் மாற்கொடுத்த சாபப்படி பூலோகத்திலேபோய்ப் பிறந்து மணஞ்செய்துகொண்டு சிலநாள் இராச்சியபரிபாலனம் பண் ணிக்கொண்டிருந்து, உங்களிருவருக்கும் பிறக்கும் பிள்ளைக் குப் பட்டாபிஷேகஞ் செய்துவைத்து, பின்னர் துறவடைந்து யாத்திரைவாசிகளாய்த் தேசசஞ்சாரஞ்செய்து வருகின்ற போது, தெட்சணபாகமாகிய தென்றிசையிலே தசரதகுமார னாகிய ஸ்ரீரகுகுலோத்துங்கனாற் செய்விக்கப்பட்ட சேது வினே விளங்குஞ் சக்கரதீர்த்தத்திலே நீங்களிருவரும் தீர்த்த

மாடுவீர், அப்படி திர்த்தமாடியபின் புடனே பாம்பின் சட்டையகன்று பளிங்காவதுபோலக் கர்மத்தாலுற்ற வுங்கள் மானிடதேகம் நீங்கிப் பழையபடியே தேவவுருவத்தோடும் பொன்னுலகம் புகுந்து வாழ்வீர்களென்று சிருஷ்டிகர்த்தா வாகிய திசைமுகன் திருவாய் மலர்ந்தருளினன், மேலும் இவ்வாறு பிரமன் பன்னியதோ ருரைகொண்ட விதூமனோடு அலம்புசையுந் 'தரைகண்டார் பிறவியதைச்சார்ந்து' என்பதற் கிணங்க பிரமனாற் கூறிய வாய்மையைக்கேட்ட விதூமன் துன்பமுற்று, பிரமனைப்பணிந்து, தன்னிருப்பிடஞ்சேர்ந்து, யாம்பூலோகத்தில் யாருக்குப் புத்திரனாகப் பிறப்போமென்று கருதித் தன் தம்பிமாராகிய மாலியவான், புட்பதந்தன், பலோற் கடனென்னு மூன்றுபேரையு மழைத்து, பிரமதேவனாற் றனக்குக்கிடைத்த சாபத்தை யறிவித்து அதன்காரணத்தை யுஞ்சொல்ல, அதுகேட்ட தம்பிமார்கள் திடுக்கிட்டு மனங் கலங்கித் துக்கசாகரத்தி லமிழ்ந்தித் தமயனைநோக்கிக் கூறு வார்கள், தேவரீர் பூலோகத்திலே மானிடயோனியிலே யுற்ப வித்துப் பிராந்தியையடைந் தெங்களையும் மறந்து தனித் திருக்க, நாங்கள் மூவருமிவ்வெவ்வா றும்மைவிட்டுப்பிரிந்து துன்பத்தை யடைந்திருப்போம், இஃதன்றியும் நாங்கள் நாணமின்றித் தெய்வசபைக் கெவ்வாறு செல்லுவோ மாதலால் நாங்களுங் கூடவே பூலோகத்திற்பிறந்து தேவரீருக் கூழியஞ்செய்துகொண் டிருக்கும்படி கட்டளையிட வேண்டு மென்று மூவரும் வணங்கிச்சொல்ல, அதுகேட்ட விதூமன், தம்பிமார்களே நான்தான் வினைப்பகுதியால் நரகத்துக்குச் சமானமாகிய மானிடயோனியி லுதித்து வினைப்போகங்களைத் தொலைக்கப் போகின்றேன் நீங்களேன் விருதாவாய் மானிட யோனியிலுதித்துத் துன்பத்தையநுபவிக்க நினைக்கின்றீர்கள், வேண்டாமென்று அநேகவிதமாய்க் கூறியுங் கேளாமை கண்டு, உங்கள்மனத்தின்படியே யெனக்குத் துணையாய் பூலோகத்திலே பிறப்பீர்களென்று கட்டளையிட, நால்வரும் அலம்புசையும் பாரிற்பிறக்க வுன்னினர்.

இவர்களிப்படி சிந்தித்துக் கொண்டிருக்குங் காலையில் பூலோகத்திலே வேதங்களாலோதும் சோமசூரியாக்கினி யென்னு முக்குலத்துள் சந்திரகுலசிகாமணியாய் தேவேந்திர குமாரனாகவும் பாண்டுவின் புதல்வனாகவுஞ் ஜனித்த அர்ச்சுன மகாராஜனுக்கு சுபத்திரையினிடமாகப் பிறந்த அபிமன்னு மகாராஜனது புதல்வன் பரிட்சித்து, பரிட்சித்துவின்புதல் வன் ஜெனமேஜெயன், ஜெனமேஜெயன் புத்திரனாகவும் கௌ சாம்பிதேசத் திறைவனாகவு மோங்குஞ் சதானீகனென்பவன், இராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டு மநுநீதியுடனே குடிக ளிடத்தில் ஆறிலொருகடமை வாங்கித் தன்னுயிர்போல மன் னுயிரையும் பாதுகாத்துத் தரணியாண்டுவரும் நாளில், தனக் குப் புத்திரப்பே றில்லாமையால் மிகவுந் துன்பமடைந்து யாதுந்தோன்று மலிருப்பதோடுந் தனது மந்திரியாகிய சுகந் தரனுக்குஞ் சேனாபதியாகிய விப்பிரதீபனுக்கும் அரண் மனைப்புரோகிதனாகிய ஞானவல்லவனென்பவனுக்கும்புத்திர பாக்கியமில்லாமல் வியாகூலப்படுவதுகண்டு, நால்வருங்கூடி யொன்று யோசித்து, தனது செங்கோற்குளடங்கிய தேசத் தைச்சார்ந்த வனத்திற் பன்னசாலை யமைத்து அதன்க ணிருந்து தவமிழைத்துக் கொண்டிருக்கும் சண்டில மகா ரிஷியை யழைத்துவந்து, புத்திரகாமேஷ்டியாகஞ் செய்யக் கருதி, அப்படியே யாகநிறைவேற்றிப் பூரணாகுதிசெய்து, அவரவரது மனைவிமார்களுக்குப் பிண்டங்கொடுக்க யத்த னித்தபோது, பிரமஞானமுடைய வம்முநிவரர், தெய்வ லோகத்திற் பிரமனுடைய சாபத்தால் புவியிற் பிறக்கவேண் டிச் சிந்தித்துக் கொண்டிருக்கின்ற விதூமன்முதலிய நான்கு பேரையும் நான்கு பிண்டத்திலே தியானித்துக்கொடுத்தார், அதுபோ லவர்களுடைய மாதரும் அன்றுமுதற் கெர்ப்ப மாகவிருந்து, பூரணமானவுடன், சதானீகனுடைய தேவி யாகிய விந்துமோமதி வயிற்றிலே விதூமனும், சுகந்தரன் மனைவியாகிய சந்திரதீபிகைவயிற்றிலே மாலியவானும், விப்ர தீபன்மனைவியாகிய சுகந்தலாவண்ணி வயிற்றிலேபுட்பகந்தனும்,

சூர்னவல்லவனுடைய மனைவியாகிய சுகந்தராவதி வயிற்றிலே பவோர்களுடனும்வந்து பிறந்தனர், இவ்வகையாய் ஜனித்தவர்களுள் இராஜகுமாரனுக்கு சகத்திராநீகனென்றும் மந்திரிகுமாரனுக்கு யூகவல்லவனென்றும், சேனாபதிகுமாரனுக்குச் சதுரங்கனென்றும், புரோகிதகுமாரனுக்கு வசந்தனென்றும் நாமகரணஞ்செய்து நாளொருவண்ணமும் பொழுதொரு மேனியுமாக வளர்த்துவந்தனர். இவ்வண்ணம் வளர்ந்துவரும் பிள்ளைகளுக்கு ஐந்துவயது பூரணமாகுங்காலையில், அயோத்தியா பட்டணத்துக் கிறைவனாகிய கிருதவன்மாவென்னு மரசன் புத்ரபாக்கிய மில்லாதவனாய்த் தவஞ்செய்ய அவன் மனைவி மனோவதியென்பவள் வயிற்றிலே அலம்புசையென்னு மரம்பாஸ்திரீ மிருகாவதி யென்னும் பெயரையுடைய பெண்ணாய்ப் பிறந்து வளர்ந்துவருகையில், தெய்வலோகத்திற் பாம்புப் பல்லனென்னு மிராக்கதனும் அவன் தம்பியாகிய தூலசென்னியனும் தெய்வநாயகனாகிய இந்திரனையெதிர்த்து யுத்தஞ்செய்கையி லப்போது தேவேந்திரனுக் கவர்களை வெல்ல முடியாது பூலோகத்தில் கௌசாம்பி தேசத்திற் கிறைவனாகிய சதாநீகனென்னும் வேந்தன் புஜபலபராக்ரமசாலியென்று கேள்வியுற்று அவனை அழைத்துவரும்படியாகத் தன்சாரதியைத் தேர்கொண்டு போகும்படி உத்தரவளிக்க, அவனு மப்படியேகொண்டுபோய் பூலோகத்திலிருக்குஞ் சதாநீகனுக் கறிவித்து, இரதத்தின்மீ தேற்றிக்கொண்டு தெய்வலோகத்திற்குப்போய்த் தேவராஜன்முன்பாக விடுத்தனன். அப்போது தேவேந்திரனும் பூலோகத்தரசனாகிய சதாநீகன் சவுரியங்களையுந் தேயசுகளையுங்கண்டு தன்னிடமிருக்கு மந்திரிமார் மூவர்களி லிவனுமொருவனாகவிருக்க மந்திரிபட்டங்கட்டி முடிசூட்டிச் சிலசயின்யங்களுடனே தானும் சதாநீகனுமாய் புறப்பட்டுப் பாம்புப்பல்லன் தூலசென்னியனென்னு மரக்கருட னெதிர்த்து யுத்தஞ்செய்யும்போது, தொந்தயுத்தத்திலே பாம்புப்பல்லனையும் தூலசென்னியனையும் சதாநீகன் கொன்று பொன்னுலகத் திறைவனாகிய

தேவேந்திரனுக்குச் சதானீகன் வெற்றிமாலையைச் சூட்டி
னன். அதுகண்ட இந்திரன் சந்தோஷமடைந்து ஜெயமுரச
சறைந்து சதானீகனுடனே அமராவதிப்பட்டணம் வந்து
சேர்ந்து சதானீகனை மிகக் காதலோடும் நேசித்து வருகின்ற
நாளில், பிரமகற்பனைப்படி சதானீகன் மரணமடைந்தான்,
அதுகண்டு இந்திரன் இரக்கமுற்று அவனுடைய ஆத்மா
வுக்கு தேவரூபத்தைக் கொடுத்து வைத்துக்கொண்டு தூலத்
தைக் கௌசாம்பிய தேசத்திலிருக்கப்பட்ட அவன்குமார
னாகிய சகத்திரானீக னிடத்திற்கு அனுப்பிவிட்டான் அது
கண்ட புதல்வனும் அவன் தாயும் மந்திரிமுதலிய யாவரும்
வருத்தமடைந்து செய்யும் விதிமுறையாவும் வழுவின்றிச்
செய்து, பின்னர் சதானீகனுக்கு இல்லாளாக விருந்த விண்டு
மாவதி நாயகனில்லாளாக விருந்தாள். பின்பு இராச்சியத்துக்
கரசனில்லாமையால் சதானீகனது மந்திரிமார்களுஞ் சில பெரி
யோர்களுங்கூடி மந்திராலோசனைசெய்து அரசன் புதல்வனா
கிய சகத்திரானீகனுக்கு நல்ல சுபமுகூர்த்தத்தில் பட்டாபி
ஷேகஞ்செய்து முடிசூட்டிவைத்தார்கள். அப்படிவைத்தபின்
தன் தந்தையினும் எண்மடங் கதிகமாய் மநுநீதி வழுவாமல்
இராஜரீகஞ் செய்துவருநாளில், சில நாட்களுக்குள், தந்தை
யரசாளுகையிலிருந்த முதியோர்களாகிய மந்திரி சேனாபதி
புரோகிதன் இம்மூவரும் மரணகாலமடைய, அதுகண்ட
சகத்திரானீகன் தனது ஆளுகைக்கு மந்திரி முதலிய யாவரும்
வேண்டியிருப்பதால் இறந்தவர்களது புதல்வராகிய மூவர்
களில் யூகைவல்லவனைத் தனக்கு மந்திரியாகவும் சதுரங்கனைச்
சேனாதிபதியாகவும் வசந்தனைப் புரோகிதனாகவு மமைத்து
இரதகஜ துரகபதாதிகளென்னும் நால்வகைச் சேனைகள்சூழ
எண்டிசையுங் கீர்த்தியோங்கத்தக்கதாய்ச் செங்கோ னடாத்தி
வருகையில், தேவேந்திரன் தெய்வலோகத்தில் தனக்கா யேற்
படுத்தியிருக்கின்ற காண்டாவனத்தில் நந்தவனச்சிங்காரம்
பார்க்கும்படியாய் சகத்திரானீகனைக் கூட்டிவரும்படி தூது
வனுக்கு ஆஞ்ஞைசெய்ய, அவ்வாறே தூதுவர்களும் பூலோ

கத்திற்குப்போய் சகத்திரானீகனைக்கண் டுரைக்க, அதற் கவனுஞ் சந்தோஷித்தனாய் இரதமேறித் தெய்வலோகம் போய்ச்சேர்ந்து தேவேந்திரனைக்கண்டு வணங்கினான். தேவே ந்திரனும் வந்தபுதல்வனுக்கு வேண்டிய வெகுமதிகளுஞ் செய்து நந்தவனங்களையெல்லாங் காண்பித்து அவன் தகப்பன் சதானீகன் தேவரூபம்பெற் றிருப்பதையுங் காண்பித்தான். அப்படி காட்டியமாத்திரத்தில் சகத்திராநீகன் மிகவுஞ் சந்தோஷமடைந்து தகப்பனைக் கண்ணினாற்கண்டு இந்திரன் சபையி லிருக்கும்போது அச்சபையில் நடனஞ்செய்து கொண்டு நிற்கிற திலோத்தமையின்மேல் மோகங்கொள்ள, அவளு மிவன்மீது மோகமுற, இக்குறிப்புகளையெல்லா முண ர்ந்த தேவராஜன் குறுநகைசெய்து, ஏதோ மாச்சர்யமாயோர் கதை சொல்லுவதுபோல முன்னடந்த சவிஸ்தார மெல்லாந் தெரியச்சொல்லி, உனக்கு மனைவியாகும்படியாய் அலம்புசை யென்னு மரம்பாஸ்திரீ அயோத்தியாபட்டணத்திலே, மிருகா வதி யென்னும் பெயருடையவளாயப் பிறந்திருக்கின்றனள், அவளுடைய ரூபலாவண்யத்தைச் சேடனாலுஞ் செப்பிமுடி யாது, அப்படிப்பட்ட ரூபவதியை உனக்கு நாயகியாய்ப் பிரமன் விதித்திருப்பதினாலே நீ பூலோகஞ்சென்று அவளை மனைவியாக்கிக்கொள்ளென்று உத்தரவுகொடுத் தனுப்ப, அவ் வார்த்தையைக்கேட்ட சகத்திராநீகனுக்கு தேவேந்திரனால் வர்ணித்துச் சொல்லப்பட்ட அலம்புசையென்னும் அரம்பா ஸ்திரீயினது வனப்பின்கண்ணேசென்ற மனத்தைத் திருப்ப அசக்தனாய், அதிகாதல்மீறி, எப்போது அவளைக்கூடுவோ மென ஏக்கங்கொண்டு தேவராஜனிடம் விடைபெற்றுத் தன் பட்டணத்துக்கு மீண்டுவருகையில், அங்குள்ள பூங்காவனத் தில், திலோத்தமை யென்னுந் தெய்வகணிகை நின்றிருந்தவ ளாய் பூலோகத்திற்குச் செல்லுஞ் சகத்திராநீகனை வழிமறித் துச சொல்லுவாள், தேவரீர்; இந்திரன்சபையிலே நடித்து நின்ற என்மீது மோகங்கொள்ள யானும் தங்கண்மீது மோக முற்றுச் சகியாதவளாய்க் காமநோயால் வருந்துகின்றமையால்,

சித்தமிரங்கி இப்பூங்காவனத்திலென்னைக்கூடிச்சுகித்தென்மீதமர்செய்யு மனங்கனைக் கனங்குலைந்தோடும்படியாய்க் கருணைசெய்வீரென்று கூறுந் திலோத்தமையினது மொழியைத் தினைத்துணையேனுங் காதிற்கொள்ளாதவனாய் ஏறிட்டும்பாராதவனாய்த் தன்பட்டணத்தைநோக்கி மிருகாவதியின்மேல் மோகமாய் திரும்பிவிட்டான். அப்போது திலோத்தமையானவள் அதிவிரகத்தால் மனமானது கொதிப்பேறித் தன் சொல்லையுந் தான்கொண்ட காதலையுந் தணிக்காமற் செல்லும் வேந்தனைநோக்கிக் கூறுவாள், வேந்தே! பெண்ணாகிய யான் உன்மீது மால்கொண்டு தியங்கிச்சேரும்படியாக விரைந்து கூறு மெனதுவார்த்தையைக் கேளாமலும் என்முகத்தைப் பாராமலும் போகின்றமையால், நீயும் உனது பெண்சாதியுங் கூடிச் சுகித்துவாழ்கையில் அவள்முகத்தில் நீ விழியாமலும் உன்முகத்தில் அவள் விழியாமலும் பதினாலுவருடம் வரையிற் பிரிந்திருக்கக் கடவீர்களென்று சாபங்கொடுத்தாள். அவ்வாறு கடுங்கோபத்தாற்கூறிய திலோத்தமையின் சாபத்தையுங் கேளாதவனாய் வாயுவினுங்கொடிய வேகமாய்த் தன் கௌசாம்பியபுரியென்னும் பட்டணத்தைச் சேர்ந்தான். அவ்வாறுசேர்ந்த சகத்திரானீகன் தன்மந்திரியாகிய யூகைவல்லவனை யழைத்து அருகேவைத்துக்கொண்டு, தான் தெய்வலோகம்போயிருக்கையி லங்கு தேவராஜனாற் சொல்லப்பட்ட அலம்புசையென்னும் பெண்ணை நான் அணைந்தாலல்லதெனது ஆவி தரியாது, என்செய்வேன். பஞ்சபாணனது சமரினின்று மெப்படியுய்வேன், எனது மதியூகியாகிய மந்திரியேயென்று கவலையுறுங் காவலனை மந்திரிபணிந்து கூறுவான், அரசே! தங்களுக்கு இந்திரனாற் சொல்லப்பட்ட பெண் எவ்வுலகவாசியோ வறியோம் என்று கூறிய மந்திரியைநோக்கி, அப்பா, இவ்வுலகின்கண் எனதாருயிர்த் துணைபோன்ற யூகைவல்லவனே, யான் காதல்கொண்டிருக்கும் அலம்புசை என்னுமர்ம்பையானவள் அயோத்தியாபட்டணத்தில் கோடிசந்திரவண்யம்போன்ற வதனமும், கரும்புயலையுங் காளகோடி

விஷத்தையும் அல்லியும் யானைக்கூட்டத்தையும் ஆலம்விழு தையும்பழித்த கூந்தலும், இந்திரதநுவையொத்த புருவமும், மானையுஞ் சேல்மீனையும் ஒள்ளியவேலையும் நீலோற்பலத்தை யும்பழித்த கண்களும், மகரத்தைப்பழித்த செவிகளும், எள் ளிளம்பூவைப்போன்ற அழகிய நாசியும் கண்ணாடிபோன்ற கன்னங்களும், பவளத்துண்டையுங் கொவ்வைக்கனியையும் நிகர்த்த அதரமும், வலம்புரிச்சங்கம்போன்ற கழுத்தும், மூங் கிற்கணுவையொத்த தோட்களும், மேருவையுந் தங்கக்கிண் ணத்தையும் யானையினுடைய மத்தகத்தையும் தென்னங் குரும்பையையும் கூவிளங்கனியையும் பம்பரத்தையும் பங் கையும் பூச்செண்டையும் புற்புதத்தையும்பழித்த குசங்க ளும், நீர்ச்சுழியைப்போன்ற வுந்திக்கமலமும், சிங்கத்தையுங் கொடிமின்னலையும் உடுக்கையையும்பழித் திலகாநின்ற இடை யும், பாம்பின்படம்போன்ற வல்குலும், கதலியைப்பழித்த தொடைகளும், அலவனைப்பழிக்கு முழந்தாளும், வரால் மீனைப்போன்றகெண்டைக்கால்களும், செம்பஞ்சைப்போன்ற புறந்தாளும், தராசைப்போன்ற பரடுகளும், சண்பகமலரைப் போன்ற தேககாந்தியும், பிடியானையைப்போன்ற நடையும் படைத்து, மிருகாவதி யென்னும் அழகிய பெயர்வாய்ந்து, என்மனதைக் கவர்ந்துபோய் வைத்திருப்பதால் அம்மங்கை யை யான் மணமாலை சூட்டும்படி யிசைவிப்பாயென்ன, அது போல் பூதைகவல்லவனென்று மந்திரி வேந்தனிடம் விடை பெற்றுக்கொண்டு, தானுஞ் சில பெரியோர்களாகிய பிராம ணருங்கூடி வாகனருடராய்ப் பிரயாணப்பட்டுக் காடுமலை வனம் வனாந்தரங் காறு முதலிய யாவுங்கடந்து, அயோத் தியாபுரிசேர்ந்து அவ்வரண்மனைவாயிற் காவலாளிகளிடந் தங் கள்வரவைத் தெரிவித்து, அரசன் ஆஞ்ஞையின்மீது கொலு மண்டபஞ்சேர்ந்து, பெரியோர்களாகிய பிராமணர் வேந்த னைக்கண் டாசிகூறியும் பூதைகவல்லவனென்று மந்திரி பணிந் தும் அங்குள்ள வாசனங்களிலாரோகணித்து அரசனைநோக்கி, சகத்திராணிகனுடைய ரூபலாவண்ய சவுந்தரிய குணாதிசயங்

களையும் புஜபலபராக்ரமங்களையும் குலவரன்முறையாவுஞ் சாங்கோபாங்கமாய்த் தெரிவித்து, வேந்தனைச் சம்மதிக்கும் படியாய்ச்செய்து முத்துச்சிவிகையிலேற்றிச் சில படைக ளோடுங் கௌசாம்பியதேசத்துக் கழைத்துவந்து நல்ல சுப முகூர்த்தத்தில் செய்முறையாதும் பிறழாது, முப்பத்திரண்டு மேளவாத்தியங்களுந் தாம்தாமென்று முழங்க மிருகாவதி யென்னு மணங்கைச் சகத்திராநீகனுக்குப் பாணிக்கிரகணஞ் செய்து அவ்விருவரும் நிலாமணிமுற்றத்தினின்று இரதியும் மன்மதனும்போலும் மானுங் கலையும்போலும் அன்னமும் பேடும்போலுங் கூடி இன்பசுகங்களை யநுபவித்துக்கொண்டு அளவில்லாத போகபாக்கியங்களோடு மருவிக் குலாவிவாழ்ந்து வருநாளில், பொன்போன்ற காந்தியைத் தராநின்ற மிருகாவதி யின்மேனி பூரணசந்திரனைப்போல் வெளுத்தநிறங்கொடுத்து, நிமிர்ந்து விம்மிப் பூரித்து வட்டமிட்டுத் தங்கக்கிண்ணத்தை யொத்த கனதனத்தினது அஞ்சூராணிபோன்ற முலை முகங் கறுத்துப் புயல்போலொளிரவும், கைத்தல் புளித்தல் கார்த் தல் உவர்த்தல் துவர்த்தல் தித்தித்தலென்னும் அறுசுவையில் புளித்தலையே நனி காதல்கொள்ளும் பருவமாகிய காலமும் நெருங்கிக் கருப்பிணியாயிருக்குஞ் சங்கையை, நாயகனாகிய சகத்திராநீகனறிந்து, தன்னுளுகைக்குள்ளடங்கிய தேசங் களுக்கெல்லாம் வரியிறை வேண்டாமென்று நிறுத்தி, அது முதல் அறநெறியினின்றும் ஆதுலர்க்குச் சாலை, ஓதுவார்க் குணவு, அறுசமயத்தார்க் குண்டி, சிறைச்சோறு, ஐயம், தின் பண்டநல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவுவளர் த்தல், அறவைப்பிணஞ்சுடுதல், சுண்ணம்பு, நோய்மருந்து, வண்ணான், நாவிதன், கண்ணாடி, காதோலை, கண்மருந்து, தலைக்கெண்ணெய், பெண்போகம், பிறர்துயர்காத்தல், தண் ணீர்ப்பந்தல், மடம், தடம், சோலை, ஆவுறிஞ்சுதறி, விலங்கிற் குணவு, ஏறுவிடுத்தல், விலைகொடுத்துயிர்காத்தல், கன்னிகா தானம், இவ்வகையாகிய முப்பத்திரண்டு தருமங்களையும் யாவரு மறநுஞ்திக்கும்படி தினப்படிசெய்து சொர்ணத்தியாகி

யாய் இன்னிசைக்குயில்போன்ற மிருகாவதியைக் கணப்போதெனினும்பிரியாமல் இன்பக்கடலுட்டாழ்ந்து, இனிதுவாழ்ந்திருக்கையி லோர்நாள், கெர்ப்பவதியாகிய மிருகாவதி பூங்காவனத்துக்குச்சென்று ஓர் தடாகத்திலிறங்கிச் சலக்கிரீடைசெய்யவேண்டுமென் றுவல்கொண்டு தன்மணாளனுக்கறிவிக்க, அதுபோல் வேந்தனு மப்பூங்காவனத்திலுள்ள வோர் பொய்கையில் திவ்யவாசம்பொருந்திய குசும்பாப் பொடியையுங் குங்குமங்களையுங்கரைத்து இளஞ்சூரியனைப்போற் பிரகாசிக்கும்படிச்செய்து அந்தப்புரத்துக்கும் பூங்காவனத்துக்கும் புட்பங்களைப்பரப்பி மெல்லிய பட்டாடைகளை யதன்மேல் விரித்துச் சேடியர்கள் நான்குபக்கமுஞ் சூழ்ந்து கைலாகு கொடுத்துவரவும், மயில்விசிறிவீசிப் பனிநீர்தெளிக்கத் தனது நாயகனுடனே பூங்காவனம்போய்ச்சேர்ந்து பொய்கையிலிறங்கித் தானுமத் தனதுமணாளனும் நிர்வாணிகளாய் ஜலத்தில் விளையாடுகையில், அப்பொய்கையிற் கொட்டிக்கலந்திருந்த குசும்பாப்பொடியுங் குங்குமமும் இவ்விருவர்களது தேகத்திலூறிச் சுவறியிருந்தமையால் பொன்போலிருந்த தேகம் செக்கர்வானம்போலும் வர்ன்னரேக்கைப்போலும் பிரகாசிக்க, சகத்திரானீகனைத் தடாகத்தில் விடுத்துத் தான்மாத்திரந் தனிமையாய்க் கரையேறிநின்றாள். மிருகாவதியானவள் அக்காலையில் ஆகாயமார்க்கமாய் இரைவேண்டி வட்டமிட்டுக்கொண்டிருந்த மகிடனென்னும் அண்டரண்டபட்சியானது மிருகாவதியினது சரீரத்தை மாமிசமென்று கருதியும், நமக்கின்று நல்லவுணவு கிடைத்ததென்றுந் தாழ்ந்து திடீரெனப்பாய்ந்து காலினலெற்றி யிடுக்கிக்கொண்டு ஆகாயமார்க்கத்திற் பறந்து உதயகிரியிலே கொண்டுபோய் அதன்சார்பி லிறங்கிப் பார்க்கும்போது, நரஜன்மமான பெண்ணாயிருந்தமைகண்டு, அங்ஙனே விட்டுவிட்டுத் தன்னிச்சையாய்ப் பறந்துபோய்விட்டது. பின்னர் மிருகாவதி அகஸ்மாத்தாய் தனக்கு இன்னதெனத் தோன்றாமற் பட்சியினதுகாலி லிடுக்கப்பட்டு ஆகாயவீதியி லெழும்புகையில் மூர்ச்சைகொண்டிருந்தமையால் அப்

பட்சி தன்னைவிட்டுநீங்கிய வோர்கடிகைப்போதுக்குள், அம் மூர்ச்சைதெளிந்து கண்விழித்துப்பார்த்துச் சித்தம்பிரமித்து, யாதுந் தோன்றாதவளாய், தன்கணவனையுஞ் சேடிகளையும் ஜலக்கிரீடைசெய்த தடாகத்தையுங்காணாது, பருவதத்தின் மேல் காடி புலி சிங்கமுதலிய மிருகக்கூட்டங்கள் வாசஞ்செய் யும்படியாகிய தானமாய் பயங்கரமாகிய அடர்ந்தகாக்கள் சூழ்ந்துஞ் சூரியனதுகிரணமுந் தோன்றாது இருப்பதுகண்டு, மிகவுஞ் சிந்தாக்ராந்தியாய், நமதுநாயகர் ஏதோ நெடுநாள் நம்மை வஞ்சிக்கக்கருதி இவ்வாறு செய்தனரோ, கணப்போ தேனும் பிரியாதவர் கானகத்தில் நம்மையெப்படிக் கைவிட் டார், அவர்சித்தத்துக்குப் பாபியாகிய யான் யாதுங் குறை செய்தறியேனே, தெய்வமே, இதற்கோ யான் ஜலக்கிரீடை செய்ய வாசைகொண்டேன், என்செய்கேன், எவ்வித மிவ் வனத்தினின்று மீடேறுவேன், ஓ பிரமனே, இதுவும் நின் திருவுளச்செயலோ, வஸ்திரமுமில்லாமல் மெய்யைக் கை கொண்டுமூடும் மிடிக்காளானேனே, தெய்வமே தெய்வமே யென்றும், பின்னும் நாம்இதுபரியந்தம் நாயகனோடு கூடிவாழ் ந்த வாழ்நாளெல்லாஞ் சொப்பனம்போ லிருக்கின்றதே, என் ஜென்மப்பிரகிருதியே யிப்படிதானோ, பிரமன் இக்கோலத் தோடுதா னம்மைச் சிருஷ்டித்தானோ, இல்லாவிடில் நான் ஜலக்கிரீடைசெய்த குளமும் பூங்காவனமும் கோட்டைக் கொத்தளமும் அரண்மனையும் நாயகனோடு சுகித்துச் சல்லாப லீலைபுரிந்திருந்த நிலாமணிமுற்ற முதலிய யாவுங் காணமற் கானலின்நீர்போல் மறைந்துவிட்டதே, ஐயோ என்காலிற் பட்டதைக் கண்ணிற்பட்டதுபோலும் உடலும் உயிரும்போ லும் பாலும்நீரும்போலும் பூவுமணமும்போலும் எள்ளும் நெய்போலும் கரும்புஞ்சுவையும்போலுங் கலந்து வாழ்ந்த மணாளன் கானகத்திற் றனியாயும் வஸ்திரபங்கமாயும் வஞ் சித்து விட்டுப்போக யாச்செய்த கற்பனையோ, அந்தோ தெய் வமே, இக்கானகத்தில் ஒருவரையுங் காணேமே, நாம்வாழ்ந்த பதியெத்தனைதூர மிருக்கின்றதோ, வீரகண்டாமணிபொருந்

திய பாதபத்மங்களையுடைய நமது நாயகனது விசாலம் பொருந்திய மார்பும் இமாசலம்போன்ற திணிந்தபுயங்களும் பூரணசந்திரோதயம்போன்ற முகாரவிந்தமும் நானெப்போது காண்பேனோவென்று அழுது கூக்குரலிட்டு முகத்திலும் வாயிலும் மார்பிலு மறைந்து புலம்புகின்ற சத்தங் கேட்டு, அவ்வனத்தில் வாசஞ்செய்கின்றமிருகக்கூட்டங்களும் பறவைக்கூட்டங்களும் நெருங்கிநின்றுபார்த்து, மறுபடியு மோடிப்போய்விடும், இவ்வாறு அணியாய்வந்து பார்க்கும்படியான மிருகங்களைக்கண்டு, நாம் இப்படித் துன்பப்படுவதைப்பார்க்கிலும் இம்மிருகங்களுக்கு இரையாகிவிடுவதே நலமென்று மனத்தை திடப்படுத்திக்கொண்டு, அம்மிருகங்களின் அருகே யோடுவாள், அவைகள் ஐயறிவோடுங்கூடிய மிருகங்களாக விருந்தபோதிலும் இவள் தேவபிண்டமென்றும் இவளையாம் இச்சிக்கப்போகாதென்றுஞ் சிந்தித்து பயந்தோடும், இப்படி மிருகாவதி தனது பிராணனைப்போக்குவதற்கெவ்விதமுமில்லாமல் பிரலாபித்துக்கொண் டிருக்கும்போது, அவ்வரணியத்தில் நீடூழியாய்த் தவஞ்செய்துகொண் டிருக்கும் ஓர்முனிவருடைய குமாரன் இவள் பிரலாபிக்கு மோசையைக் கேட்டு, அவ்வோசையின்வழியே நாடிவந்து, மிருகாவதியைக் கண்டு, இரக்கங்கொண்டு, அருட்கடலாகிய ஜமதக்கினிமுனிவரிட மிவளைக்கொண்டுபோய் விடுவோமென்று அழைத்துக் கொண்டுபோய் அவரிடத்தில்விட, அதுகண்ட ஜமதக்கினி முனிவர் மிருகாவதியினுடைய சவிஸ்தாரங்களையெல்லாம் ஆதியோடந்தமாய் விசாரித்துத் தானுமறிந்தவராய் என்னைக் கிருதவன்மாவாக நினையென்றுசொல்லி தன்பத்தினிமுதலிய ரிஷிபத்தினிகளுடனே சேர்த்து ஆதரவுசெய்துவருகையில், மிருகாவதியுந் தனது விதியை நினைந்து வாழ்ந்துவருகையில், கெர்ப்பநோயுற்று இருஷிபத்தினிகளினது கடாக்ஷ வீட்சண்யத்தால் யாதுங் குறைவில்லாமல் ஆண்குழந்தையைப்பெற, உடனே உதயகிரிச்சாரலிற் பிறந்தமையால் இக்குழந்தைக்கு உதயநன் என்னும் பெயர் தகுமென்று ஆகாயத்தில் ஒரு

அசரீரிவாக்குண்டாயிற்று, அப்படியே முனிவர் இக்குழந்தைக்கு உதயநனென்று நாமகரணஞ்செய்து வளர்த்துவருகையில், மூன்றாம் பிறைச்சந்திரன்போல் வளரும்பிள்ளைக்கு ஐந்துவயது பூரணமாக, அப்போது முநிவரர் சிறுவனுக்குச் சவுளவுபநயனமும் வித்யாப்பியாசமும் தநுர்வேதங்களும் மந்திரப்ரயோகங்களும் பூரணமாகக் கடாக்ஷித்து உணரச் செய்து, பாதுகாத்துவருகையில், உதயநனென்னுஞ் சிறுவன் அவ்வனத்தில் வாழும்படியாகிய மிருகங்களின்மீது வேட்டமாடிவருங் கோலத்தைத் தாயானவள்கண்டு களிப்புறத் தக்கதாயிருந்தபோதினுந் தனது மணாளனைவிடுத்துத் தான் தனித்திருக்குந் துன்பத்தையே பெரிதுபாராட்டிவருநாளி லோர் நாள், அவ்வனத்தில்வாழு மோர்வேடன் ஒருபாம்பைப்பிடித்துக்கொண்டு வருபவனைக்கண்ட உதயநன் அவ்வேடனை நோக்கி, நீயேன் இந்தப்பாம்பைப் பிடித்துக்கொண்டு போகிறாயென்று வினவ, அதற்கவன் சிறுவனைநோக்கி, அப்பா இதை யான் பட்டணங்களிற் கொண்டுபோய் ஆட்டிவைப் பேனுகில் என்ஜீவந விர்த்திக்கு குறைவில்லாம லிருக்குமென்றுசொல்ல, அதுகேட்ட உதயநன் அதுபாவத்தொழிலாதலால் அதனைநீ வலையில்விட்டுவிடு. இந்தக் கடயத்தைக் கொடுக்கிறேனென்று சொல்ல, அவன் விட்டுவிட்டபிறகு, அன்னையாற் போடப்பட்டிருந்த இரத்தின கடயத்தைக் கழற்றிக்கொடுத்தான், பின்னர் வேடன்கையினின்றும் விடுபட்ட நாகமானது உதயநனென்னும் இராஜகுமாரனிடம் வந்து வணங்கி, வேந்தரிளங்கன்றே, உம்மால் இன்றையதினம் யான் உயிர்பெற்றேனுதலால் உமக்கு யானென்ன பிரதியுபகாரஞ் செய்யப்போகின்றேன், நீர் தயைசெய்து என்னுடன் வாருமென்று இனியவார்த்தைகள்சொல்லி யழைத்துக்கொண்டுபோய் அவ்வனத்தில் இராஜரீகஞ்செய்துகொண் டிருக்குந் தங்களுடைய நாகராஜன்முன் விடுத்து தனக்குக் கிடைத்த வாபத்தினின்று மீட்டதையும் அவனது குணஜிசயங்களையு மறிவித்து நிற்க, அப்போது நாகராஜன்முன் உதயநனென்னு

பிராஜகுமாரனது ரூபலாவண்ய சவுந்தரியங்களைக்கண்டு சந்தோஷங்கொண்டு, கின்னரனென்னு நாகத்தைநோக்கி, கின்னரா, நான்சொன்னபடி நமதுகுமாரத்தியாகிய லளிதை யென்பவளை இவ்விராஜகுமாரனுக்கு மணஞ்செய்துவைக்க வேண்டுமென்று சொல்ல, அதுபோல் அந்தநாககன்னியை மணஞ்செய்ய, உதயநனும் சந்தோஷசித்தனாய் கலியாணஞ் செய்துக்கொண்டு லளிதையுந் தானுமாய்க் கூடிவாழ்ந்து சுக சையோகங்களை யநுபவித்துவரும் நாளில், லளிதையென்னு நாககன்னி கர்ப்பவுற்பத்தியா யோர்புத்திரனைப் பெற்றாள். பெற்றவுடனே நாககன்னியாகவிருந்த லளிதை தேவகன்னி கையானாள், அவ்வாறு உருவங்கொண்டபெண் உதயனை நோக்கி, அரசே, நான் முன்பு வித்யாதரர்குலத்திலே உற்பவித்த தேவகன்னி, என்பெயர் சுகண்டியென்பர், நான் ஒருரிஷி சாபத்தினாலே நாககன்னிகையாய் பிறந்திருந்தேன், என் வயிற்றிலே குழந்தை பிறந்தவுடனே சாபவிமோசனமாய் விடுமென்று முன்ன ரந்தரிஷியினிடத்திலே கேட்டிருந்தேன், இப்போது அப்படியே சாபவிமோசன மாகிவிட்டது. இனி யான் தெய்வலோகம்போகவேண்டு மாகையால் உமது குமா ரனை நீர் ஒப்புக்கொள்ளுமென்று சொல்லித் தன் குமாரனுக்கு சகலவியாதிகளு மெப்போது மணுகாதிருக்க ஓர் அமிர்தசஞ் சீவிக் குளிகையும் தன்கையிலிருந்த வீணையும் ஒருகாலங்களி லும் வாடாத அல்லிமாலையையுங்கொடுத்துப் புருஷனிடத் திலும் மற்றுமங்குள்ள தந்தைமுதலிய யாவரிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு தெய்வலோகம்போய்ச் சேர்ந்தாள். அப்பால் உதயநனென்னு மிராஜகுமாரன் தன்னுடைய குமாரனுக்கு லளிதையாற் கொடுக்கப்பட்ட மூன்றுவஸ்துக்க ளோடும் குமரனை யழைத்துக்கொண்டு ரிஷியாசிரமத்திலிருக் குந் தனது தாயாரிடம்வந்துசேர்ந்து நடந்தசவிஸ்தாரங்களை யெல்லா மாதியோடந்தமாய்ச்சொல்லத் தாயாகிய மிருகாவதி கேட்டு மிகவுஞ் சந்தோஷமாயிருந்தாள். இப்படியிருக்கும் போது, முன்பு தெய்வலோகத்தில் சகத்திராநீகனுக்குந்

திலோத்தமையால் நேரிட்ட சாபத்தின் பிரமாணமாகிய பதினன்கு வருடத்துக்குச் சமீபித்தபடியால் உதயகிரிச சாரலிலிருக்கும் மிருகாவதியினது புதல்வனுற்கொடுக்கப்பட்ட இரத்தினவளையை வாங்கிய வேடன், அவ்வளையை விற்பனை செய்து ஜீவிப்போமெனக் கருதி, கிளைக்கிராமங்களிலுஞ் சிற்றூர்களிலுந் திரிந்தும் விலைப்படாமையால் அதனைக் கௌசாம்பிய புரியென்னும் பட்டணத்திற் கொண்டுபோய் அங்குள்ள வியாபாரிகளுக்குக்காட்ட, அவ்வியாபாரிகள் இவ் விலையில்லாமணிக ளிழைத்தொளிராநின்ற வளையைப்பார்த் தால் நமது வேந்தனது அரண்மனைக்குரியதுபோ லிருக்கின்ற தேயென்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு,வளையோடுங் கொண்டுவந்த வேடுவனையழைத்துப்போய் இராஜசமுகத்தில் விடுத்தார்கள், அப்படியிருக்க, முன்னம் சரசகலாப மயிலைப் போன்ற மிருகாவதி ஜலக்கிரீடைசெய்த தடாகத்தினின்றுந் தன்னை அகஸ்மாத்தாய் மாயமாய்ப்போன நாண்முதலிது பரியந்தம் ஊணுறக்க மில்லாமலும் இராஜரீகஞ்செய்யாமலும் வஸ்திரபூஷணங்களைத் தரியாமலும் மஞ்சத்தின்மீது சயனிக் காமலும் தாம்பூலந் தரியாமலும் மஞ்சனமாடாமலும் மந்திரி முதலிய சுற்றத்தாரோடும் பேசாமலும் பித்துக்கொண்டவ னைப்போல் சரீரமுங்கறுத்து, அழகுங்குன்றி, அல்லும் பகலும் ஓரேசிந்தையாய் அயர்வெய்தி துக்கக்கடலி லழுந்தி யிருந்த சகத்திராநீகன் வியாபாரிகளாற் கொண்டுபோய் வைத்த இரத்தினவளையைக்கண்டு தன் மங்கையினது கை வளையென்றறிந்து, சொற்பனங்கண்டு விழித்தவனைப்போலுந் திடுக்கிட்டெழுந்து, அங்குவைத்திருக்கும் இரத்தினவளை யைக் கையிலெடுத்துக்கொண்டு, அதனைக் கண்ணிமையிட்டாமற் பார்த்து, தனதுமங்கையினது கரம்போலப் பாவித்து அடிக் கடி யவ்வளையை முத்தமிட்டுங் கண்ணிலொத்திக்கொண்டும் அடங்காமகிழ்ச்சி யுடையவனாய்ப் பெருமூச்செறிந்து, எதி ரில்நிற்கும் வேடுவனைப்பார்த்து, இந்தவளை உனக்குக்கிடை த்தவித மெப்படியென்று கேட்க, அப்போது வேடுவன்

சொல்லுவான், சுவாமீ, யான் உதயகிரிச்சாரலில் வாசஞ்செய்யும் வேடுவனாதலால் ஓர்நாள் எனது ஜீவனவிர்த்தியின் பொருட்டு வேட்டமாடச்சென்று அத்தினமியாதும் கிடைக்காமையால் எனதுகண்ணுக்குமுன் தோன்றி யோடிப்போய் வளையிற்புகுந்த நாகனைத் தொடர்ந்து அதிபிரயாசையோடும் பிடித்து கிராமங்களிற் கொண்டுபோ யாட்டிவைத்தால் நெல் கேழ்வரகு முதலிய தானியங்கள் கிடைக்குமேயென்று ஆவலோடீங் கொண்டுவருகையில, என்னெதிர்ப்பட்ட ஓரிராஜகுமாரனென்னைப்பார்த்து, அப்பா, இதையேன் பிடித்துக் கொண்டு போகிறாய், பாவமாதலால் விட்டுவிடு எனது கைவளையைத் தருகிறேனென்று சொன்னமையால், யானுமதுபோல் விட்டுவிட்டேன், பின்பு அவர் சொன்னதுபோல் எனக்கிந்த வளையைக்கொடுத்துவிட்டுப் போய்விட்டமையால் இதை விற்பனைசெய்து ஜீவிக்கலாமெனக் கொண்டுவந்தேன், மற்றயாதுமறியேன், அரசேயென்று தனதிருகரங்களையுஞ் சிரமேற்கூப்பித் தொழுது நின்றான். அவ்வாய்மொழிகேட்ட வேந்தன் தனதுமந்திரியாகிய யுகந்தராயணனையுஞ் சில பெரியோர்களையும் அருகிலழைத்து வைத்துக்கொண்டு, கேளுங்கள் பெரியோர்களே, இவ்வேடுவன் சொல்லியவார்த்தை உண்மையெனத் தோற்றுகின்றது, ஏனெனில், எனதுமங்கை கெர்ப்பிணியாகவிருந்தது உண்மை, அவள் உயிர்பெற்றிருந்தால் புத்திரனைப் பெற்றிருப்பாள், ஆயினும் உதயகிரிச் சாரல்வரையி லவள்சென்றமாயம் இன்னதென்று தெரியாமையால் இவ்வேடுவனைத் துணைகூட்டிக்கொண்டு போவோமாயின் யாவுந் தெரிந்துகொள்ளலாம், உங்களுடைய கருத்துயாது, அதனை வெளியிடுங்களென்று கூறிய வேந்தனை மந்திரிமுதலிய யாவரும் நோக்கி, அரசே, தாங்கள்கூறியதே சரி, அப்படியே சென்றறிவோமென்ன, உடனே சிலசயின்யங்களோடும் அரசன் மந்திரிமுதலிய யாவரும் இரதாரூடராய் வேடுவனையுங் கூட்டிக்கொண்டு அன்று இரவு போதுபோக்கி, மறுநாள் அருணோதயத்துக்குமுன்பிரயாணப்பட்டுத் தன்பதியைக்கடந்து

காடும்லவனம் வனாந்திரங்களோடுங் கூடியிருக்கும் உதயகிரியைச் சேர்ந்து, வேடுவன் இராஜகுமாரனைச் சந்தித்த இடத்தைக் காட்டச்செய்து, அவணின்று நான்குதிசைகளிலுஞ் சுற்றிப்பார்த்து வரும்போது, ஓர் பூங்காவில் முனிவராசிரமங்களும் பன்னசாலைகளு மிருக்க, அப்பன்னசாலையில் அனேகம் இருடிபத்தினிகள் நடுவில் மதிபோற் பிரகாசித்துக்கொண்டிருக்குந் தனது நாயகியாகிய மிருகாவதியையும் இளஞ்சூரியனைப்போன்ற குமாரனையுங் கண்டு பூரித்துப்பொங்கி, ஆனந்தக்கடலுட் டோய்ந்தவனாய், திடீலென்று இரதத்தைவிட்டிழிந்து, கன்றைக்கண்ட காலியைப்போலோடித் தனதுநாயகியைக் கட்டியணைத்து முத்தமிட்டு விம்மிவிம்மி யொருவர்க்கொருவர் படிந்துபரங்களை அவ்வாசிரமத்தி லெழுந்தருளியிருக்குஞ் சமதக்கினிமுதலிய ரிஷீசுவரர்களும் ரிஷிபத்தினிகளுங்கண்டு ஆச்சரியங்கொண்டு, இதுவரையில் நம்முடைய பன்னசாலையில் வாழ்ந்திருந்த மிருகாவதியென்கிற பெண்ணை ஒரு ராஜனானவன் சதுரங்கதளத்துடனேவந்து நம்மையுங் காணாமல் என்னகாரணத்தாற் றுயரப்படுகிறானென்று பன்னசாலையைவிட்டு நீங்கி, துணையாய்வந்தவர்களைக்கண்டு அவர்களுண் மந்திரி யின்னானென்வறிந்து, இதென்னகாரணமென்று வினவ, அப்போது மந்திரியானவன் முநிவர்களை வணங்கி, அதிவிநயத்தோடும், கேளுங்கள் சுவாமிகளே, கௌசாம்பிய தேசத்தையாளுகின்ற சகத்திரானிகனென்னும் வேந்தனிவர், அந்த மிருகாவதி யென்னும் பெண் இவருடையதேவியார், இவ்விருவரும் பட்டணத்தில் வாழ்ந்துகொண்டிருக்கையில், கெர்ப்பவதியாயிருந்த காலத்தில் பூங்காவனத்தில் தடாகத்திலிறங்கி நீராடிக்கொண்டிருக்க, அரசன் கண்டதேயன்றி, இதுபரியந்தம் எங்கெங்குந் தேடியுங்காணாது சிந்தைவருந்தியிருந்த வேந்தனுக்கு ஒருவேடன்மூலமா யிங்கிருக்குஞ்செய்தியறிந்து வந்தனரென்று மந்திரிசொல்ல, அதுகேட்ட ஜமதக்கினிமுனிவர், அரசனைக் கிட்டவழைத்து உட்காரவைத்து தேறுதலை செய்து, ஓய்வேந்தே, உமதுமனைவியாகிய மிருகாவதி குங்குமக்குழம்புதோய்ந்த தடாகத்தில் நீராடிக் கரையேறிநிற்கையில், விகடனென்னும் அண்டரண்ட பட்சியானது மாமிக

மென்று தூக்கிக்கொண்டுவந்து இவ்வுதயகிரியின்பேரில் விட்டுவிட்டது. இவள் கெர்ப்பவதியாதலால் அடங்காத்துயரத்தோடும் பிரலாபிப்பதறிந்து யாம் எமது பத்தினியினிடம் ஒப்புச்சொல்லிப் பாதுகாக்கச்செய்தோம, உடனே குமாரன் பிறந்தான், அவனுக்கு உதயனென்று நாமகரணஞ்செய்து, பருவமறிந்து வித்தியாப்பியாச முதலியவும் தநுர்வேதமுமுணரச் செய்தோம் இதுதானிங்குநடந்த சவிஸ்தாரமாதலால் இதுபரியந்தம், வால்மீகர் தமதாசிரமத்தையடைந்த சிதாபிராட்டியையு மவள்குமாரர்களாகிய குசலவர்களையும் பாதுகாத்து ஸ்ரீராமனுக்கு ஒப்புவித்ததுபோல், எமது ஆசிரமத்தையடைந்த மிருகாவதியையும் அவள்புதல்வனாகிய உதயனனையும் பாதுகாத்துவந்து ஸ்ரீராமனுக்குச் சமானமாகிய சகஸ்திரானீக வேந்தனென்னும் நின்னிடம் ஒப்புவித்தோமாதலால், நீயுனது தேவியையு மைந்தனையு மழைத்துக்கொண்டு போய் சுகஜீவியாக விருக்கக்கடவையென்று அநேக ஆசிர்வாதங்கள்செய்து, தம்மிடத்திலிருக்கும் அரிதாகிய சிலபதார்த்தங்களையுங் கொடுத்து விடைகொடுக்க, சகஸ்திரானீகன், முநிவரைப்பணிந்து, தனது மனைவியாகிய மிருகாவதியையுங் குமாரனாகிய உதயனனையும் அவன் குமாரனையு முத்துச்சிவிகையிலேற்றிக்கொண்டு தான் ரதாரூடனாய் மந்திரிமுதலியதளங்களைக்கூடிப் பிரயாணப்பட்டுக் கௌசாம்பிய பட்டணம் வந்துசேர்ந்து இராச்சியபரிபாலனஞ்செய்துகொண் டிருந்தான். இவ்விதமாய் வேந்தன் மனைவிமக்களோடுங்கூடிச் சகல சந்தோஷங்களையு மநுபவித்து வருங்காலையில், தனது குமாரனாகிய உதயனனுக்கு நல்லசுபமுகூர்த்தத்திற் பட்டாபிஷேகமுஞ்செய்துவைத்து, செங்கோன் முறைமையாவுந் தெளிவுறச்சொல்லி, சாமபேத தானதண்டமென்னுஞ் சதுர்வித வுபாயங்களினும் வல்லவனாகிய மந்திரியையு மமைத்து, பின்னர் யுகந்தராயணன் வசந்தன்மனைவியாகிய மிருகாவதி என்னு மூவரோடுகூடி துறவடைந்து பட்டணம்விட்டுப் பிரயாணப்பட்டு திவ்ய க்ஷேத்திரங்களைக்கண்டு தெரிசித்து திவ்யதீர்த்தங்களாடி வருகிறபோது, சேதுவைச்சார்ந்த புல்லாரண்யமென்னும் க்ஷேத்திரத்தில் தேவிப்பட்டணத்திலே வழங்காநின்ற சக்கரதீர்த்தத்

தில் மூழ்கினர்கள். அவ்வாறு அத்தீர்த்தத்தி லாடியவுடனே, தேவதுந்துமி முழங்கவும் தேவர்கள் மந்தாரம் பாரிஜாத முதலிய மலர்களை மாரிபோற் சலசலென்று வருஷிக்கவும் தாங்கள் முன்செய்த வினைப்போகங்களையெல்லா மொழித்துச் சாபமனைத்துந்தீர்ந்து பழயபடி தேவசொரூபம்பெற்று இராஜ ஞகிய சகத்திரானீகன் அஷ்டவசுக்களில் விதூமனுகவும், யுகந்தராயணனுகிய மந்திரி மாலியவானுகவும், சேனுபதியாகிய சதுரங்கன் புட்பகந்தனுகவும், புரோகிதனுகிய வசந்தன் பலோற்கடனுகவும், மிருகாவதியென்னு மரசி அலம்புசை யென்னு மரம்பைமாதாகவும் உருவம்பெற்று, பொன்னுல கத்தி லவரவர்கள் தொழிலிற் பிரவேசித்திருந்தார்கள், ஆக லால் இத்தன்மையாகிய மகிமைபூண்ட சக்கரதீர்த்தம் தேவி புரத்திலுண்டாயிருக்கின்றதென்று சூதமஹாரிஷி சொல்ல, நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்கள்கேட்டு மிகவுங் களிப் படைந்து பிரம்மானந்தபரிதராய் முனிவரைநோக்கி, சுவாமீ, செப்புதற்கரிய விச்சக்கரதீர்த்தம் விளங்கிக்கொண்டிருக்கும் பட்டணத்திற்கு தேவியினது நாமத்தாற் பெயர் பிரகாசிக்குங் காரணமியாதோ, அதனையும் அத்தீர்த்தத்தில் நரராய்ப்பிறந்த வர்கள் தீர்த்தமாடினல் அவர்கள் அடையும்படியாகிய பலனை யுஞ் சிறியோங்களுக்குப் புலப்படும்படியாய் திருவாய் மலர்ந் தருள வேண்டுமென்று விரைந்துகேட்க, சூதமகாமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

விதூமச்சருக்கம்

முற்றுப்பெற்றது.

---

## தேவிபுரச்சருக்கம்.

---

கேளுங்கள் நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்களே, விண்முதல் ஐந்தாகியும், விமலமாகியும், அமலமாகியும், விள ங்காநின்ற ஜகதீசனது கிருபாநோக்கா லிலகும் காசிபமகாரிஷி யினது தேவிமார்களாகிய திதியென்பவள்வயிற்றிலே பிறந்த தேவேந்திராதி தேவர்களும், அதிதியென்பவள் வயிற்றிலே

பிறந்த இராட்சதர்களும் ஒருவருக்கொருவர் தொந்தயுத்தங்கள்செய்து போராடி இராட்சதர்களியாவரு மடிந்துவிட்டதனாலே அதிதியென்னப்பட்டவள் மிகுந்த விசனத்தினாற் சோபக்கடலுட் டோய்ந்து சகிக்கலாற்றாதவளாய்த் தனது குமாரத்தியையழைத்து, அடியம்மணி, இனியாகிலு முனது வயிற்றிலே கெர்ப்பமுண்டாகும்படியாய் வனத்திற்போ யரிதாகிய தபஞ்செய்து வரம்வாங்கிவருவாய், மகளேயென்று சொல்ல, அதுகேட் டவளும்வணங்கி விடைபெற்றுக்கொண்டு வனத்துட் பிரவேசித்து; சுபாரிசமுநியைநோக்கி, மகிஷரூபத்தோடுந் தபம்புரிந்தாள், அப்போது சுபாரிசமுநிவரானவ ரவளுக்குப் பிரசன்னமாகி, வாரும்பெண்ணே, சத்குணீ, நீசெய்த தபத்தா லுன்பேரி லெனக்கு மிகவுஞ் சந்தோஷமாய் தெரிசனந்தந்தோம், இனி நீ விரும்பியவண்ண முன்வயிற்றிற்பிறக்கும் பிள்ளையானவன் சுத்தவீரனாகவும் அதிவீரபராக்கிரமசாலியாகவும் அனேகவரங்களைப் பெற்றவனாகவும் உன்னைப்போல் மகிஷமுகத்தோடும் பிறப்பானாதலால், அதுவரையினும் நீ என்னிடமிருவென் றவளையுங் கூட்டிக்கொண்டு போய்த் தானிருக்கும் பன்னசாலையில் வைத்துக்கொண்டிருந்தார். இவ்வகையாய் சுபாரிசரிடத்திலே யிருக்கிறபோது, அவள் வயிற்றில் கெர்ப்பமுண்டாய் ஆலகாலவிஷம் பிறந்தது போல மகிஷமுகத்தோடுங்கூடி யோர்பிள்ளை பிறந்தது, அப்பிள்ளைக்கு மகிஷாசுரனென்று பெயரிட்டு வளர்த்துவருகையிலப்பிள்ளையானவன் சகலவல்லமைகளு முண்டானவனாகவும் பராக்கிரமசாலியாகவு மிருக்கிறபோது, முன்பு தேவர்களோடு யுத்தஞ்செய்து ஜெயிக்கமாட்டாதவர்களாய் தப்பிப்பிழைத்து ஓடியொளித்திருந்த இராட்சதர்களில் விப்பிரசித்துவினுடைய குமாரன் வித்துத்துமாலி யென்பவன் மகாபராக்கிரமசாலிகளாகிய சில ராட்சதப்படைகளோடுங்கூடி இந்த மகிஷாசுரனிடத்திலே சேர்ந்து, அவனைநோக்கிக் கூறுவார்கள், ஐயா, மகிஷாசுரரே, எங்களையும் எங்கள் முன்னோர்களாகிய சில ராட்சதர்களையும் அமராவதிக்கிறைவனாகிய தேவேந்திரன் விஷ்ணு

முதலாகிய தேவர்களெல்லா மெதிர்த்துப் போராடி நாசப் படுத்தியகாலையில் நாங்கள் ஓடித் தப்பிப்பிழைத்தோம், என் செய்வோம், வேறுதுணையிலலாமற் றுன்பப்படுகிறோமென்று சொல்ல, அவ்வார்த்தையைக்கேட்ட மஹிஷாசுரன் கடுஞ்சின மடைந்து, கண்களிற் றீயெழும்படிநோக்கி, பயப்படாதீர் கள், கணப்போதில் தேவர்களையெல்லாம் நாசப்படுத்துகிறே னென்று சீறியெழுந்து, அவ்வரக்கர்களைக்கூட்டிப் பிரயாணப் படுத்திக்கொண்டு, தெய்வலோகத்தைச் சுற்றிவளைத்து, இந்தி ராதிதேவர்களுடனே தேவவருடம் நூறுவ்ருடம்வரையில் தொந்தயுத்தஞ்செய்தான். அப்படி யுத்தஞ்செய்கிற காலையில் இந்திரன் பிரமன் விஷ்ணு முதலாகிய தேவர்களெல்லாம் மஹி ஷாசுரனுக்கு முன்னின்று நிர்வகிக்கமாட்டாதவர்களாய், தங் கள் பதியைவிடுத்து உத்தரபாகத்திலோங்கும் கயிலாசகிரியிற் சேர்ந்து, சந்திரஜடாதரமூர்த்தியாகிய உமாமகேசனிடத்தில் முறையிட்டார், அம்முறைகேட்ட பரமசிவன், ரவுத்ராகார மாய்க் கோபங்கொண்டு, தனதுகோபாவேசமாகிய தணலை வடவாமுகாக்கினியினுங் கோடிபங் கதிகப்படுத்தி, அதனை யோர் பெண்ணுருவின் முகமாகவும், மகாவிஷ்ணுவினது கோபத்தினை தேகமாகவும், இயமனதுகோபத்தை உதடாக வும், பிரமனதுகோபத்தைப் பாதங்களாகவும், கயிலாசகிரியை யிரண்டுகுசங்களாகவும், அருணனதுகோபத்தை முழந்தாள்க ளாகவும், அஷ்டவசுக்களைக் கரசரணுதிகளிலுள்ள நகங்களாக வும், அஷ்டதிக்குப்பாலர்களை விரல்களாகவும், சந்திரனை நாசி யாகவும், வடவாமுகாக்கினியைக் கண்களாகவும், சண்டமாரு தத்தைப் புருவமாகவும், இந்திராதிதேவர்களிடத்துண்டாகிய கோபத்தீயே சதுர்ப்புஜங்களும் அஷ்டகரங்களு மாயுதங்கள் பிரகாசிக்கும்படியாயும், அஷ்டதிசையும் நடுங்கும்படி பரஞ் சோதிவடிவாய் நின்றவளைக்கண்ட தேவர்முத லியாவரும் தோத்திரஞ்செய்தார்கள். அவ்வாறு தோத்திரஞ்செய்ததுமல் லாமல், அவரவர்களது மந்திரசக்திகளையும் ஆயுதங்களையுங் கொடுக்க, அவைகளைப் பெற்றுக்கொண்டவளாய்க் கோபா

வேசத்தோடும் அண்டகடாகங்களும் நடுங்கும்படியாய் கெர்ச்சனைசெய்து, விசுவசொரூபங்கொண்டு நிற்பவளுக்கு, பரமசிவன் தனது மூவிலைவேற் சூலத்தைக்கொடுத்துச் சிங்கத்தை வாகனமாகவும், பூதவேதளபைசாச கணங்களைப் படையாகவும், மாமிசாதிகளை பட்சணமாகவும், பாலைவனத்திலிருந்து மகிஷாசுரனைச் சங்கரித்துவரும்படி யருள்செய்தனுப்ப, விடைபெற்று, பூதவேதாள பைசாசக்கூட்டங்களுடனே சிங்கவாகனத்தி லேறிவருகிற துர்க்கையை, மகிஷாசுரன்முதலிய ராட்சதர்கள்கண்டு, மகீர்கோபங்கொண்டு, மகாதுர்க்கியைவந் தெதிர்த்துச் சூழ்ந்துகொண்டார்கள், அப்படிசூழ்ந்த வரக்கர்களைக் கண்டு, அண்டமுகடுந்திடுக்கிட, சமுத்திரஜலமுங்கலங்கிச் சுவறும்படியாய் கெர்ஜித்துநின்ற துர்க்கையின்மீது அரக்கர்கள் வில்லைவளைத்து அனேகமாயிரம் பாணங்களைத் தண்டோபதண்டமாய் பிரயோகஞ்செய்தார்கள், அதைக்கண்டதேவர்கள், தங்கள் வில்லைவளைத்து குணத்தொனிசெய்து ஒன்று பத்து நூறு ஆயிரம் பதினாயிரம்லட்சம் பத்துலட்சம்கோடி பத்துக்கோடி சங்கம் மகாசங்கமென்பதாய்க் கணக்குமிதமில்லாமல் அளவிறந்த பாணங்களை ஆகாயம் பூமி எங்கும் பாணமயமாய் நிரப்பி இராட்சதக்கூட்டங்களைக் கால்வேறு, கைவேறு, சிரம் வேறு, உடல்வேறாகக்கண்டித்து, எங்கும் பிணமலைகளாகக் குவித்து, நாய் நரி கழுகு கூளி பூதவேதாள பைசாசகணங்களுக்குவிருந்திட்டு, இன்னமுண்டோவரக்கர்சேனைகளெனச் சிங்கநாதவட்டகாசஞ்செய்தார்கள். அதுகண்டமகிஷாசுரனெரிந்து விழுந்து பற்களை நெறநெறவென்று கடித்துக்கண்களில் நெருப்புப்பொறி குபீல்குபீலென்று சிந்தும்படியாய், வில்லைவளைத்து நாணேறிட்டுக் குணத்தொனிகாட்டி, எஃகினுற்செய்து விஷந்தோய்க் திருக்கும்படியாகிய நாராசங்களை வில்லிற் சந்தித்து, கர்ணபரியந்தமிழுத்து, தேவேந்திரன்பேரிலாயிரமும், வருணன்பேரிலாயிரமும், வாயுவின்பேரிலாயிரமும், அஷ்டவசுக்கள் முதலிய தேவர்கள்மீதும் ஆயிரமாயிரமாகத்தொடுத்துச் சிங்கநாதஞ்செய்தான். அப்போது துர்க்கியானவள், மிகு

வும் கோபங்கொண்டு, தன்னைச் சூழ்ந்திருக்கும் பூதவேதாள
பைசாசங்களைத் தூண்ட, அவைகளாக்ரமித்துச் சண்டமாரு
தக் காற்றைப்போலெழும்பி மகிடன்விடுத்தபாணங்களையெல்
லாங் குபீலெனப்பாய்ந்து கையினாற்பிடித்தும் முறித்தும்
இராக்கதர்கள்மேல்மோதி யதன்றியும் தங்கள் கையிலிருந்த
கதை சூலம் இருப்புலக்கை பிண்டிபாலங்களால் இராட்சதர்
கூட்டங்களை அதாஹதப்படுத்திக், கைவேறு கால்வேறாகச்
செய்து, அவுணர்களைத் துண்டுதுண்டாய் சதைசதையாய்ப்
பெயர்த்தெறிந்து, அட்டகாசங்கள்செய்து நின்றன. அப்
போது ராட்சதப்படைகளெல்லாங் கோவென்று கூக்குரலிட்
டுக்கொண்டு மகிடாசுரனைநோக்கி, ஓடிவருகிறபோது, அவனு
டைய மந்திரிகளாகிய மகரநாதன், அநேகபாதன், கரவில்லன்,
சண்டன், மகோதரன், மவியுணன், கற்பகச்சூடன், மகோற்
கடன், ஒற்றைக்கண்ணன், சுலோசனன் இவர்களெல்லாமொன்
றாய்த்திரண்டு, தேவியைவந்து சிங்கத்தை நாய்கள் சுற்றிக்
கொண்டதுபோற் சுற்றிக்கொண்டு, அவரவர்கள் வில்லைவளை
த்து, இடிமுழக்கம்போலப் பேரொலிகாட்டி, அஸ்திரங்க
ளைச் சோனைமாரிபோற் சிந்தினார்கள். அப்போது துர்க்கியான
வள் கோபங்கொண்டு, வீரசிங்கம்போ லார்ப்பரித்து, வில்லை
வளைத்து, அண்டமுகடுந் செவிடுபடும்படியாய் குணத்
தொனிசெய்து, வச்சிராயுதத்துக்குச் சமானமான ஒரு பிறை
முகக்கணையை வில்லினிடமாகச் சந்தித்து, அபிமந்திரித்து,
கர்ணபரியந்தமிழுத்துப் பிரயோகஞ்செய்தாள். அந்த அஸ்திர
மானது மகிஷாசுரனுடைய சேனைகளிலே பிரவேசித்து,
யானைகளிலே லட்சம் குதிரைகளிலே பத்துலட்சம் காலாள்
களிலே சங்கஞ்சங்கமாய் மலைமலையாய்க் குவித்துவிட்டது.
அப்போது மாயவனென்னப்பட்ட ஓரிராக்கதன், அனேகஞ்
சேனைகளோடுங்கூடி எதிர்த்து துர்க்கையின்பேரில் அள
விறந்தபாணங்களைத் தொடுத்துப் பிரயோகஞ்செய்ய, தேவி
யார் கோபங்கொண்டு, எரிமுகவாளியை வில்லினிடமாகச்
சந்தித்துவிட, அந்தபாணமானது, ஜட்ஜடவென்றும் ஒலை

யுடன் எங்கும் பொறிகளைச்சிந்தி, மாயவனது மார்பிற்றாக்கி, முதுகிலுருவிப்போக, அதனாலவன் இரத்தங்களைக் கக்கிக்கொண்டு பூமியின்மேற் சாய்ந்து உயிர்விட்டான். அதுகண்ட மகிஷாசுரன் அதிக விசனங்கொண்டு, தன்னண்டையிலிருக்குஞ் சண்டகோபனென்னும் ராட்சதனைப்பார்த்து, அடா சண்டகோபா, நமது மாயவனைக்கொன்ற இந்த துர்க்கியை நீ போயெதிர்த்துக் கணப்போதினிற் காலன்வசப்படுத்தி, வெற்றிமாலை தரித்து வரவேண்டுமென்றனுப்ப, அப்படியே சண்டகோபனும் மகா ஆக்ருஷத்தோடு மனேக ராட்சதப் படைகளுடனேவந்து தேவியையெதிர்த்து, அநேகமாயிரம் பாணங்களை பிரயோகஞ்செய்ய, அப்போது தேவியார், சண்டகோபன்விடுத்த அஸ்திரங்களையெல்லா மோர் சிலீமுககணையால் நாசப்படுத்தி, அவன் கைவில்லையுங் கண்டித்து, துவசத்தையும் வெட்டிச் சாய்த்துக் குதிரையையுங் கொன்று, இரதத்தையுஞ் செக்கை செக்கையாய்ப் பேர்த்தெறிந்து, மற்றொரு அர்த்தசந்திர பாணத்தினால் அவன்சிரத்தையுந் துண்டித்துச் சாய்த்தாள். அவ்வாறு சண்டகோபன் சாய்ந்தவுடனே, சித்ரபாநுவென்னு மோரரக்கன் கோபாவேசங்கொண்டு, கையிற் சக்கராயுதமெடுத்துச் சிங்கம்போற் பாய்ந்து, கரகரவென்று சுழற்றித் தேவியின்பேரில் விட்டெறிந்தான். அச்சக்கரமானது கிரிச்சலிட்டுக்கொண்டுவரும் வேகத்தைக்கண்ட தேவி ஓர்பகழியை வில்லினிடமாகச் சந்தித்து, அவன்விட்ட சக்கரத்தை வெட்டிச்சாய்த்து, மற்றொருபகழியா லவன்தலையையும் வெட்டித்தள்ளினாள். அப்போது பாடகனென்னப்பட்ட ராட்சதன்கண்டு, சினங்கொண்டு, தனதுகையிலிருந்த வில்லையும் வேலையு மெறிந்துவிட்டுத், தேரைவிட்டுக்குதித்து, தோள்தட்டித் தேவியின் முன்னின்று மல்லயுத்தஞ் செய்யும்படியாய் அறைகூவினன். அதுகண்ட துர்க்கியானவள், கோபச்சிரிப்புக்காட்டி, இடக்கையாலோங்கி அவன்தலையிற் புடைத்தமாத்திரத்தில் தலையிலிருந்த மூளையானது கலங்கிக் காதின்வழியாகவும் வா

யின்வழியாகவுஞ் சிந்தி நாக்கைத் தொங்கவிட்டுக் கதறிப்பதறி மாய்ந்தான், அதைக்கண்ட அந்தகனென்னுமோ ரரக்கன் வந்தெதிர்க்க, அவனையு மோர்கணையினாற் கொன்று இவ்வாறு மகிஷாசுரனுடைய இரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச் சேனைகளையுங் கால்மாடு தலைமாடாகச் சாய்த்துப் பனிக் கூட்டத்தை விலக்கியெழும் பானுவைப்போல இருட்கூட்டம் போன்ற இராட்சதக்கடலினின்றும் தேவியானவள் சூரியனைப் போற் பிரகாசித்துக்கொண்டிருப்பதை மகிஷாசுரன்கண்டு, வடவாமுகாக்கினிபோற் சீறியெழுந்து, காற்குளம்புகளினாலே பாதாளலோகம்வரையில் வெடிப்புறும்படியாய் வெட்டிப் பிளந்து, கொம்புகளையசைத்துப், புருவங்களை விதிர்த்து, கண்களில் அக்கினிப்பொறிகள் சிந்தும்படியா யுருட்டிப் பார்த்து, நீலகிரியைப்போலும் மேகக்கூட்டம்போலும் இரண்டு கடைவாய்களினின்று மிரத்தங்கள் கொப்பளித்துச் சிந்தும்படியாய் உதட்டைக்கடித்தும், முன்கையைக்கடித்தும், வாலையுதறி யாகாயத்திற்கிளம்பியும், யுகாந்தகால சமுத்திரம் புரண்டுவருவதுபோ லிராட்சதப் படையுடனே தேவியைவந்தெதிர்த்தான். அப்போது துர்க்கியானவள், இனியிந்த மகிஷாசுரனைப் பூமியிலிருத்துவது அழகல்லவென்று கருதி, நீலகிரியை ஆதிசேடன் சுற்றி வளைந்ததுபோல நாகபாசத்தை யெடுத்து மகிஷாசுரன்பேரில் வீசினாள், அந்நாகபாசமானது தேவியினது கரத்தினின்றும் வெளிப்பட்ட தெப்படியிருந்த தென்றால், ஆலகாலவிடம்போலும் அந்தகார விருளைப்போலும் சண்டமாருதம்போலும் அதிவேகத்தோடுங் கூடி, மகிஷாசுரனைச் சுற்றிவளைத்துக்கொள்ள, கட்டுண்டு கண்பிதுங்கி, வாயிலே ரத்தங்கள் குபீல்குபீலென்று சிந்த, அம் மகிஷரூபத்தைநீங்கி, சிங்கவுருவமாகிப்பாய்ந்து, ஆக்ரமித்து தேவியைவந்தெதிர்த்தான். அப்போது தேவியார் அகோர ருத்ராகாரமாய் நாரசிம்மாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்து, அச்சிங்கவுருவை யிருபிளவாகப் பிளந்தெறிந்தாள். பின்னும், மதங்கொண்ட யானையைப்போல் வந்தெதிர்த்து, தேவியைச் சிங்க

வாகனத்துடனே துதிக்கையாற் சுற்றித்தூக்கினான். அப்போது தேவியார் யானையாகிய மகிஷாசுரனது துதிக்கையைச் சக்கராயுதத்தினா லறுத்துத் தள்ளினாள். பின்னும் மகிஷாசுரனாக்ரமித்து, ஆகாயத்திற் கிளம்பி, பூமியிலே வாகுகொண்டு குதித்து, மகிஷரூபத்தோடும் தேவிமுன்னின்று ஆர்ப்பரித்தான். அதுகண்ட துர்க்கியானவள் பற்களைக்கடித்து, வில்லினிடமாகவனேகபாணங்களைத் தொடுத்துப் பிரயோகித்தாள். அதுகளையெல்லாம் மகிஷாசுரன் தனதுகொம்பினாற் றட்டிவிட்டு, பருவதங்களையும் விருட்சங்களையுங் கொம்பினாற்குத்திக் கிளப்பித் துர்க்கிதேவியின்பேரி லெறிந்தான். அப்போது தேவியானவள் தனது தண்டத்தினாற்றட்டித் தவிடுபோற் செய்து காற்றிலலையவிட்டு, மகிஷனைப்பார்த்து, மகாவுக்ரத்தோடும், அடா, உனது ஜீவனைக் கணப்போதில் மடித்துத் தென்றிசைக் கடவுளாகிய எமபிரானுக்கு வாகனமாக வனுப்புகிறேனென்று வீராவேசத்தோடுங் கையை மேலேதூக்கி; மகிஷாசுரன் தலையிலே கோடைக்காலத் திடிபோற் குத்தினாள். அக்குத்தினால் அசுரனுடைய கபாலமானது கலங்கிக் கண்கள் தெறித்து தேகத்திலுள்ள வெலும்பெல்லா முறிந்து நெக்குவிட்டு, உள்ளம்பதறி, நிலைநிற்கமாட்டாமற் றென்றிசையைநோக்கியோட்டமெடுத்தான். அதுகண்டு, தேவியானவள், மிகவும் ஆக்ரமித்து, குருகென்னும் பறவையை யிரைகொள்ள வெழுந்த கோவாகிய இராஜாளியைப்போற் றொடரச் சிங்கத்தை யேவுகையில், அப்போது அசுரனானவன் ஓடுவதற்கசக்தனாய், இனி நம்மால் ஓடமுடியாதெனக்கருதித் தான் ஓடுந்திசைக்கு எதிரிலிருந்த சேதுவுக்குச் சம்பந்தமாகவிருக்குஞ்சக்கரதீர்த்தமானது வெகு விஸ்தாரமாய்ப் பத்துநாழிகைத் தூரம் பரப்பும் ஆழமுமுள்ளதாயிருந்ததைக்கண்டு குபீலென்றத்தடாகத்திற் பாய்ந்து, அழுந்திவிட்டான். அப்போது பின்தொடர்ந்து வந்த தேவியானவள், அசுரனைக்காணாமற் றிகைத்து, எவ்விதமாயையினாலோ மறைந்தானென்று யோசித்துக்கொண்டு, வந்தவழியைப்பார்க்க வுத்தரமுகமாகத் திரும்பி

யந்த சக்கரதீர்த்தக்கரையிலே நிற்கும்போது, மகிஷாசுர னித்
தடாகத்தி லொளித்திருக்கிறானென்று ஆகாயத்தில் அசரீரி
தோன்றியது. அதுகேட்டவுடனே, தன்னுடையவாகனமாகிய
சிங்கத்தையேவ, அச்சிங்கமானது தடாகத்தில் வாயைவைத்
துச் சலத்தையெல்லாஞ் சேறுபடக் குடித்தமையால், அப்
போது அசுரன் பதுங்குவதற் கிடமில்லாமல் வெளிப்பட்
டான். உடனே துர்க்கியானவள் கண்டு, விடப்படாதென்று
ருத்ராகாரமாய் ஆக்ரமித்து எழும்பி, அண்டரண்டபட்சி
யானது யானைகளின்மீது பாய்ந்து காலினா லிடுக்குவதுபோல
மகிஷாசுரன்மீது பாய்ந்து ஓர்கால் உடலத்திலும் ஓர்காற்
சிரத்திலுமூன்றிச் சூலத்தினாற் குத்திப்புரட்டி, கத்தியினால்
வெட்டி, அவனது உடலத்தைக் காலா லெற்றினமாத்திரத்
தில், மகிஷாசுரன் யுகாந்தகாலப் பேரொலிபோ லிரைச்சலிட்
டுக்கொண்டு, இரத்தங்களைக் குபீலென்று கக்கிக்கொண்டு,
மரணமடைந்தான். அதுகண்டதேவியுந் தனது வாளாயுதத்
தினாலே அவனுடைய வுடல்வேறு கால்வேறாக வெட்டி
யெறிந்து, தலையைக் காலால் மிதித்துக்கொண்டு, ரௌத்ராகார
மாய்த் தனது தேகமனைத்துஞ் சிவந்து செக்கர்வானம்போற்
பிரகாசித்தாள். அதுகண்ட தேவர்களெல்லாம் ஆச்சரியங்
கொண்டு மெத்தவுஞ் சந்தோஷத்தோடுங் கற்பகமலர்களைத்
தேவியின்மீது சோனைமாரிபோற் சலசலவென்று வருஷித்தார்
கள். அவ்வாறு வருஷித்ததன்றியும் தேவர்களுக்கு இவ்வசுரன்
மரணமடைந்தது எப்படியிருந்ததென்றால், இரண்யாட்சதர்க
ளைப்போ லொருகோடி பேர்கள் இராவண கும்பகர்ணர்களைப்
போ லொருகோடிபேர்கள் தாருகாசுரனைப்போ லொருகோடி
பேர்கள் மடிந்தால் எவ்வளவு களிப்புண்டாகுமோ அதற்கு
எண்மடங் கதிகமாகிய சந்தோஷங்கொண்டு, தேவியைத்
தோத்திரஞ்செய்து, ஆனந்தக்கூத் தாடினார்கள், அதன்றியும்,
பூதவேதாள பைசாசகணங்கள் முதலிய யாவும் மலையைப்
போற் குவிந்திருக்கும் மகிஷாசுரனது இரத்தமாமிசங்களைத்
தின்று, இன்று நமக்கு நல்ல விருந்தென்று சொல்லிக் கூத்

நாடின. லோகா லோகங்களிலுள்ள சகல ஜீவாத்மாக்களுஞ் சந்தோஷமடைந்தார்கள். அப்போது தேவர்களெல்லாமொன் றாய்க்கூடி மகிஷாசுரனைச் சங்கரித்த மகாதேவிக்குச் சக்கர தீர்த்தக்கரையிலே ஆலயமும் பட்டணமுமுண்டாக்கி, அதிற் குடிகளையேற்றி, அதற்குதேவிபட்டணமென்று பெயரளித்து, தேர்திருவிழா முதலிய யாவுமுண்டாக்கி, மகிஷாசுரமர்த்தனி யென்று பெயர்கொடுத்து, தேவியைப் பூசித்து வணங்கி யெங்களுக்கென்ன இடுக்கண்வந்தபோதிலும் தீர்க்கவேண்டு மென்று வரப்பிரசாதமும் பெற்றுக்கொண்டு, அவரவர்க ளுடைய லோகத்துக்குப்போய்ச் சேர்ந்தார்கள். பின்னும் அன்றுமுதல், அப்பட்டணத்திலே யாதொருகுறைவுமில்லா மல்சகலருக்கு மிஷ்டசித்திகளைத் தந்து வெற்றியைத் தருவது மல்லாமல் அச்சக்கரதீர்த்தமானது சிங்கங்குடிக்கச் சுவறிப் போனமையால், தேவிதனது அருளால் அதிலமுர்தம் பெரு க்கசெய்து, சகலருந் தீர்த்தமாடும்படி உபயோகப் படுத்தின படியால் அதற்கு அமிர்ததீர்த்தமென்றும் பெயர்கொடுத்து, அதில் மூழ்கினபேர்களுக்கு நினைத்த காரியங்களெல்லாங் கை கூடிவரும்படியாய்ச் செய்தும், மோட்ச சாம்பிராச்சியமுங் கொடுக்குந் தேவிப்பட்டணமுண்டான வர்த்தமான மிப்படி யென்றுந் தேவிபட்டணத்திற்றான் ஸ்ரீராமச்சந்திரன் திரு வணைகட்டும்போது முன்னர் கணேசரையும் நவக்ரகங்களை யுமபூஜித்துச் சேதுபந்தனஞ்செய்ய வாரம்பித்தான். அப்போ தந்த தேவதச்சனாகிய நளன் ஸ்ரீராமச்சந்திரசுவாமிக்கு ஒரு சிங்காசனம் செய்துகொடுத்து, அதிலே ஸ்ரீராமஸ்வாமியை யெழுந்தருளி யிருக்கும்படிசெய்து, பின் ஐந்துநாளைக்குட் சேதுவைக்கட்டி முடித்துச், சகல தேவதாசொரூபமான வானரர்களும் ஸ்ரீராமச்சந்திரனது பிரசாதமுங் கூடிய திரு வணையின் தொடக்கத்துக்கு கீழ்ப்பாகத்திலே ஸ்நான கிரியா யாத்திரை செய்யப்பட்டவர்கள், முதல் கணேசரைப் பூசித்துப், பின்பு சேதுமூலத்தில் ஸ்நானஞ்செய்து, க்ஷேத்திர பிண்ட முதலானதுங்கொடுத்துப், பிறகு சக்கரதீர்த்தத்தில் மூழ்கி, அங்கும் க்ஷேத்திரபிண்ட முதலானதுகள்செய்து,

அந்த சேதுவுக்கு நாயகனாகிய ஸ்ரீராமச்சந்திரனைப் பூசித்து, கிரமப்படி ஸ்நானஞ்செய்து, ஜபதப நியமநிட்டைகளநுட்டிப் போர்களுடைய சென்மாந்தரங்களிற்செய்த கன்மாநுபவங் களும் நீங்கி, மோட்சத்தை யடைவார்கள். அன்றியும், தர்ம புஷ்கரிணி யென்னும் தீர்த்தத்துக்குச் சமானமானது எந்த லோகத்திலுங் கிடையாது. உலகிலுள்ள சகலநதிகளிலும் மூழ்கினபோதிலும், இத்தீர்த்தத்திலாடிய புண்ணிய பலத் தில் பதினாறிலொருபங்குக் கீடாகாது. யாத்திரைசெய்யப் பட்டவர்கள் முன்பு நவபாஷாணமாகிய சேதுமூலத்தில் மூழ்கி, அப்புறஞ் சக்கரதீர்த்தத்திலாடி, இவ்விரண் டிடங் களிலும் க்ஷேத்ரபிண்டங்கொடுத்து, தர்ப்பணங்கள்செய்து, ஸ்ரீராமனைப்பூசித்து, வணங்கி, அப்பால் தர்ப்பசயனத்திற்குப் போய், நளனாலே நியமிக்கப்பட்ட சிங்காசனத்தை தெரிசித்த வர்கள், நரகவேதனை யடையமாட்டார்க ளாதலால், இன்ன மதினுடைய மகிமையைக்கேளுங்கள், யாதெனில், அந்தச் சேதுவானது மோட்சமார்க்கத்துக்கு ஏதுவாகி, சிதாலட்சுமி யினது இதயகமலத்தை விகசிதஞ்செய்கிறதற்கு இளஞ் சூரிய னைப்போல் விளங்கிக்கொண் டிருக்குமென்று சூதபுராணிகர் சொல்லி, மறுபடியுஞ் சொல்லுவார், கேளுங்கள் முநிவர்களே! இத்தன்மைவாய்ந்த சேது மூலத்திலே விளங்குஞ் சக்கர தீர்த்தத்திலே மூழ்கிய புண்ணியர், அதற்கு தக்ஷிணபாகத்தி லிருக்கும் வேதாளவரததீர்த்தம் ஆடவேண்டிய விதியாத லால், அத்தீர்த்தத்துக்கு உத்தரபாகத்தில் சக்கரதீர்த்தமும், தக்ஷிணபாரிசங் கந்தமாதனபருவதமும் விளங்கிக்கொண்டிரு க்குமென்று சூதமுநிவர்சொல்ல, அதைக்கேட்டு ஆனந்தங் கொண்ட நைமிசாரண்யமுநிவர், சுவாமீ! அத்தீர்த்தத்துக்கு வேதாளதீர்த்தமென்று பெயர் வந்தகாரணத்தையும் அதன் மகிமையையும் அடியோங்களுக்குத் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று பணிந்துகேட்கச் சூதமகாமுநிவர் சொல்லத் தொடங்கினர்.

தேவிபுரச்சருக்கம்

முற்றுப்பெற்றது.

## வேதாளவரதச்சருக்கம்.

கேளுங்கள் நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்களே, ஸ்ரீ அகண்டபரிபூரண சச்சிதானந்த சின்மயஸ்வரூப சாட்சாத்காரமாகி விளங்குஞ் ஜகதீசன், கயிலாசவாசன், உமாமகேசன், பவநாசன், தனது மங்கையாகிய பர்வதராஜகுமாரிக்குரைத்த கதையை யாம் உங்களுக்குரைக்கின்றோம், அதெப்படியென்றால், தண்டகாரண்யத்தில் வாசமாயிருக்குங் காளவமகாரிஷியானவர் பஞ்சாக்கினியிடைநின்று தபஞ்செய்துகொண்டிருக்குங்காலையில், அவர்புத்திரியாகிய காந்திமதியென்பவள் அதிரூபலாவண்ய சவுந்தரியத்தோடுங் கூடியிருப்பாள், அவள் நித்தியபடியாய்த் தனது தாதையாகிய காளவமகாரிஷியின் தேவபூசைக்கு வேண்டிய தீர்த்தம் பத்திரம் புட்பம் சமித்து முதலாகியவைகளைக் குறைவின்றிக் கொண்டுவந்து கொடுத்துப் பணிவிடைசெய்துகொண்டு வருவாள். அதுபோலொருநாள் வனத்திற்பிரவேசித்துப் பத்திரபுட்பமெடுத்துக்கொண்டிருக்கும்போது, காந்தர்வலோகத்திலேயிருந்து சுதரிசனன் சுகன்னன் என்னு மிரண்டு காந்தருவச் சிறுவர்கள் நவமணிவெயில் பரப்பி யிலகாநின்ற விமானத்தேறி ஆகாயவீதியிற் செல்பவர்கள் இப்பெண்ணினுடைய ரூபலாவண்ய சவுந்தரியத்தையும் அன்னப்பெடைபோன்ற நடையையுங்கண்டு மயங்கி, மூத்தவனாகிய சுதரிசனனென்னப்பட்டவன் விமானத்தைவிட்டு பூமியிலிறங்கி, அந்தப் பெண்ணிடத்தில்வந்து ஓ பெண்பாவாய், இவ்வனத்திலிருக்கும் நீயார், உன்தகப்பன்பெய ரென்ன, சொல்லுவாயென்று கேட்டான். அதற்கவளொன்றுஞ்சொல்லாமல் மவுனமாகவிருந்தும் அவ்வித்யாதரன் துராக்ருதமாய், வாராய் ஓய் பெண்கள்நாயகமே, எனக்கு உன்பேரில் மிகவும் மோகமாயிருப்பதால் நான் காந்தர்வலோகத்திலே கிந்நரையர்களுக்கரசனாகிய கோதரனுடைய குமாரன், என்பெயர் சுதரிசனனென்று சொல்லுவார்கள், மன்மதனுடைய பாணத்தினியால் வெதும்பித் துன்பப்படுகின்றமையால் அதைத்

தவிர்த் தாட்கொள்ளவேண்டுமென்று வெருவாய் வருந்திப் பிரலாபமுற்றான். அதுகேட்ட அப்பாவை கூறுவாள். வாரும் சுதரிசனனே, நான் தண்டகாரண்யத்தில் தவஞ்செய்துகொண் டிருக்குங் காளவமகாரிஷியினுடைய குமாரத்தி, என்பெயரோ காந்திமதியென்று சொல்லுவார்கள், யான் அவருடைய பூசைக்குப் பத்திரம் புட்பம் குசை முதலானவைகள் கொண்டு போய்க் கொடுக்கின்ற வழக்கமாதலால் இன்றைக்கு வெகுநேரந் தாமதப்பட்டுவிட்டது. அவரது பூசாகாலத்துக்கு கணப்போது தாழ்க்குமாயின் கோபித்துச் சாபங்கொடுப்பாராதலால், அவ்வாறு நடந்தபின்னே பேதையாகிய எனக்கு கதியாது, ஆனதால் நீர் என்தகப்பனிடத்திலேவந்து என்னைக் கேட்டுக் கலியாணஞ்செய்துகொள்ளுமென்று சொல்லிக் காளவரிருக்கும் பன்னசாலையைநோக்கி நடந்தாள். அப்போது சுதரிசனனும் பின்தொடர்ந்து துராக்ருதமாய் அவள் கூந்தலைப்பிடித்துத் தூக்கிக்கொண்டு போகும்போது, காந்திமதி, கோவென்றலறிக் கூக்குரலிட, அவ்வோசையைக் காளவமகாரிஷிகேட்டு, பன்னசாலையைவிட்டோடிவந்து தன்மகளை விடுவித்துக் கோபாவேசத்துடனே சுதரிசனனைப்பார்த்துச் சொல்லுவார், அடா பாதகனே, நீ மலமூத்திர நாற்ற மாமிசங்களுடனேகூடின பெண்பேரில் மோகமாய்க் கிஞ்சித்தேனுமஞ்சாமல் பூதவேதாளங்களைப்போற் பற்றியிழுத்து இம்சைசெய்ததனாலே நரனைகப்பிறந்து வறுமையடைந்து பின்னர் வேதாளமாகவும் உன்னுடையதம்பி நரனாகவும் இன்பதுன்பங்களையநுபவித்து அப்பால் விஞ்சையர்க்கு ராஜனை விக்கினதந்திகவுதுகனை நீங்கள் காணும்போது உங்களுக்கு இச் சாபவிமோசனமாமென்றுசொல்லிச் சீடர்களுடனே தன்மகளையு மழைத்துக்கொண்டு பன்னசாலையைப்போய்ச் சேர்ந்தார். அப்பால் சுதரிசனனும் அவனுடைய தம்பியும் மிகவுந் துன்பமடைந்து தங்களுடைய லோகம்போய்ச்சேர்ந்து இருவரும் பூமியிற் பிறக்க வேண்டியதற்கு யோசனைசெய்து யமுனாதீரத்திலே கோவிந்தசாமியென்னும் பிராமணனுக்குப் பிள்ளைகளாய், மூத்

தவன் விசையதத்தனென்றும் இளையவன் அசோகதத்த னென்றும்பிறந்து வளர்ந்துவருகிறபோது, அந்த யமுனாதீரத் தில், மழையில்லாமற் பன்னிரண்டுவருடம் பஞ்சமுண்டாய்ப் பிரஜைகள் துன்பத்தையடைந்து யாதுஞ் ஜீவனத்துக் கிட மில்லாமல் இறந்தபேர்கள்தவிர மற்றவர்கள் திசைக்கொரு வரா யோடிப்போனார்கள். அப்போது கோவிந்தசாமி யென் னும் பிராமணன் தனது பெண்சாதி பிள்ளைகளை யழைத்துக் கொண்டு, காசிபட்டணத்துக்கருகே வரும்போது, சூரியாஸ்த மாகி விட்டபடியினாலும் பசியின்கொடுமையினால் நடப்பதற்கு அசக்தர்களாய் மிகுந்த இளைப்போடும் கால்கள் பின்னவிட, அவணுள்ள கபாலமாலாபரணன் என்னும் ஒரு தபோதனரு டைய பன்னசாலையைக்கண்டு, அதிற்போய்ச்சேர்ந்து, அங் கிருக்கு முநிவரைக்கண்டு பணிந்து, தங்களது குறையினைத் தாஞ்சொல்ல, அம்முநிவர் இரக்கமுற்று, அவ்வேதியனை நோக்கி, ஓய் பிராமணோத்தமா, உனதுதந்தை மெய்தவும் நல் லவரென்று யாம் கேள்வியுற்றிருக்கின்றோம், உமக்கு ஈசுவரன் பிள்ளைகளையுந் தாரித்திரத்தையுங் கொடுத்திருக்கிறார். உன் மூத்தமகனுக்கும் உனக்கும் பிரிவுண்டாகும், வினைப்போகங் களை யநுபவிக்கவேண்டியிருப்பதால் அநுபவித்தே தீரவேண் டும். இதோ நம்மிடத்திலிருக்கும் உணவைப் புசித்துப் பசி யாறுங்களென்று தந்த அன்னத்தைப் பெண்சாதிபிள்ளைக ளுடனேயுண்டு ஜலபானஞ்செய்து, அந்தமுனிவரிருந்து தவஞ் செய்கிற ஆலமரத்தருகே ஒரு பாழ்ங்கோயிலில் சயனித்துக் கொண் டிருக்கையில், நடுராத்திரியில், மூத்தபிள்ளையாகிய விசையதத்தனென்பவனுக்கு, குளிரும் காச்சலுமுண்டாக, அதனால் சகிக்கலாற்றாதவனாய்த் தனது தாதையையெழுப்பி, இவ்வேளை நெருப்பெடுத்துவந்து விரகுகள்தேடி மெகிடி போட்டாலொழிய வென்பிராணன் தரியாதென்று சொல்லு வதைக்கேட்ட பிராமணன், புத்திரவாஞ்சையால் அவ்வேளை யில் எங்குந்தேடியுங் கிடைப்பதரிதாகவிருந்தமையால், எங் குங் கிடைக்கவில்லையே என்செய்வேன் சுதனேயென்று துய

ரங்கொள்ள, அப்போது விசையதத்தனென்னுஞ் சிறுவன் பெருந்துன்பத்துக்குள்ளானவனாய்த் தனது தகப்பனைப்பார்த்து, நீர் பொய்சொல்லுகின்றீர், அதோ வெளிச்சம்புலப்படுகின்றமையால் எவ்விதமேனும் போய்க்கொண்டுவாருமென்று சொல்ல, அதுகேட்ட பிராமணன் அடா குழந்தாய், நீசொல்லுகிறது உண்மைதான் அது சுடலைக்கரையாதலாலும் அங்கோர் சவம்வேகின்றமையாலும் அத்தீயைத் தொடப்படாதென வந்துவிட்டேன், ஏனெனில், அப்புகை நமது தேகத்திற்பட்டால் ஆயுளுஞ் ஜீரணமிரவதோடும் வியாதிகளும் விசேஷப்படுமென்று வந்துவிட்டேனென்று சொல்ல, அதுகேட்ட விசையதத்தன், அந்தோ நீரென்னை யநியாயமாய்க்கொல்ல நினைக்கின்றீர், அச் சவஞ்சுடுந்தீயே இந்தவேளையிலென்னைக் காப்பாற்றும், போய்க் கொண்டுவாருமென்று சொல்ல, அதுகேட்ட பிராமணன், மிகவுந் துன்பத்தோடும் புத்திரசோகத்தால் எழுந்து மசானத்தைநோக்கிப் போகையில் விசையதத்தனும் யானும் வருகிறேனென்று பிறகே செல்ல, அப்போது பிராமணன், பிணம்வைத்தெரிகிற விடத்திற்போய் அந்தச் சவநெருப்பில் குளிர்காயச்செய்து, புதல்வனுக்கு இதஞ்செய்தபிறகு, அப்பிணத்தின் தலைமூளையில் அக்கினிபிடித்துப் பச்சைவர்னமாகவும் நீலவர்னமாகவும் பிரகாசந்தோன்றுகின்றதை விசையதத்தன்கண்டு, தகப்பனைப் பார்த்து, ஐயா இதுவென்ன, இப்படியாகப் பிரகாசிக்கின்றதென்று கேட்க, அப்போது தந்தையானவன் புத்திரனைப் பார்த்து, அடா குழந்தாய், அந்தப்பிணத்தினது தலையிலிருக்கும் மூளையில் அக்கினிபிடித்து எரிகின்றமையால் அவ்வாறு பிரகாசந் தோற்றுகிறதென்று சொல்ல, அதுகேட்ட விசையதத்தனென்பவன், உடனே யொருகட்டையையெடுத்து அப்பிணத்தின்றலையிலேயடிக்க, மண்டையானது தெறித்து அம்மூளையிற்கொஞ்சம் தன் உதட்டின்பேரிற்பட, அதனை விரைப்போகத்தினால் அறியாவலோடும் நக்கிச் சுவையாயிருந்தமையால் மறுபடியு மந்தமண்டையைக் கையிலெடுத்துக்கொண்டு

அதிலிருந்த மூளையனைத்தையுஞ் சாப்பிட்டு, உடனே ஆகாயத்துக்கும் பூமிக்குமொன்ருய் நீலகிரிபோல காத்திரமாகிய வுருவங்கொண்டு, மூன்றும்பிறையைப்போன்ற வக்ரதந்தங்களும் சிவந்தமயிரும் உருண்ட கண்களுமாய் வேதாளரூபத்தோடும் அண்டகடாகங்களெல்லா மதிரத்தக்கதாய் கெர்ச்சித்துப் பாய்ந்து, அவன் வெந்துகொண்டிருக்கும் பிணத்தைத் தூக்கி வாயிற்போட்டுக்கொண்டு அங்கிருந்த தனது தாதையாகிய பிராமணனையும் பட்சணஞ்செய்ய நினைத்து, நெருங்கும்போது, ஆகாயத்திலே யவனைத்தொடாதேயென்று ஒரு அசரீரி யுண்டானமையால், அவ்வோசையைக் கேட்டவுடனே பயந்து அகலச்சென்று ஆகாயமார்க்கமாய்த்தாவி, அம்மயானத்திலுள்ள காளிகூளி பூதப்ரேத பசாசகணங்களுக்கு அரசன் மகிழும்படியான காணிக்கையாகி, கபாலபோடன் என்னும் பெயர்பூண்டு, நராத்திபூடணனென்கிற வேதாளராஜனிடத்திலேபோய்ச் சேர்ந்து, அவனுடைய சேனைகளுக்கெல்லாம் சேனைபதியா யிருந்தான்.

இப்படி யிருக்கும்போது அந்த வேதாளராஜனுகிய நராத்திபூடணன் சித்திரசேன னென்பவனுல் மடிந்துவிட்டபடியால் இக்கபாலபோடன் அப்பட்டத்துக் குரியவனுகவிருந்து சஞ்சரித்துக்கொண் டிருக்கும்போது, முன்னரம்மயானத்திலிருந்த கோவிந்தசாமியென்னும் பிராமணன் தனது பிள்ளைக்கு நேரிட்டகாரணத்தைநோக்கி, மகாவியசனத்தோடும் அம்மயானத்தைவிட்டு நீங்கித் தாங்களிறங்கியிருந்த பாழ்ங்கோயிலைச்சேர்ந்து, தனது பாரியாளிடத்திலும் இளையகுமாரனுகிய அசோகதத்தனிடத்திலும் நடந்த சவிஸ்தாரங்களை யாதியோடந்தமாய்ச் சொல்லிக் கொடுந்துன்பத்தோடுந் தங்கள்மனைதத் தாங்களே தேறுதலை செய்துகொண்டு, அவணின்றும் பிரயாணப்பட்டுக் காசிபட்டணத்திற்சேர்ந்து, ஒரு வருடகாலம் வரையில் மூஷ்டியெடுத்து ஜீவித்துக்கொண் டிருக்கையில், தனக்கு நெடுநாள் நேசனுகவிருந்த சமுத்திரதத்தனென்னு மோர் செட்டியைக்கண்டு,

தனக்கு நேரிட்ட துன்பங்களையெல்லாம் அவனோடுசொல்லித் துன்பப்பட, அவனும் வியசனமடைந்து பிராமணனுக்குத் தேறுதலைச்சொல்லித், தன்னிடத்தில் வைத்து அன்னவஸ்திரங்களுக்குக் குறைவில்லாமற் பாதுகாத்து வருகையில், அம்மறையவனுடைய இளையகுமாரனாகிய அசோகதத்தனென்பவன் தன் மரபுக்குரிய வேதசாஸ்திர புராணங்களியாவுமோதியுணர்ந்த தன்றியும் க்ஷத்திரியதர்மத்துக்குரிய தநுர்வேதங்களையுங் கற்று மகாவல்லவனாய் ஒப்பொருவரில்லாதவனாகியும் யாவரும்பார்த்துச் சந்தோஷப்படும்படியாகிய வல்லமைபொருந்தி யிருப்பதை யப்பட்டணத்துக் கிறைவனாகிய வேந்தன் கேட்டுச்சந்தோஷங்கொண்டு, அசோகதத்தனை வருவித்துப் பலவகையினு மவனைப் பரீட்சித்து, அவனது பராக்ரமத்துக்கு மெச்சி, வேண்டிய பரிசுகள்செய்து, தன்னிடம் வைத்துக்கொண் டிருக்கும்போது, தென்றிசையிலிருந்து ஒருமல்லன்வந்தான், அவனைக்கண்டு, ராஜசதசிலுள்ள மல்லர்கள் அஞ்ச, அரசன் அசோகதத்தனைநோக்கி, இந்தமல்லனை வெல்வையானால் உனக்குவேண்டியவற்றைத் தருவேன் என, அப்படியே அந்த மல்லனை ஒரு அறையால் கொன்றதைக் கண்டு, அரசன் இவனிடத்தில் சந்தோஷமிருந்து இவனை தனக்கு உயிர்த்துணைவனாய் வைத்துக்கொண்டான். இப்படியிருக்கையில், ஒருநா ளிவ்விருவரும் வேடிக்கையார்த்தமாயிரண்டு குதிரைகளின்பேரிலேறி வனத்தைநோக்கிச் சாரிமார்க்கமாய் வனத்துள் நெடுந்தூரங் குதிரைகளைவிடுத்துப் போதுபோய்விட்டதுகண்டு திரும்பிவருகையில், அவ்வனத்தில் இவ்வரசனது ஆஞ்ஞையினாற் கழுவேற்றப்பட்டிருக்குமொருவன் எட்டுதினமாய் அக்கழுவினின்று மரணமாகாமற் பிராணாவஸ்தை யநுபவித்து, காவறட்சிகொண்டு, இன்னாரென் றிவர்களை யறியாதவனாய், ஐயா புண்ணியர்களே, பாபியாகிய வெனக்கு இவ்வேளை ஜலந்தருவீர்களாகில் பெரும் புண்ணிய முண்டாமென்று கூறியதைக்கேட்ட அரசன், அசோகதத்தனைப்பார்த்து, அப்பா, இவன்படும் பிராணவேத

னைக்கு இவ்வேளை ஜலந்தேடிக்கொடுப்பது புண்ணியமாதலாலும் ஜலஞ் சமீபத்திற் கிடைப்பது அரிதாயிருப்பதாலும் கொஞ்சம் பிரயாசையெடுத்துக்கொண்டு ஜலமிருக்குமிடந் தேடிக்கொண்டுவந்து அவனருந்தியபின்னர் வந்துசேரக் கடவையென்றும், போதுபோய் விட்டமையால் நான் பட்டணம்போய்ச் சேருகிறேனென்றுஞ் சொல்லித் தான் குதிரையை வேகமாய் விட்டுக்கொண்டு பட்டணம்வந்து அரண்மனை சேர்ந்தான். பின்னர், அசோகதத்தனனவன் அரசனுத்தரவின்படி யவ்வனமுழுதுஞ்சுற்றி யோர் தடாகத்தைக்கண்டு, பாத்திரமில்லாமையா லக்கானகத்துள்ள தேக்கிலையைப்பறித்து, தொன்னைப்போல் தைத்து, அதிற் சலத்தை முகந்து கொண்டு, குதிரையேறிக் கழுவை நாடிவருகையில், அக்கழுமரத்தினடியில் மிகவும் ரூபலாவண்யத்தோடுங்கூடிய வோர் பெண்ணனவள் படுத்திருந்து இவன்வருதலைக்கண் டெழுந்திருக்க, அப்பெண்ணைநோக்கி, அசோகதத்தனனவன், ஓ பெண்பாவாய், நீ யார், நீ யிங்கிருப்பதற்குக் காரணமென்னவென்று கேட்க, அதுகேட்ட அம்மாது, ஐயா, நான் இக் கழுவிலிருப்பவரது மனையாளாதலால், எனது கணவன் இக் கழுவினின்றும் பிராணன் விடுத்தவுடனே யானும்பிராணனை விடுவதற்கு எண்ணங்கொண்டு எட்டுதினமாய்வந்து காத்திருக்கின்றேன், அவர் தாகவிடாயைத் தணிப்பதற்குங் கழுமரம் உயர்வாயிருப்பதால் யாதும் வகையில்லாமல் வருந்துகிறேனென்றுசொல்ல, அவ்வுரைகேட்ட அசோகதத்தன், இவள் உண்மையானவளென்று மதித்துத் தன்னிடமிருந்த ஜலத்தை யவளிடங்கொடுத்து இதனை யுன்புருஷனுக்குக் கொடுத்து தாகத்தைத் தணிப்பாயென்றுசொல்ல, அதற்கவள், ஐயா, கழுமரம் உயர்வாயிருப்பதால் எவ்வாறு எட்டிக்கொடுப்பேனென்று சொல்ல, அதற்கு, அசோகதத்தன், ஓ பெண் பாவாய், நானிந்தக் கழுமரத்தடியி னிற்கின்றேன், நீ எனது தோளின்பேரிலேறி நின்றுகொண்டு உன்கணவனை ஜலமருந்தச்செய்வாயென்றுசொல்ல, அதுபோலவளு மிவன் றோளின்

பேரி லெறிகின்று தனது கணவனுக்கு ஜலத்தைக் கொடு த்துக்கழுவிற்றெருக்கு மவனுடையதேசத்திலிருந்து பெருகு மூலிகத்தை வாயிலுலவளுரியும்போது, இதுவென்னவென்று அசோகதத்தன் அண்ணாந்துபார்க்கையில், அவள் இராட்சத வுருவங்கொண்டு வர்ச்சித்து ஆகாயவீதியிலெழும்பும்போது, அவளது கால்களை கெட்டியாய்ப் பற்றியிருந்தவனாதலால் இவனுமாகாயத்திற்கூடவே கிளம்பியவள் காலிலிருந்தசிலம்பு களிலோர் காற்சிலம்புவிடுபட்டு இவன்கையிற்சிக்க, அச்சிலம் போடும் பூமியில் வகுவாய்குதித்து இம்மரத்தடியிற் படுத் திருந்தவனை யாக்கியென்றறியாமல் மோசம்போனேனென்று கருதி, மனதைத் தேற்றிக்கொண்டு குதிரைமேலேறி, சிலம் போடும் பட்டணம்போய்ச் சேர்ந்து, தான் கொண்டுவந்த சிலம்பை யரசனிடங் கொடுத்து, நடந்தசவிஸ்தாரங்களை யாதியோடந்தமாய்ச்சொல்ல, அதுகேட்ட அரசன், அசோக தத்தனுடைய தயிரியபராக்ரமத்துக்கு மெத்தவுஞ் சந்தோஷ மடைந்து, தனதுபுத்திரியாகிய மதனலேகை யென்பவளை யவனுக்குக்கொடுத்து விவாகஞ்செய்ய, அதுபோலவனு மப் பெண்ணை மணந்து அவ்வரசனுக்கு மருமகனாகி வாழ்ந்துவரு நாளில், ஒருநாள் அசோகதத்தனது மாமனாகிய வேந்தன், இவ னாற்கொண்டுவந்துகொடுக்கப்பட்ட பொற்சிலம்புக்கிணையான சிலம்பு சம்பாதித்துத் தன்னுடையதேவிக்குக் கொடுக்க வேண்டுமென்னுமாசையோடுங்கூடிச்சொல்லிக்கொண்டிருக் கையில், அதைக்கேட்ட அசோகதத்தன் யோசித்து, இதற் கிணையாகிய சிலம்பைக்கொண்டுவருகிறேனென்று பிரயாணப் பட்டுத் தானுன் முன்பு தங்களது சுதேசத்தைவிட்டு பிர யாணமாகி வரும்போது தங்கியகோயிலைச் சார்ந்த மயானத் திற்கு அர்த்தராத்திரியிற் போய்ச்சேர்ந்து, தனக்குத்தெரிந்த மந்திரங்களைப் பிரயோகஞ்செய்து, டாகினிமுதலாகிய பூத வேதாளங்களையும் பேய்பசாசங்களையும் வரவழைக்க, அத [illegible] கழுமரத்தடியிலிருந்து இராட்சத வுருவத்தோடும் ஒருபெண் அரக்கியும் வந்துநிற்க, அவளைக்கண்ட அசோக

தத்தன் மந்திர பீஜங்களை யனேகங்கட்டிக்கொண்டு, வாரும் பெண்ணே, நீ மூன்றுமுலை யென்னைவிட்டுப் போகிறபோது தவறிப் போட்டுவிட்டுப்போன வுனது சிலம்பில் ஒருசிலம்பு என்னிடத்திலிருப்பதால் மற்றொருசிலம்பையும் கொடுப்பா யென்றுகேட்க, அதுகேட்ட அரசிபுத்ரிசந்தோஷமடைந்து, அவனுடைய சவுரியபராக்கிரமங்களைக்கண்டு அதிசயித்து, தன்னிடமிருந்த பொற்சிலம்பைக் கொடுத்ததேயன்றி அவனது பராக்கிரமத்துக்கு மெச்சிப் பொற்றாமரை மலரொன்றையும், தன்னுடைய குமாரத்தியாகிய வித்துத்துப் பிரபையையும் கொடுத்துப் போய்வாருமென்று சொல்ல, அப்படியே அசோகதத்தன் மகாசந்தோஷத்தோடு சிலம்பைப்பெற்றுக் கொண்டு வித்துத்துப்பிரபையென்னும் பெண்ணுடனே காசி பட்டணம் வந்துசேர்ந்து, அரசனைக்கண்டு, தான் போய்வந்த சங்கதிகளை யாதியோடந்தமாய்ச் சொல்லிச் சிலம்பையு மரச னிடங்கொடுத்துச் செலவுபெற்றுக்கொண்டு வித்துத்துப் பிரபை யென்பவளைத் தனதுபத்தினியாகிய மதனலேகை யுடனேசேர்த்துச் சுகமாய் வாழ்ந்துவரும் நாளில், ஒருநாள் வித்துத்துப்பிரபை யென்பவளும் அசோகதத்தனும் அம்ஸ தூளிகா சயனத்திற் சயனித்துக்கொண் டிருக்கும்போது, அவள் குழலிலேதரித்திருந்த பொற்றாமரை மலரைக்கண்டு ஆச்சரியங்கொண்டு, அடிபெண்ணே, இந்தப்பொற்றாமரை மலருனக் கேதென்றுகேட்க, அதற்கு வித்துத்துப்பிரபை யானவள், நாயகா, இம்மலர் இப்பட்டணத்துக் கருகாமை யாயிருக்கும் வனத்திற் கபாலபோடனென்னும் வேதாளத் தினது பூந்தோட்டத்திற் பொய்கையிலே யுண்டாயிருக்கிற தென்றும், யாரோகொண்டுவந்து உன்மாமனாகிய வேந்த னுக்குக் கொடுத்ததாய் எங்களுக்குக் கொடுத்தனுப்பினு ரென்று சொல்ல, அதுகேட்ட அசோகதத்தன், வேதாள னாவது பூந்தோட்டமாவது பார்ப்போம் வருவாயென்று கூட் டிக்கொண்டு, அந்தப்பட்டணங்கடந்து, வனத்திற் பிரவே சித்து, வேதாளன்வாழ்ந்துவரும் வனத்திற் பூஞ்சோலைகண்டு,

அக்காவிலிருக்குந் தடாகக்கரையின்மீதுவந்து நின்றார்கள். அதுகண்ட அப்பூங்காவின் காவலாளிகளாகிய பூதப்பிரேத கணங்கள் கோபங்கொண்டு, கொல்லுவதற்கு நெருங்கி யட்டகாசஞ்செய்வதைக்கண்ட அசோகதத்தன் சிங்கம்போற் பாய்ந்து தன்னிடத்திலிருக்குஞ் சந்திராயுதத்தினால் அவைகளைச் சின்னாபின்னங்களாய் வெட்டிச் சிதைத்துத் தலைவிரிகோலமாய் நான்குதிக்கினு மோடும்படிசெய்ய, அப்போது அவைகள் மிகவு மச்சங்கொண்டு ஓடித் தமது இறைவனாகிய கபாலபோடனிடத்தில் முறையிட, அம்முறைகேட்ட வேதாளமுங் கோபாவேசங்கொண்டு, கர்ச்சித் தாரவாரத்தோடும் அசோகதத்தனை யெடுத்து விழுங்குவதற்கு நெருங்கின அப்போது அசோகதத்தன் மந்திரவாளை யுருவிக்கொண்டு வேதாளத்தைச் சின்னாபின்னமாகும்படிவீசி, மயங்கச்செய்து கொல்லவேண்டுமென்று வாளையுருவி யோங்குகையில், அப்போது ஆகாயவீதியிற்செல்லும் விக்கினதநிகவுதுகனென்னும் விஞ்சையரரசன்கண்டு, அடா அசோகதத்தா, வேதாளத்தை வெட்டிக் கொல்லாதேயென்றான். அதுகேட்டவுடனே ஆகாயத்தை நோக்கையில், விஞ்சையரசனை விக்கினதநிகவுதுகனைக் கண்ணினாற்கண்டான். அவ்வாறு கண்டவுடனே யிவன் சாபநீங்கித் தன்நினைவுண்டாகிப் பழயசொரூபமுடையனாய்ச் சுகன்னனென்னப்பட்டவனாய் விளங்கினான். அப்போது இந்தச் சுகன்னனைப்பார்த்து, வாரும்பிள்ளாய் சுகன்னனே, இந்த வேதாளசொரூபம் பெற்றிருக்கப்பட்டவன் உனது தமயனாகிய சுதரிசனனாதலால், உங்களுக்குக் காளவமகாரிஷியினுடைய சாபத்தால் இப்படி நேரிட்டிருந்தது, அதில் உனக்கு என்னைக்கண்டவுடனே சாபவிமோசனமாச்சுது. உனது தமயன் சாபந்தீரவேண்டியிருப்பதால், ஆதியிற் பிரமதேவன் சனகாதியர்களுக்குச் சொல்லியிருந்ததை உனக்கு நான் சொல்லுகிறேன் கேட்பாயாக, யாதெனில், ஸ்ரீராமசந்திரமூர்த்தியாற் கட்டப்பட்டு விளங்குஞ் சேதுவிற் சக்கரதீர்த்தத்திற்குத் தென்பாகத்திலே ஓர் புண்ணியதீர்த்தமிருக்கின்றது, அப்

புண்ணியதீர்த்தத்திலே இவ்வேதாளத்தைக் கூட்டிக்கொண்டு போய் தீர்த்தமாடும்படி செய்துவைத்தால் இதனுடைய சாப விமோசன மாமென்றுசொல்ல, அதுகேட்ட சுகன்னனும் மந்திரசக்தியினால் வேதாளத்தை யழைத்துக்கொண்டு தென்றிசையை நோக்கிச் செல்லும்போது, விக்கினதநிகவுதுகனும் ஆகாயவீதியில் விமானத்தை விடுத்துக்கொண்டு தன்னுடைய லோகம்போய்ச் சேர்ந்தான். அக்காலையிற் சுகன்னனுனவன் சக்கரதீர்த்தத்திற்குத் தென்பாலாகவுங் கந்தமாதனத்திற்கு வடபாலாகவுமிருக்கும் புண்யதீர்த்தக்கரைவந்து சேர்ந்தார்கள். அச்சமயத்தில், காற்றினால் அலைகளானவை அதிவேகமா யெழுந்து, அவற்றினின்றுந் திவலைகள் வேதாளத்தின்மீது தெறிக்க, உடனே சாபநிவர்த்தியாய் வேதாளசொரூபமாறிப் பழயசொரூபத்தோடுஞ் சுதரிசனன் தம்பியாகிய சுகன்னனைக் கட்டிக்கொண்டான். இப்படி யிருவருமொருவரையொருவர் கட்டித்தழுவி யானந்தங்கொண்டு அப் புண்ணியதீர்த்தத்திலே சங்கற்பவிதிப்படி நீராடித் திவ்யசொரூபத்தைப் பெற்றுக்கொண்டவர்களாய் அத்தீர்த்தத்திற்கு வேதாளவரததீர்த்தமென்று விளங்கக்கடவதென்று பெயர் கொடுத்துப் பின் பிரண்டுபேரும் விமானத்தேறி, தேவர்கள் மலர்மாரிதூவத் தேவதுந்துமிமுழங்க அப்ஸரஸ்த்ரீகள் நடனஞ்செய்யும்படியாய் காந்தர்வலோகம்போய்ச் சேர்ந்தார்கள். அன்றுமுதல் அத்தீர்த்தத்திற்குவேதாளவரததீர்த்தமென்று பெயர் விளங்கிக்கொண்டிருப்பதனறியும், அதில் மூழ்கப் பட்டபேர்களுக்கு, பூதப்பிரேத பசாசகணங்களின் உபத்திரவங்களிருந்தபோதினும் விலகுவதோடு மவர்கள்செய்த பாபங்களும் நிவர்த்தியாம். அதின் மகிமையை யளவிட்டுச் சொல்லப்போகாதென்று சூதமகாமுநிவர்சொல்ல, அதைக்கேட்ட நைமிசாரண்யமுநிவர்கள் சந்தோஷமடைந்து, அம்முநிவரை நோக்கி, சுவாமீ! இன்ன மச்சேதுவின் மகிமைகளைச் சொல்ல வேண்டுமென்று பணிந்து வினவச், சூதமாமுநிவர் சொல்லத் தொடங்கினர்.

வேதாளவரததீர்த்தச்சருக்கம்
முற்றுப்பெற்றது.

---

## பாவநாசச்சருக்கம்.

---

கேளுங்கள் நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்களே, இப்போது யாம் சொல்லிவந்த புண்ணியதீர்த்தங்கள் தவிர இன்னுந் தீர்த்தங்களு மனேக புண்ணியங்களுங் கந்தமாதனபருவதத்திலே விளங்கிக்கொண்டிருக்கும், அக் கந்தமாதனபருவதம் நாமிப்போது சொல்லிவந்த வேதாளவரததீர்த்தத்திற்கு தெட்சணபாரிசமாயுங் கைலாசபதியாகிய சாம்பமூர்த்திக்கு இருப்பிடமாகியும் விசுவகர்மாவால் நிருமிக்கப்பட்ட வேதாரண்யமுதலிய சிவஸ்தலங்களிலும் விஷ்ணுஸ்தலங்களிலும் சிரேஷ்டமாய்த் தென்கடல் சூழ்ந்ததாய் சகல தேவர்களும் நவகோடி சித்தர்களும் சித்தபுருஷர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் கின்னர கிம்புருட கருட காந்தருவ சித்த வித்யாதரர்களும் அஷ்டவசுக்களும் ஒன்பது கோடிகளும் வாசஞ்செய்துகொண் டிருக்கப்பட்டதாய் அநேக வளம்பொருந்தியிருக்குங் கந்தமாதனபருவதத்திலே, சந்திரஜடாதர மூர்த்தியாகிய பரமேசுவரன் பார்வதிசமேதராய் மகாவிஷ்ணு முதலியவர்களுடனே விளங்கிக்கொண்டிருப்பார். அக்கந்தமாதனபருவதத்தைக் கண்ணினாற்கண்ட புண்ணியர்களுக்குநித்தியானந்தமோட்ச சாம்பிராச்சியங் கிடைப்பதன்றியும் பரஸ்திரீகமனத்தால்வந்த பாதகங்களும் சிசுஹத்தி பிரமகத்திகள் செய்த பாதகங்களும் மாதாபிதா குருமுதலாகிய பெரியோர்களை நிந்தனைசெய்த பாதகங்களும் பரப்பிரம்ம சொரூபமாய் விளங்கப்பட்ட கந்தமாதனபருவதத்தை தெரிசித்தாலும் அவ்வெல்லையை மிதித்தாலும் அதிலுண்டாகிய காற்றினது பரிசம்பட்டாலும் மகாபுண்யசாலிகளாய் திவ்யசொரூபங்களைப் பெற்று புண்யலோகங்களை அடைவார்கள். அக்கந்தமாதனத்திலே குடிகொண்டிருந்து வாழப்பட்ட நரஜென்மங்களும் மிருகஜாதிகளும் பட்சிசாதிகளுமாகிய யாவும் தேவதாசொரூபங்களைப்போலும், விருட்சங்களெல்லாங் கற்பகவிருட்சங்களைப்போலும், தீர்த்தங்களெல்லாம் புண்யதீர்த்தங்களாக

யும், அப்பருவதத்திலுள்ள மணல்களெல்லாஞ் சிவலிங்க சொருபங்களாகவும் விளங்கிக்கொண்டிருக்கும், அக்கந்தமாதன பருவதத்திலே வசிக்குந் தேவர்களைத் தெரிசித்தவர்கள் சக்கரதீர்த்தத்திலும் வேதாளவரததீர்த்தத்திலும் விதிப்படி முழுகி, பின்னர் அப்பருவதத்தின் எல்லையைக் கண்டவுடனே வணங்கிப் பூசித்து, அடியோங்கள் கடைத்தேறும்பொருட்டு யாத்திரைசெய்து வருகிறவரைக்கும் எங்களுடைய கால்கள் உன்மீதிற்படுகிற குற்றத்தைப் பொறுத்து ரட்சிக்கவேண்டுமென்று தோத்திரஞ்செய்து, பின்பு தங்களுடைய கால்களிற் பாதுகையில்லாமல் கிழ்முகமாய்த்திரும்பி மெல்ல நடந்து அக்கந்தமாதனத்திலே விளங்குகின்ற புண்ணியதீர்த்தங்களிலாடி, இராமலிங்கத்தை தெரிசித்து, வருபவர்கள் ஒருகடி களவு பிண்டமாகிலும் அக்கந்தமாதனபருவதத்தில் தங்களுடைய பிதிர்களை நினைத்துத் தர்ப்பணஞ்செய்து தத்தம்பண்ணினால், அவர்கள் கற்பகோடிகாலம்வரையிலும் புண்ணியலோகத்திலே ஆனந்தத்தையடைவார்கள், அவ்வாறு செய்பவர்களுக்கு அதுமுதல் பிதுர்களில்லாதிருப்பதோடும் அவர்கள் வமிசத்தில் கோடிதலைமுறைவரையிற் சேர்ந்தபேர்களென்ன சென்மமெடுத்து மென்னபாபங்கள் செய்திருந்த போதினும் அவர்களுக்கு எமதரிசனமுந் தெண்டனையுங் கிட்டாமல் விலகிப்போம், இவ்வித மகிமைவாய்ந்த கந்தமாதனபருவதமானது ஸ்ரீராமமூர்த்தியின் வாக்கியப்படியே தெய்வத்தச்சனானவன் அநுமார்முதலிய வானரவீரர்களைக்கொண்டு சேதுபந்தனஞ்செய்கிறபோது தென்சமுத்திரக் கரையோரமாய் சமுத்திரத்திலிருந்ததை ஸ்ரீராமமூர்த்திக்குத் தெரியப்படுத்தி, அவருடைய ஆக்கினையின்படி யதனைச் சேதுவின் மத்தியிலே வைத்து அணைகட்டினார்களாதலால் அச்சேதுவின் மத்தியில் விளங்குகிற கந்தமாதனமலையிலே அநேகங்கோடி தீர்த்தங்கள் விளங்குவதில் பாவநாசமென்றொரு தீர்த்தமிருக்கின்றது, அத்தீர்த்தத்தில் முன்னோர்காலையில் இமயமலைச்சாரலில் பிரமவாசிரமமென்று விளங்கப்பட்டவனத்தில், கற்பகவிருட்சங்

களும், சண்பகமுதலிய மரங்களும் பருவதங்களும் நெருங்கிச் சோலைகளாகாயத்தை யளாவவும், வண்டுகள் கீதம்பாடவுஞ் சிங்காரத்தோடுங் கூடியிருக்கு மவ்வனத்தில் ருஷீசுவரான் முதலிய தபோதனர்களும் பிரமசாரிகளும், வானப்ரஸ்தருஞ் சந்யாசிகளும் அடர்ந்து கூடியிருப்பவர்களிடத்திலே, திடமதியென்று பெயரையுடைய ஒரு சூத்திரன்சேர்ந்து அவர்களாலோதப்பட்ட வேதசாஸ்திரங்களைக்கேட்டு, அன்னவர்களைப்பணிந்து நமஸ்கரித்து, ஓ பெரியோர்களே, நீங்கள் செய்கிற கிரியைகளெல்லாம் யான்செய்யவேண்டு மென்று மிகவு மாவலாயிருப்பதால், என்னை உமதுதொண்டனாக வடிமைப்படுத்தி, எனக்கு வேதங்களை யோதிவைத்து, நீங்கள் நடாத்திவரும் யாகாதிகிர்த்தியங்களைப்போல் யானுமநுட்டிக்கக் கருணைசெய்யவேண்டுமென்று அவர்களை வேண்டுதல்செய்ய, அதற்கவர்கள், அச்சூத்திரனைநோக்கி, வாராய், திடமதியே, நீ சூத்திரனாகப்பிறந்து மாமிசாதிகளைப்புசித்து அநேக பாவங்களைச் செய்திருப்பதால், உனக்கு யாகாதிகிர்த்தியங்கள் செய்யப்பட்ட வேதமந்திரங்களை யுபதேசஞ்செய்யப்படாதாதலால், நீமநுசாஸ்திரவிதியின்படி நடக்கவேண்டிய சரிதையை யநுட்டியாமல் வேதயுக்தமான காரியங்களைக் கேட்கிறது சரியல்ல, மேலும், நன்மார்க்கத்திலேநடந்து, மேலான ஜென்மமெடுத்தால், இக்காரியங்கள் கைகூடுமென்று பெரியோர்கள்சொல்ல, அவ்வாய்மையைக்கேட்ட திடமதியானவன், விசாரமடைந்து, நாம் ஆசையோடுங் கேட்டகாரியம் கைகூடாமற்போய்விட்டதேயென்று நாணமுற்றுத் தலைகுனிந்து தனது கிரகத்திற்போய்ச்சேர்ந்து யோசனைசெய்து, மேலோராற்சொல்லிய சரிதைமார்க்கங்களில் நடக்கவேண்டு மென்று மனதை திடஞ்செய்துகொண்டவனாய், அதுமுதல் நந்தவனங்களைவைத்தும், தடாகங்கள்வெட்டியும், விரதங்களை யநுட்டித்தும், தலங்களைத் தெரிசித்தும், தீர்த்தயாத்திரைகள் செய்தும், பெரியோர்களுக் குபசாரஞ்செய்தும், புண்ணியமான காரியங்களுக்குவேண்டிய திரவியங்களைக்கொடுத்தும், சித்து

புருஷர்களுக்கு கந்தமூலபதார்த்தமுதலியவற்றை உதவியும், மார்க்கங்களில் சத்திரங்கள் மடங்கள் புதுக்கித் தண்ணீர்ப் பந்தர்களமைத்தும், வேதவிதியிற்கூறிய முப்பத்திரண்டறங் களையும் வழுவின்றி நடத்திவருங்காலையில், அம்மார்க்கத்தி லெந்நேரமும் வரத்துப்போக்காயிருக்கும் சுமதியென்னும் பிரமசாரிக்குவேண்டிய வுபசரணைகள் யாதுங் குறைவின்றி விசுவாசத்துடனே நடத்திவருகையில், அவருக் கிவன்மீது பிரியமுண்டாகி நேசித்துவருகையில், ஒருநாள், திடமதியென் பவன், சுமதியென்பவ ரெழுந்தருளியிருக்கு மாசிரமத்துக் குப்போய் அவரைக்கண்டு பணிந்து, சுவாமி, அடியேனுக்கு நெடுநாளாய் ஓர்கருத்துண்டாயிருக்கின்றது, அதுயாதெனில், வேதவிதிப்படி யாகாதிகிர்த்தியங்கள் ஜெபதப ஹோமங்கள் முதலிய யாவு மடிமையேசெய்யும்படி யெண்ணமிருப்பதால் அதற்குரிய வேதமந்திரமூலங்களைத் தமியேனுக்குக் கடா க்ஷிக்க வேண்டுமென்று வினவ, அப்போது சுமதியென்பவர், அவன்மீது வைத்திருக்கும் பிரியத்தினாலே பிரம்மகுலத்திற் குரிய மந்திரதந்திரயோகங்களையெல்லாந் திடமாக அவனுக்கு போதிக்க, அவனு முணர்ந்திருக்கையில், இச்செய்தியை இமய மலைச்சாரலி லெழுந்தருளியிருக்கும் பெரியோர்கள் கேள்வி யுற்று, அச்சுமதியை யாவருந் தூஷிக்க, அதுமுதல் அவருக் குத் தேஜசுகுறைந்து வியாகூலத்தோடும் மரணமடைந்தார். அவ்வாறு மரணமடைந்தவர், யமகிங்கிலியர்களது தெண்ட னைக் குட்பட்டு, இரவுரவாதி நரகங்களிலே கற்பகோடிகாலம் வரையி லுழன்று, பின்பு தாபராதியிற் சம்பந்தப்பட்ட புல் பூடு முதலிய விருட்சங்களாய் அநேக ஜென்மமெடுத்து, அதனினின்றும் நீங்கி, கழுதையாகவும் பன்றியாகவும் நா யாகவும் பிறந்து, அதனினின்றும் நீங்கி, நீசனாகவுஞ் சூத்திர னாகவும் வைசியனாகவும் க்ஷத்திரியனாகவும் பிறந்து அநேக துன்பங்களையெல்லா மநுபவித்து, தனது கன்மங்களைப் போக்கிப் பழையபடியே பிரமகுலத்திற்பிறந்திருக்கிறபோது, தனக்கு ஐந்துவயதிற் சவுளவுபநயனங்களும் வித்யாப்பியாசங்

களும் பண்ணிக்கொண்டு, யாவுமுணர்ந்தவனாக விருக்கும் போது, ஒருநாள் தர்ப்பை சமித்து வேண்டியிருந்து வனத்துக்குப்போய் சேகரஞ்செய்துகொண்டு வருகிறபோது, அவனை யோர் பிராமணப் பேய்பிடிக்க, அதனா லியாதுந் தோன்றாமல் பிரமைகொண்டு கண்கள் சுழலவிட்டு, நாத்தடுமாறிப் பிதற்றலுண்டாய் நானாவித சேட்டைகளுண்டாகி யழுது கூக்குரலிட்டுத் தாவிக்குதித்து, நாளுக்குநா ளதிகரித்து, மூத்திரங்குடித்துப் பயித்தியங்கொண்டவனாய், அதிக துன்பங்களை யநுபவித்துக்கொண்டு வருகையில், அவனைப் பயந்த தந்தையானவன் கண்டு, மகாவியசனமடைந்து, துக்கசாகரத்தில் மூழ்கி, இந்தவினையை யெந்தவிதந் தீர்ப்போமென்றுகருதி, அவனைக் கூட்டிக்கொண்டு யாத்திரைவாசியாய் சிவஸ்தலங்களையும் விஷ்ணுஸ்தலங்களையுந் தரிசித்துந் தீராததாய்த், தென்றிசையிலேயோங்கும் பொதிகைமலைச் சார்பில்வருகிறபோது, முன்னொருகால் சமுத்திரத்தை உள்ளங்கையிலேந்திச் சாப்பிட்ட அகத்தியமகாமுநியானவர் அவ்வனத்தில் வரக்கண்டு, அவருடைய பாதாரவிந்தங்களிலே வீழ்ந்து நமஸ்கரித்து, சுவாமி, அடியேனுக்கு நெடுநாளாய்ப் பிள்ளையில்லாமல் அநேக விரதங்களை யநுட்டித்துப்பிறந்த இப்பிள்ளைக்கு எட்டுவயதுமுதல் பயித்தியங்கொண்டு தீராமற் றுன்பத்தை யநுபவித்துக்கொண்டு வருகின்றமையால், தேவரீர் கிருபைசெய்து இது தீரும்படி கடாக்ஷிக்கவேண்டுமென்று தோத்திரஞ்செய்ய, அப்போது, அகத்தியமுநிவர் கருணையுள்ளவராய் ஞானதிருஷ்டியாற் பார்த்து, வாரும் பிராமணா, இவனுடைய சரித்திரங்களைப் பேசினாலும் மகாபாபம்வருமாதலாலும் இவனெடுத்த ஜென்மங்களுங் கணக்குவழக்கில்லை யாதலாலும் இவன்பாபங்கள் நாசமாகவேண்டுமாதலாலும் அதற்கொருவகை சொல்லுகிறோம், யாதெனில், சேதுவிலேயிருக்குங் கந்தமாதனபருவதத்தருகில் வேதாளவரத தீர்த்தத்திற்கு ஈசான்யபாகத்தில் ஓர் புண்ணியதீர்த்தமுண்டு, அப்புண்ணியதீர்த்தத்தில் இவனைக் கொண்டுபோய் ஸ்நாநம்

பண்ணிவைத்தால் உடனே இவனுடைய பாபங்கள் விமோசனமாய் இப்பயித்தியம் நீங்குமென்று சொல்ல, அதுகேட்ட பிராமணன், சந்தோஷமடைந்து, முனிவரைப் பணிந்து, விடைபெற்றுக் கொண்டவனாய்ப், பிள்ளையைக் கூட்டிக் கொண்டு சேதுவைச்சேர்ந்து, அவனோடுங் கந்தமாதன பருவதச்சாரலிலுள்ள புண்ணியதீர்த்தங்களைக்கண் டாச்சரியமடைந்து, சங்கற்பவிதியின்படி பிள்ளையை மூழ்கச்செய்து, தானும் நீராடியவுடனே, பானுவைக்கண்ட பனிபோலும் அனலைக்கண்ட குளிர்போலும் அப்பிள்ளையினது பாபங்களெல்லாம் நீங்கிக் கிருதார்த்தனாய் சரியான மானத்தோடும் தகப்பனைப்பார்த்துப் பணிந்து, ஓ பிதாவே, நாம் இங்குவந்ததற்குக் காரணமியாதென்று கேட்க, அதற்குத் தந்தையானவன் மகாசந்தோஷத்தையடைந்து, நடந்த சவிஸ்தாரங்களையெல்லா மவனுக்குரைத்து, மூன்றுநாள்வரையில் அங்கிருந்து தீர்த்தமாடி, நான்காநாட் பிரயாணப்பட்டுத் தனதிருப்பிடம் வந்துசேர்ந்து, அளவிறந்த செல்வத்தோடும் வாழ்ந்து, பின்னர் ஞானசொரூபத்தையடைந்து மோட்சத்தை யடைந்தான். பின்பு இவனிடத்தில் வேதமந்திரங்களைக் கேட்டவார்த்த இடமதியென்னுஞ் சூத்திரன், அதுமுதல் மகாவறுமைத் தசையையடைந்து உயிர்விட்டவனாய், அநேக கற்பகோடிகாலமளவும், இரவுரவாதி நரகவேதனைக்குள்ளாகி அநேககோடி ஜென்மங்களிற்பிறந்து, அப்பால் கழுகுருவமாய்ப் பிறந்து பிணமுதலிய மாம்சாதிகளைப் புசித்துக்கொண்டு திரிகிறபோது, ஒரு நாள் தானே சுயமாய்க் கந்தமாதனச் சார்பிலே விளங்குகின்ற புண்ணியதீர்த்தத்தில்வந்து தாகத்தினால் தண்ணீரருந்தி, வெய்யிலின் தீட்சண்யத்தால், அப் புண்ணியதீர்த்தத்திலே சிறகைவிரித்து, ஜலத்தை யெல்லா மிறைத்துக்கொண்டு, அச்சலத்திற் றலையைத்தோய்த்து, மூக்கினாலே தண்ணீரைக் கோதி விளையாடுகிறபோது, அதினுடைய பாபங்களெல்லாம் நாசமாய் முன்செய்திருந்த புண்ணிய விசேடத்தினாலே தெய்வசொரூபம்பெற்று, ஆடையாபரணங்களுடன் விளங்கின-

னாய், தெய்வவிமானத்திலேறி, தேவர்கள் மலர்மாரிசிந்தி தேவதுந்துமி முழக்கவும், தேவகணங்கள் ஆலவட்டம் பீலிக் குடைபிடித்துச்சாமரம்வீசிவரவும், அரம்பை யூர்வசி திலோத்தமை மேநகைமுதலிய அப்ஸரஸ்த்ரீகள் நடனஞ்செய்து வரும்படியாயும் தெய்வலோகம்போய்ச்சேர்ந்து, தேவபோகங்களை யநுபவித்துக்கொண் டிருந்தான். இவ்வாறு இவ்விரண்டுபேர்களுடைய அளவிறந்த ஜென்மங்கடோறுஞ்செய்த பாவங்களையெல்லாம் நாசப்படுத்திய புண்ணியதீர்த்தத்திற்குப் பாவநாசமென்று அதுமுதற் பெயர்விளங்கிக்கொண் டிருக்கிறபடியால், அப்படிப்பட்ட புண்ணியதீர்த்தத்திலே தகாத காரியங்கள்செய்து அதனால் பாபிகளானபேர்களும் மூழ்கினால், உடனே யவர்கள்செய்த பாபங்கள் நாசமாய்ப் புண்ணியர்களாகி, திவ்யசொரூபத்தைப் பெறுவார்கள். அத்தீர்த்தத்திற்குக் கீழ்ப்பாரிசத்தில், சீதாதீர்த்தமென்று ஒரு தடாகமிருக்கின்றது, அத்தடாகத்தில் அமராவதிபட்டணத்துக் கிறைவனாகிய தேவேந்திரனது பிரமஹத்தி விமோசனமாயிருக்கிறதென்று சூதமாமுநிசொல்ல, அதைக்கேட்ட நைமிசாரண்யவாசிகளாகிய முநிவர்கள் சந்தோஷமடைந்து, சுவாமீ! தேவேந்திரனுக்கு பிரமஹத்தி சம்பவித்தவிதமும், சீதாதீர்த்தத்தினால் அவை விலகியபெருமையுந் தேவரீர் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று கேட்கச், சூதமுநிவர் கருணைசுரந்து அவர்களுக்குச் சொல்லத்தொடங்கினார்.

பாவநாசதீர்த்தச்சருக்கம்
முற்றுப்பெற்றது.

---

## சீதாகுண்டச்சருக்கம்.

கேளுங்கள் நைமிசாரண்ய வாசிகளாகிய முநிவர்களே, முன்னொருகாலத்தில், வைஜயந்தமென்னும் பட்டணத்திலே, சுபாஸுரனென்னும் ஒரு ராக்ஷதன் பிரமதேவனை நோக்கித் தவஞ்செய்து அநேக வரப்பிரசாதங்களைப் பெற்றுக்கொண்ட

வனாய், குணபலூணனென்னு மந்திரியுடனேயு மநேகராக்ஷதப்படைகளுடனேயு மரசாண்டுவருகையில், திக்குவிஜயஞ் செய்யவேண்டுமென்று கருதி, மனவலிகொண்டு, ரதகஜதுரகபதாதிகளுடனே யுத்தசந்நத்தனாய்ப் பிரயாணப்பட்டு அமராவதிப் பட்டணத்தைப்போய் வளைந்தான். அதுகண்ட தேவராஜனும் யுத்தகோலங்கொண்டு, அனேக சேனைகளுடனே வந்தெதிர்த்து, இருதிறப்படைகளுங்கலந்துயுத்தஞ்செய்கிறபோது, கபாலபரணனுடைய மந்திரியாகிய குணபலூணனென்னு மிராக்கதன், ஓர் தண்டத்தைக் கையிலேந்தி, இந்திரன்படையிற் சண்டமாருதம்போற் பாய்ந்து, கொக்கரித்துக் கதையைக் கரகரவென்று சுழற்றி இரதங்களையும் யானைகுதிரை சேனைகளையுஞ் சின்னபின்னமாய்ச் சிதைத்து மோர்கணப்போதில் முப்பத்தக்குரோணி சேனைகளையும் பெருங்காற்றிலகப்பட்ட பஞ்சுபோற் பறக்கவிடுத்துக் கியாவென்று சிங்கநாதஞ்செய்கையில், அப்படைவீரனாகிய வருணன் கண்டு மனம்வெதும்பி, ரவுத்ராகாரனாய்த் தனதுதேரைக் குணபலூணன்மீது செலுத்தி வளைத்துக்கொண்டு, தனது விலலினிடமாக அநேகமாயிர மெரிமுகக்கணைகளைச சந்தித்துப் பிரயோகஞ்செய்து, அவன்கையிலிருந்த தண்டத்தைப பொடிப் பொடியாய்ச் செய்து, ஓர் அர்த்தசந்திரபாணத்தா லவன்சிரத்தை வெட்டித்தள்ளி, அட்டகாசஞ்செய்து, குலாலனது திகிரியைப் போலக் கரகரவென்று இராக்ஷதசேனைக் கடலுட்புகுந்து திரிந்து நாசப்படுத்தும்போது, அவன்தம்பியாகிய கோரதீவத்திபென்பவன்கண்டு ஆலகாலம்போற் சீறியெழுந்து வருணனையெதிர்த்து வில்லைவளைத்து குணத்தொனிசெய்து சோனைமாரிபோல் அம்புகளைக் கணக்கில்லாமற் பிரயோகஞ்செய்து, வருணன் வகைவில்லைக்கண்டித்துக் கண்ணைவிழித்துப் பார்க்கவொட்டாமற் சங்கஞ்சங்கமா யம்புகளை வாரியிறைக்கையில், அதுகண்ட வருணன் கோபதீட்தனா யெரிந்து விழுந்து, ஓர்வனாயுதத்தைக் கையிலேந்தித் தேரைவிட்டு பூமியிற்குதித்துக் கோரதீவத்தியின்மேலிற் சிங்கம்போற்பாய்ந்து, அவன்

கரத்திலிருந்த வில்லைத்துணித்து, அவன்றலையையும் வெட்டி, அவனை யமபுரத்துக்கனுப்பி, அரக்கர்சேனையிற் கொக்குத் திரளில் இராஜாளிபுகுந்ததுபோற் பாய்ந்து நான்குதிக்கினுஞ் சுழன்று இராட்சதர்களைக் கால்வேறு தலைவேறு உடலவே றாக்கண்டித்து எங்கும் பிணக்காடாக்கிச் சிங்காநதஞ் செய் கையில், அதுகண்ட அவன்தம்பிமார்களாகிய எரியூணனும் கவுணனும் வந்தெதிர்த்து யுத்தஞ்செய்ய, அவர்க ளிருவரை யும் வருணன் வாளுக்கிரையாக்கி, ருத்திரமூர்த்தியைப்போற் கோபாவேசத்தோடு மிராக்கதர்களை நாசப்படுத்தும்போது, அதைக்கண்ட கபாலபரணன் சகிக்கமாட்டாதவனாய் வடவா முகாக்கினியைப்போலெழுந்து மேருவுக்குச் சமமாகிய தனது இரதத்தை இந்திரன் சேனைகளின்மீது செலுத்திக் கோடை காலத்திடிபோல் கர்ஜித்து, வில்லைவளைத்துக் குணத்தொனி செய்து, அவ்வில்லினிடமாகக் கணக்குமிதமில்லாமல் காள முகியென்னு மேகமானதெழுந்து வருஷிப்பதுபோல எங்கும் பாணமயமாகச்செய்து தேவசேனைகளைச் சின்னாபின்னப்படு த்திமலைமலையாய்க்குவித்து நூறு அக்குரோணிசேனைகளையும் பாழ்படஊறிப் பாற்கடலைக்கடைந்த மந்தரமலைபோற்பண்ண வர்கள் சேனையாகிய கடலைப்பங்கப்படச் சிதைத்துத் தனது வெற்றிச்சங்கத்தை வாயினிடமாகவைத்து அண்டகடாகங் களுமதிரும்படியாய்ப் பம்பம்மென்று பூரித்தான்.

அப்போது அயிராணி கேள்வனாகிய இந்திரன்கண்டு அடங்காக்கோபங்கொண்டு அரக்கன்மேல் வெகுண்டு, பளா பளாவென்றுகூறி, ஆலகாலம்போற்சீறித் தனது தேரைக் கபாலபரணன்மேற் றூண்டி வில்லைவளைத்து அவ்வில்லினிட மாக வசிராயுதத்துக்குச் சமமாகிய சிலீமுகக்கணைகளைக் கணக்குமிதமில்லாமற் றொடுத்து, கர்ணபரியந்தமிழுத்துப் பிரயோகித்துக் கபாலபரணனுடைய தேரைத் தூளாய்க் காற் றிற்பறக்கவிடுத்து, கவசத்தைக்கழித்து, கைவில்லையுமொடித் துச்சாரதித்தலையைவெட்டிச் சண்டனென்னுமியமனுக்குக் காணிக்கையாகவனுப்பி, கியாவென்று சிங்காநதஞ் செய்யுஞ்

போது, கபாலபரணன் கண்களினின்றும் நெருப்புப்பொறிகள் குபீல்குபீலென்று சிந்தும்படியா யுருட்டிவிழித்து, யுகாந்த காலப் பேரொலிபோற்கர்ஜித்து, ஓர் சூலாயுதத்தையெடுத்து தேவேந்திரன் மார்பிற்பொருந்தும்படியாய் விட்டெறிந்தான். அதுகண்ட தேவேந்திரன் தனது வில்லினிடமாகவொருபிறை முகக்கணையைச்சந்தித்து, அரக்கனெறிந்த சூலாயுதத்தை வெட்டித் தள்ளுகையில், உடனேயவன்வேறொரு தேரின் மீதேறித் தேவேந்திரனது சேனையிற்புகுந்து, வில்லினிடமாக அம்புக்கூட்டங்களைக் கும்பல் கும்பலாகச்சொரிந்து, தேர்களி பரிகாலாள்களைத் தும்புதும்பாய்ப் பறக்கச்செய்ததுமன்றி இந்திரனையுந் தேரோடுவாரிக் கீழேயடித்தான், அப்படி யடித் தளவில் அவனுடைய தேர்பரிமுதலிய யாவுமொழிந்து, சாவுக் குச்சரியான மூர்ச்சையடைந் திருக்கையில் அதைக்கண்ட தேவர்கள் உள்ளம்பதைத்து, அருகிற்சென்று, வேண்டிய சயித்யோபசாரங்களாற் றேற்றுகையி லவனு மூர்ச்சைதெளிந் தெழுந்திருந்து, அயிராவதமென்னு மியானையின்மீதேறிக், கபாலபரணனை யெதிர்த்து, வில்லைவளைத்துக் காளமுகி யென்னு மேகத்தைப்போற் பாணங்களைச் சங்கோபசங்க மாய்த் தொடுத்துக், கபாலபரணனது கரசரணாதிகளை யாட வொட்டாமற்செய்து, கிரீடத்தையுடைத்து, வில்லையுமுறித்து தேரைச் செக்கையாய்ப் பெயர்த்தெறிந்து, நூறுபாணத்தி னாலே அவனுடைய மார்பைச் சல்லடைக்கண்களாகத் துளை த்து பின்பு வச்சிராயுதத்தால் அரக்கனது சிரமற்றுவிழும்படி யாகச் செய்தமையால் தேவேந்திரனைப் பிரமஹத்திதோஷம் பற்றியதென்று சூதமாமுனிவர்சொல்ல, அதைக்கேட்ட நைமி சாரண்யவாசிகளாகிய முனிவர்கள் ஆச்சர்யமடைந்து, சூதனை நோக்கி, சுவாமி, இந்தகபாலபரணனென்கிற அரக்கனை வதஞ் செய்த இந்திரனைப் பிரமஹத்தி பற்றியதென்பது எப்படி, உலகின்கண் பிரம்மகுல சிரேஷ்டாளையெல்லாம் வதைப்பதே தொழிலாகப்பெற்ற இராக்கதனைக் கொன்றவனுக்கு பிரம்ம ஹத்தி யெப்படியுண்டாம் மேலும் பசுவைக்கொன்ற புலி

யைக் கொல்லுபவனுக்குப் பசுவைக்கொன்றதோஷஞ் சம்ப வித்ததென்பதுபோல், தேவரீர் சொல்லுவது எங்களுக்குப் புலப்படவில்லையேயென்று வினவ, அதற்குச் சூதமாமுநிவர், ஓ முநிவர்களே! இந்தரகசியம் நாம் சொல்லுகிறோம், கேளுங்கள், யாதெனில், விந்தாரண்யத்திலே திரிவக்கிரனென்னு மோரிராக்ஷதன் சுசீலையென்னும் பெயர்பெற்று அதிரூபலாவண்யத்தோடுங்கூடிய ஓர் அரக்கியைக் கூடிக்குலாவிச் சுகித்திருக்குங்காலையில், அவ்வரக்கி ஒருநாள், அவ்வரண்யத்தில் தவம்செய்துகொண்டிருந்த சுசியென்னு முனிவனது ஆசிரமத்துக்கு வந்தாள். பிரமனுக்குச் சமானமாகிய அந்தமுநிவர் அவளைக்கண்டு மோகங்கொண்டு, அடீ, பெண்ணே, இங்கு நீ தனித்துவந்தகாரண மியாதென்று கேட்க, அதற்கவள், சுவாமீ! அடியாள் திரிவக்கிரனென்னு மிராக்ஷதனுடைய மனைவி, என்பேர் சுசிலையென்று சொல்லுவார்களாதலால், அடியாளுக்கு நெடுநாளாகப் புத்ரசந்தான மில்லாதுகண்டு எனதுமணாளனைக் கேட்கையில் அதற்கு என்மணாளன், ஓ பெண்பாவாய், இவ்வனத்தில் சுசியென்னும் ஓர் முநிவரிருக்கின்றார், அவரைப்போயடுத்து அவருடைய அருள்பெறுவையாகி லுனக்குப் புத்திரபாக்ய முண்டாமென்றுசொல்ல, அப்படியே பேதையாகியநான் தேவரீரைவந்து தெரிசித்தமையால், தேவரீர் திருவுளமிரங்கி, அடியாளைக் கூடிச்சுகித்து, புத்திரபாக்ய மளிக்கவேண்டுமென்று பணிய, அவ்வுரைகேட்ட முநிவர், சந்தோஷமடைந்து, அவ்வரக்கியாகிய சுசீலைக்கு வேண்டிய வுணவுகளைக்கொடுத் தாதரித்துத் தனது பன்னசாலையில் மூன்றுநாள்வரையி லவளைக்கூடிச் சுகித்து அவள்மனம்போல வேண்டிய இன்பங்களைக்கொடுத்து நாலாநாளவ்வுனிதையைநோக்கி, ஓ பெண்பாவாய், உனது மனம்போல், இதுமுதல் உன்வயிற்றில் கருவுண்டாகி, மகாபுஜபல பராக்ரமத்தோடுங் கபாலபரணனென்றொரு புத்திரன் பிறப்பான், அவன் பிரமனால் வேண்டியவரங்களைப்பெற்று இராஜரீகஞ்செய்துகொண்டு இந்திரனையன்றி மற்ற தேவர்களியாவர்

களாலுஞ் ஜெயிக்கமுடியாதவனா யிருப்பானென்று சொல்லி, அவனை விடைதந்தனுப்பிப் பின்பு பிரமகுல சிரேஷ்டராகிய சுசியென்னு மகாமுனிவர், ஸ்ரீகயிலாசபதியாகிய உமாமகேசனைத் தரிசிக்கவேண்டி வெள்ளியங்கிரிக் கெழுந்தருளினர். பின்பு சுசிலையும் முனிவரருளியவண்ணங் கெர்ப்பமுற்று கபாலபரணனென்னும் பெயருடைய பிள்ளையைப்பெற, அவனும் யாதொரு குறைவின்றி வளர்ந்து, பிரமனைநோக்கித் தவஞ்செய்து, அப்பிரமனால் வேண்டியவரப்பிரசாதங்களைப்பெற்று இராஜரீகஞ்செய்துகொண் டிருக்கும்போது, திக்குவிஜயஞ்செய்யவேண்டிப் புறப்பட்டு தேவேந்திரனை யெதிர்த்து சமர்செய்து தேவர்களையெல்லா மதப்படுத்திப் பின்பு அவ்விந்திரனால் மரணமடைந்தான். இந்த அரக்கன் பிரமகுலோத்துங்கராகிய சுசியென்னும் மகாரிஷிக்குப் பிறந்தவனாதலால் இந்திரனைப் பிரமஹத்தி பிடித்ததென்று சூதமகாரிஷிசொல்ல, அதைக்கேட்ட நைமிசாரண்ய முனிவர்கள் சந்தேகநிவர்த்தியாய்ச் சந்தோஷமடைந்தார்கள். அப்பால் கேளுங்கள் நைமிசாரண்ய முனிவர்களே, அமராவதிக்கிறைவனாகிய தேவேந்திரன் மிகவுந் துன்பமடைந்து பிரமனிடத்தில் முறையிட, அம்முறைகேட்ட பிரமன், வாரும் தேவராஜனே, பூலோகத்திலோங்கும் பரதகண்டத்தில் ஸ்ரீராமமூர்த்தியாற் கட்டப்பட்ட சேதுவிற் கந்தமாதனகிரிச்சார்பில் பாவநாசனதீர்த்தத்திற்கு கிட்டாலாக ஸ்ரீராமசந்திரமூர்த்தியின் தேவியாகிய சீதாபிராட்டியாரால் உண்டாக்கப்பட்ட சீதைகுண்டமென்னும் பெயரையுடைய தீர்த்தத்திலே நீபோய்த் தீர்த்தமாடுவையாகில் உன்னைப்பற்றிய பிரமஹத்திநீங்குமாதலாற் போய்வாவென்று சொல்ல, அதைக்கேட்ட தேவேந்திரன் பூலோகத்திற்குவந்து சேதுவைச்சார்ந்த கந்தமாதனத்தில் விளங்குஞ் சீதைகுண்டத்திற் சங்கற்பவிதிப்படி தீர்த்தமாடி, ஸ்ரீகயிலாசபதியாகிய உமாமகேசனைத் தெரிசித்துத் தன்னைப்பற்றிய பிரம்மஹத்திதோஷத்தை நிவர்த்திசெய்துகொண்டு, தனதுலோகம்போய்ச் சேர்ந்து, சுகமாயிருந்தான். அத்தன்மைவாய்ந்த சீதைகுண்ட

மானது, உண்டாகிய காரணமியாதென்று வினவுவீராகில், முன்னர் சீதாபிராட்டியை இராவணன் கொண்டுபோய் அசோகவனத்தில் வைத்திருந்ததனாலே அத்தேவியினது கற்பை உலகத்திற் பிரசித்தப்படுத்தும்பொருட்டு இராவணனைப் புத்திரமித்ர பவுத்ராதிகளோடும் நாசப்படுத்தி தேவியை மீட்டுவருகையில் அக்கினிகுண்டமேற்படுத்தி யதிற் சீதாதேவியை முழுகச்செய்து, முழுகியபின், அதற்குச் சீதைகுண்டமென்று பெயர்கொடுத் திருப்பதால், அதில் முழுகினவர்கள் பாதகங்களெல்லாம் விமோசனமாய்ப் புண்ணியசென்மம் பெற்று அஷ்ட அயிசுவரியந்தோடும் விளங்கிக்கொண்டிருப் பார்கள். மேலுமச் சீதைகுண்டத்திற்குச் சமீபமாய் மங்கல தீர்த்தமென்றோர் தீர்த்தமிருக்கின்றது, அத் தீர்த்தத்தின் பெருமை இன்னதெனச்சொல்லி முடியாதென்று சூதமகா முனிவர்சொல்ல, அதைக்கேட்ட நைமிசாரண்யமுனிவர்களாசசரியமடைந்து, முநிவரைப்பணிந்து, சுவாமி, அடியோங்களுக்கு அத்தீர்த்தத்திற்குப் பெயர்வந்த காரணத்தை யின்னதெனத் தெரியப்படுத்தவேண்டுமென்று வினவ, சூதமுனிவர் திருவுளங்கனிந்து சொல்லத்தொடங்கினர்.

சீதைகுண்டச்சருக்கம்

முற்றுப்பெற்றது.

---

## மங்கலதீர்த்தச்சருக்கம்.

---

கேளுங்கள் நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்களே, உலகின்கண் ஓங்கும் சோமசூரியாக்கினியென்னு முக்குலத் தரசருள் சந்திரகுலசிகாமணியாகியும் சயிந்தவமென்னும் பட்டணத்துக் கிறைவனாகியும் விளங்கு மனோசவனென்னுஞ் சக்ரவர்த்தியானவன் சுமித்திரையென்னும் தேவியுடனேயும், சந்திரகாந்தனென்னுங் குமாரனுடனும், மந்திரிபிரதானிகள் முதலிய இரதகஜதுரகபதாதிகளோடும், மநுநீதி தவறாமற்

குடிகளிடத்தில் ஆறிலோர்கடமைபெற்றுத் திங்கள் மும்மாரி பெய்துவர, அளவிறந்த கீர்த்தியோடு இராச்சியபரிபாலனஞ் செய்து வருவதன்றியும், தன்னுடைய நகரமானது சதாகாலமும் வேதியர்களா லோதப்பட்ட வேதபாராயண வோசையுடன் யாகாதிகிர்த்தியங்கள்நடத்தி, தேவர்களுக் கவிர்ப்பாகங் கொடுக்கையில், அவை பெறும்படியாய்வந்து நிறைந்து வாசஞ்செய்துகொண்டு தங்களுடைய பொன்னுலகவாழ்வை விரும்பாமல் மறந்திருக்குந் தேவர்களினோசையும், ஸ்ரீகயிலாசபதியாகிய பரமசிவன், வைகுண்டவாசியாகிய மகாவிஷ்ணு, சிருட்டிகர்த்தாவாகிய பிரமன், இம்மூவரும் தந்தம் பத்தினிகளோடும், அவ்வவர்களது தொழிலையும் பதியையு மறந்து, இப்பட்டணத்தி லெந்நேரமும் வாசஞ்செய்துகொண்டிருக்கு மற்புதத்தோடுங் கூடியிருப்பதன்றியும், வேந்தன் கொடுக்கும் நித்தியசிராத்தங்களைப் பெறவேண்டிப் பிதுர்லோகத்தை மறந்துவந்து காத்துக்கொண்டிருக்கும் பிதுர்களுக்கும் முனிவரர்முதலிய தபோதனர்களுக்கு மிருப்பிடமாகிய அனந்தம் பூங்காவனங்களுஞ் சோலைகளுஞ்சூழ்ந்து, பாநுவின் கிரணத்தையுமறைத்து, இலகாநின்ற பட்டணத்தை யரசாண்டுவருஞ் சக்ரவர்த்தியினது செங்கோற் பெருமையால், சந்திரசூரியர்களை இராகுகேதுவென்பவர்களுந் தீண்டுவதற்கு அச்சப்படும்படியாய் மனோசவனென்பவன், இராஜரீகஞ் செய்துகொண்டு வருகிறகாலையில், தேவாமிர்தத்துக் கொப்பாகிய தீம்பாலில், வேம்பின்றயிலங் கலந்ததுபோற் புராதனவினையானது சக்ரவர்த்தியையணுக, அதனாற் றனதுவிவேகமழிந்தும் செங்கோன்முறைமை யாவும்பிறழ்ந்து கொடுங்கோலாகியும், அநீதியிற் பிரவேசித்தும், வேதசாஸ்திரபுராணங்களை மறந்தும், யாகாதிகிர்த்தியங்களை நீக்கியும், அறங்களை நிறுத்தியும், பிராமணருக்கு விடப்பட்டிருக்குங் காணி பூமிகளை யவர்களிடத்தில் துராக்ருதமாய்க் கவர்ந்தும், சிவாலயவிஷ்ணுவாலயமுதலிய தேவாலயங்களுக்கு நடந்துவருந் திருவிழாக்களையும் நித்யகட்டளைப் பூசைகளையும் நிறுத்தியும், அவ்வாலயங்

களிலுள்ள கடவுளர்க்குச் செய்தளித்திருக்கு மான்யாபர ணங்களைக் கவர்ந்தும், குடிகளை துராக்ருதத்தாற் றுன்பப் படுத்தியும், யாவரும் நிந்திக்கும்படி யரசாண்டுவருகையில், கோலபனென்னுமோரரசன் படையெடுத்துவந் தெதிர்த்துப் போர்செய்து, மனோசவனது ராச்சியத்தைப் பிடித்துக் கொள்ள, அதனால் மெத்தவுந் துன்பமடைந்து, தான் தன் பத்தினிகுமாரனுடன் வெளிப்பட்டுப் பட்டணத்துக் கருகே யிருக்குமோர்சோலையில் எட்டுநாள்வரையில் அன்னபானாதி களின்றி யொளித்திருந்து மொருவரும்பேர் யெட்டிப்பாரா மையால், மிகு துன்பத்தோடு மவணிருந்தும் பிரயாணப்பட்டு, தேசாந்திரிகளாய், ஓர் அந்தகாரமான காட்டிற் பிரவேசித்து, வெய்யிலின் றீட்சண்யந் தாளாதவர்களாய், விடாய்ப்பட்டு சோபத்தோடும் பிள்ளையானவன் தந்தையைநோக்கி, ஐயா, பசிநோயானது என்னை வருத்திக் கொல்லுகின்றதே, என்செய் வேன், எப்படி சகிப்பேனென்று சொல்ல, அவ்வுரைகேட்ட வேந்தன், திடுக்கிட்டு, மனதுகலங்கிப், பலவாறாகச் சிந்தித்து, இக்குறையை யாரிடத்திற்சொல்லி யாறுவோமென வேக்கங் கொண்டு, தனதுதேவியாகிய சுமித்திரையைப்பார்த்து, ஓ பெண்பாவாய், நமதுகுமாரனாகிய சந்திரகாந்தனது பசியை யெப்படித்தணிப்போம், எங்கேபோயிரப்போம், யாம்செய்த வினையாதோ, பிரமன் நமக்கு இப்படியாய் விதித்துவிட்டான். அந்தோ, ஸ்ரீகயிலாசபதியாகிய பரமசிவனைப் புணியாமலும் பக்திசெய்யாமலும் மறையவர்களுக்கீந்த மண்பொன்முதலிய நிதிகளைப் பறித்துக்கொண்டதனாலன்றோ பெருந்துன்பத்துக் காளானோம், இதல்லாமலும் பசித்தோர்முகம்பார்த்து அன் னங் கொடுக்காதிருந்தேனே, உருத்திராட்சமாலிகா பரணத் தோடுங்கூடிச் சிவசொரூபமாய் விளங்குஞ் சிவனடியார்களை சிந்தியாம லிருந்தேனே, இறைச்சோற்றை யிடவொட்டா மற் றடுத்தேனே, தேசாந்தரிகளுக் கிடங்கொடாமல் துரத்தி னேனே, சிறுபிள்ளைகளினது உண்வை யருந்தவொட்டாமற் றடுத்தேனே, கோயில், குளம், நந்தவனமுதலியவைகளைப் பாழ்

படச்செய்தேனே, யாதோ உலேகின்றேன், என்செய்வேன் தெய்வமே தெய்வமேயென்று வேந்தனானவன் மூர்ச்சித்து, பூமியிற்சாய்ந்து, பிரேதம்போலிருக்கும் மணாளனைக்கண்ட சுமித்திரையானவள், திடுக்கிட்டு, மெத்தவுங் கிலேசத்தோடும் பூமிமேற்சாய்ந்த தன்மணாளனது மேனியிற் புழுதியடைந்திருப்பதைக்கண்டு, சகிக்கப்படாத துன்பங்கொண்டு, தங்களுக்குவந்து சம்பவித்த வினைப்பகுதியைவிண்டு, என்பிராணநாயகனாகிய மகாமண்டலேசுவரா, சந்தனகளப கஸ்தூரி புழுகு ஜவ்வாதணிந்து மேருவுக்குச்சமமாய்ப் பிரகாசியாநின்றநினது தோளிலும் மார்பிலும் புழுதிபடர்ந்திருப்பதை யான்காணுங் காலம் கேரிட்டதேயென்று உள்ளம்பதைத்துப், பண்டு யான் செய்தவினையோ, மூண்டகனாகிய பிரமன் இவ்வாறு விதித்தானோ என்றேங்கிப் பரதவித்து, அரசே, தேவரீர் என்னை விட்டுப் பிரிந்துபோகவா எத்தனப்படுகிறீர், அந்தோ தாங்களடியாளை விட்டுப்பிரிந்தால் இமைப்போதேனு முயிரைவைத்திருப்பேனோ, வைத்திருக்கமாட்டேன், இதோ யானுங்கூட வருவேனென்று புலம்புவதைக்கேட்ட பிள்ளையானவன், தனது தந்தை மூர்ச்சித்திருப்பதைக்கண்டு, மிகவும் வருத்தங்கொண்டு, ஆ எனது தந்தையே, மிருபந்தமோடும் பெற்று வளர்த்துப் பாராட்டியவென்னைப் பரதவிக்கவிடுத்துப் போவதழகோ, ஐயோ, நான் பசிப்பிணியால் மெலிந்துவாடுகின்றேனென்று, உள்ளம்பதைத்துச் சோர்ந்திரே யென்செய்வேன், சிறுவனாகிய யானிப்புவியினின்று மெவ்வாறுய்வேன், தாதையே தாதையேயென்று புலம்பிக்கொண்டிருக்கிறகாலையில், அம்மார்க்கத்தில் சந்திர சடாதரமூர்த்தியாகிய சிவபெருமானைப்போன்ற பராசரமகாமுனியென்பவர் விபூதிருத்ராட்சமாலிகாபரணராய்த் தண்டகமண்டலத்துடனே யத்தடத்தில் வருபவரிவர்களைக்கண்டு, க்ருபாநோக்கத்தோடும், இவ்வனத்தில் ஆகாரமின்றிப் பரதவித்துக்கொண்டிருக்கும் நீங்களாரென்று கேட்க, அம்முனிவரது கருணையாகிய நோக்கம் பட்டமாத்திரத்தில் சுமித்திரையு மவள்சுதனாகிய சந்திரகாந்தனுஞ்

சோபந்தீர்ந்து எழுந்திருந்து, பராசரமுனிவரது பாதபத்மங் களிலேவிழுந்து நமஸ்கரித்துச் சொல்லுவார்கள், சுவாமி, நாங்களிருப்பது சயிந்தமாநகரம், அந்தநகரத்தையரசாளு மனேசவனென்னும் பெயர்வாய்ந்து இவண்மூர்ச்சித்திருப்ப வர் எனதுநாயகர், இச்சிறுவன் என்குமாரன், இவனுக்குச் சந்திரகாந்தனென்றுபெயர், எளியாளைச் சுமித்திரையென்று சொல்லுவார்க ளாதலால் நாங்கள் இராச்சிய பரிபாலனஞ் செய்துகொண் டிருக்கையில் எங்களது பிராரத்தவினையால் கோலபனென்னும் வேந்தன் படையெடுத்துவந்து அமர் விளைத்து, தோற்கச்செய்து, இராச்சியத்தைக் கைப்பற்றிக் கொண்டமையால், யாங்கள் பராரிகளைப்போல் நிர்ப்பாக்கி யத்தோடும் அன்னபானாதிகளுக்கு மேதுவில்லாமல் இவ் வனத்தில் வந்துகொண்டிருக்கும்போது, குமாரன் பசிப்பிணி யால் வருந்துவதைக்கேட்டவரசர் சகியாதவராய்த் தாமும் பசியால்மெலிந்து மூர்ச்சித்து நிலத்தின்மேற் சாய்ந்தனர். இதுபற்றி யெவ்வகையுமில்லாமற் பரதவிக்கின்றோ மென் செய்வோம், சுவாமியென்று இரக்கத்தோடுங்கூறிய சுமித்தி ரையின் மொழியைக்கேட்ட பராசரமுநிவர், வாராய் சுமித்தி ரையே, இவ்வகைத்துன்பங்களெல்லாஞ் சம்பவித்ததற்குக் காரண மியாதெனின், உனதுநாயகன் அரசுரிமையில் மநு நீதிக்கு விரோதமாய்நடந்தும் வாக்கினாலுஞ் சொல்லப்படாத கொடிய கர்மாநுபவங்களுக் குடன்பட்டமையால், அநுப விக்கவேண்டிவந்தன வாதலால், நீங்கள் வீணே துன்பப்படு வதில் என்னபிரயோசனமுண்டாம், இப்போது உனது நாயகனை யெழுப்பித்தருகிறோம், வியசனமுறாதிருவென்று கூறித், தமது கமண்டலத்திலுள்ள ஜலத்தை மனேசவன் மேரிற்றெளிக்க, உடனே மனேசவன் மூர்ச்சைதெளிந்தெழுந் திருந்து, எதிரில் சாம்பவமூர்த்தியைப்போற் சேவைதந்து நிற்கும் பராசரரை, பக்திவினயத்தோடும்பணிந்து, சுவாமீ, அடியேனது ஜென்மசாபல்ய மாச்சுதென்று பலவாறாய்த் தோத்திரஞ்செய்து, தனக்கு நடந்த காரியங்களையெல்லா

மாதியோடந்தமாய்ச்சொல்லி, இத்துன்பம் நீங்கும்படியாய் தேவரீர் கடாக்ஷித் தருளவேண்டுமென்று பணிந்துநிற்கும் வேந்தனைநோக்கிப், பராசரமுனிவர் கூறுவார்.

கேளும் மனோசவனென்னும் வேந்தனே, இனி யுனக்கு ஸ்ரீகயிலாசபதியாகிய சந்திரஜடாதரமூர்த்தியி னருளால் உனது துன்பமியாவுநீங்கி யுன்சத்ருவாகிய கோலப னென்பவனையுஞ் செயித்துப் பழயபடி இராச்சியத்தைப் பெறவேண்டுமாயின், தென்றிசையில் ஸ்ரீராமமூர்த்தியாற் கட்டப்பட்ட சேதுவில் வழங்குங் கந்தமாதன பருவதச்சார்பில் சீதாகுண்டத்துக்குச் சமீபமாய் ஒரு திவ்யதீர்த்தமிருக்கின்றது, அத்தீர்த்தத்திலே நீயு முன்னுடைய தேவியுங் குமாரனுமாய்ப் போய்த் தீர்த்தமாடிச் சங்கற்பவிதியின்படிச் சிரார்த்தமுதலிய யாவும் வழுவின்றிச்செய்து வருவாயேல் உனது துன்பங்களெல்லாம் நீங்குமாதலால் யாமும் வருகின்றோம் வாருங்களென்று சொல்ல, மனோசவன் மிகவுஞ் சந்தோஷமடைந்து, அவ்வாறே முநிவரோடும் பிரயாணப்பட்டுக், காடுமலைவனம் வனாந்திரங்களெல்லாங்கடந்து, அனேகந் திவ்யக்ஷேத்திரங்களையுந் தரிசித்து, சேதுவிலோங்குங் கந்தமாதன பருவதச் சார்பிலிருக்கு மங்கலதீர்த்தக்கரையில்வந்து சேர்ந்தவர்களாய், அத்தீர்த்தத்தில்பராசரமகாமுநியின் சொற்படி மூன்றுமாதம் வரையிற் றீர்த்தமாடி, சிரார்த்தங்கள்செய்து, ஸ்ரீராமமந்திரத்தை யிடைவிடாமற்செபித்து வாசஞ்செய்துகொண் டிருக்கும்போது, அவ்வேந்தனது கிரீடமகரகுண்டலங்களும் உடைவாளும் வில்வேல்முதலிய படைகளும் பட்டத்துக்குதிரையும் இரதகஜதுரகபதாதிகளும் மந்திரிகண் முதலியவர்களோடு சமஸ்தநிதிகளும் ஒன்றொன்றாய் மங்கலதீர்த்தத்திற் றோன்றிக் கரையேறுகையில், அதைக்கண்ட வேந்தனும் அவனது பெண்டுபிள்ளைகளுஞ் சந்தோஷங் கொண்டவர்களாய், அருகேயிருக்கும் பராசரமகாமுனிவரது பாதபத்மங்களை வணங்கி எங்களுக்கினி யென்னவுத்தரவென்றுகேட்க, அப்

போது பராசரர், ஆனந்தக்கடலுட்டோய்ந்து, அம்மங்கல தீர்த்தத்தில் வேந்தனுக் கபிஷேகஞ்செய்துவைத்து, தனது தபமகிமையால் தெய்வநாயகன்முதலிய சமஸ்ததேவர்களையும் வருவித்து, அன்னவர்க ளாசிகூறி ஜெயாவிஜயீபவவென் றோதித் துந்துபிமுழக்கி, மலர்மாரிதூவி, அக்ஷதையிறைக் கையில், அரசனுக்குமுடிசூட்டி, இந்திராதி தேவர்களிடத்தி லநேகவரங்களும் ஆயுதவகைகளும் வாங்கியளித்து, தானு மாசிர்வதித்துத் தன்னுடையநகரத்துக்குச் செல்லும்படியாய் விடைகொடுத்தனுப்ப, அதுபோலவே மனோசவன் தனது தேவியோடுங் குமாரனோடும் பராசரமுனியைப்பணிந்து, சதுரங்க தளத்துடனேபிரயாணப்பட்டுக், காடுமலைவனம் வனாந்திரங் கானாறு முதலியவைகளும் பதிகளுங்கடந்து, தமதுபட்டணம் வந்துசேர்ந்து, கோலபனென்னும் வேந்தனை ஜெயித்துப் பழயபடி இராச்சிய பரிபாலனஞ் செய்துகொண் டிருந்தார்கள். இவணிவ்வாறிருக்கையில், பராசரமகாமுனிவர், அம் மங்கலதீர்த்தக்கரையில் நெடுநாள்வரையிற் றபஞ்செய்து கொண்டிருந்து, அப்பால் தெய்வலோகத்தை நாடிச்சென்றார். பின்னர் மனோசவனென்னும் வேந்தன் தனது தேவியோடும் ஆயிரம்வருடம்வரையில் ஆளுகையிலிருந்து, அப்பால், தனது குமாரனாகிய சந்திரகாந்தனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து வைத்து, இராச்சிய பரிபாலனஞ்செய்யும்படியா யமர்த்திப், பின்னர் தானுந் தன்தேவியும் பிரயாணப்பட்டுச் சேதுவைச் சார்ந்த கந்தமாதன பருவதச்சாரலில்விளங்கும் மங்கலதீர்த் தத்தில் மூழ்கி, அத்தடாகக்கரையில் இருவருமிருந்து, ஸ்ரீகயி லாசபதியாகிய பரமசிவத்தை இதயகமலத்திலிருத்தித் தபஞ் செய்துகொண்டிருந்தார்கள். இப்படியாய்த் தபஞ்செய்து கொண் டிருக்குங்காலையில், மனோசவனென்னும் வேந்தன் சடத்தைவிடுத்துச் சாரூபத்தைப்பெற, அதுகண்ட அவன் தேவியாகிய சுமித்திரையென்பவள் காயகனைவிடுத்துத் தான் தனித்துவாழ்வதற்கு மனமில்லாதவளாய்த் தனது மணாளனது சடத்தோடு தானுஞ் சககமனஞ்செய்துகொள்ள யத்தனித்து,

அத்தீர்த்தக் கரையில் மங்கலத்துடனே அக்கினிப்பிரவேசமானபடியால் அப்புண்யதீர்த்தத்துக்கு அன்றுமுதல் மங்கலதீர்த்தமென்று பெயர்விளங்கிக்கொண்டிருக்கின்றது. அம்மங்கலதீர்த்தத்தில் மூழ்கினபேர்களுக்கு அஷ்டமங்கல யோகாதிசய விராச்சியபாரங்களும் நித்தியமங்களசுபகரமும், உண்டாயிருப்பதால் அநேகமகிமைகளோடுங் கூடியிருக்கின்றது. அத்தன்மைவாய்ந்த தீர்த்தத்துக்குச் சமீபமாய், ஏகாந்தராமமென்று ஒருதலமும், அத்தலத்தில் அமுததீர்த்தமென்று ஒரு தீர்த்தமு முண்டென்று சூதமுனிவர்சொல்ல, அதைக் கேட்ட நைமிசாரண்ய முனிவர்கள், சந்தோஷமடைந்து, சுவாமி, அத்தலத்தினது பெருமையையும், அதுவந்தகாரணத்தையும், அடியோங்களுக்குத் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று கேட்கச் சூதமகாமுனிவர் திருவுளங்கனிந்து சொல்லத்தொடங்கினர்.

மங்கலதீர்த்தச்சருக்கம்

முற்றுப்பெற்றது.

---

## அமுததீர்த்தச்சருக்கம்.

கேளுங்கள் நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்களே, நெடியகடல்சூழ்ந்த இவ்வுலகின்கண் வழங்கும் உத்தரபாகத்தில் இலகாநின்ற இமயமலைச்சாரலில் சந்திரஜடாதர மூர்த்தியினது நுதல்விழியினின்று மாறுபொறியாகவெழுந்த சிவசண்முகக்கடவுளா லுபதேசம்பெற்றுக் குறுமுனியென்றுங் குடமுனியென்றுங் கும்பமுனியென்றுங் கலசமுனியென்றும் அங்குஷ்டமுனியென்றும் அகஸ்தியமுனியென்றுங் காரணப்பெயரெய்தி தக்ஷிணபாகத்திற் பொதிகைமாமலையி லெழுந்தருளியிருக்கும் மகாமுனிவர்க்கு இளையோனாகிய நாரணமகாரிஷி யென்பவர் நாலுவேத மாறுசாஸ்திர மறுபத்துநான்கு கலைக்கியான மறுவிக்கியானமுதலிய யாவுமுணர்ந்து காமக்குரோதாதி யறுவிதப்பகையு மகற்றிச் சுத்தசத்துவத்திற்

பொருந்தி ஸ்ரீகயிலாசபதியாகிய நீலகண்டக்கடவுளைத் தனது இதயகமலத்திலிருத்தி யநேகநாள்வரையிற் பூசைபண்ணியும் வந்தித்தும் சிவனடியார்களுக் கன்னங்கொடுத்தும் வேதபாராயணஞ்செய்தும் மறைவிதியினின்றுந் தினைத்துணையேனும் பிறழாது நித்திய சிரார்த்த அக்கினிஹோத்ர வேள்வி முதலிய யாவும் நடாத்தியும் ஈசுவரகடாக்ஷமுண்டாகிப் பிரமசொரூபம்பெற்று முத்திவீட்டைப் பெறுவதற் கேதுவில்லாமையால் அன்னபானாதி முதலியவற்றையும் சருகு ஜலபட்சணங்களையும் வெறுத்து, தேகாபிமானத்தையறுத்து, மழைக்கும் வெய்யிலுக்கு மெலியாமற் பஞ்சாக்கினி இடைநின்று, ஆயிரவருடம்வரையிற் றவஞ்செய்துவருகையில், ஜகதீசனாகிய பரமசிவன் கருணைசுரந்து முநிவர்காணும்படியாய் மான்மழு சதுர்ப்புஜ காளகண்ட திரிநேத்திரங்களோடும் பார்வதிசமேதராய் வெள்விடையேறிப் பிரமன் விஷ்ணு தேவேந்திரன் முதலிய தேவர்களுஞ் சிவகணங்களும் புடைசூழத்தக்கதாய், நாரணமகாரிஷிக்குப் பிரசன்னமானார். அவ்வாறு தரிசனந் தந்ததை நாரணமுநிவர்கண்டு, திடீலென்றெழுந்து, தனதிருகரங்களையுஞ் சிரத்தின்மேற் கூப்பி, மகாதேவசம்போ, சங்கரா, காளகண்ட திரிநேத்ரா, சந்திரஜடாதரா, சயம்பூ, கங்காதரா, காமகோடிநாயகா, கௌரிமனோகரா, கருணாகடாக்ஷா, நிர்மலா, நிஷ்களானந்தா, பார்வதிசமேதா, பசுபதி, திரிபுராந்தகா, தீனதயாளா, கடையேனைக் காத்தருளவல்லநாயகா, பிரம்மாண்டநாயகா, அகிலபுவனகாரணா, ஹராஹராவெனத் தோத்திரஞ்செய்து, நிலத்தின்மேல் அஷ்டாங்கபஞ்சாங்க திரியாங்கராய்ப் பணிந்தெழுந்து, பக்திவிநயத்தோடுங் கைகட்டி, வாய்பொத்தி நிற்கு முநிவரைப்பார்த்து, வாரும் நாரணமகாரிஷியே, நீர் செய்ததபத்துக்கு நாம் சந்துஷ்டியடைந்ததாக விருந்தபோதினும் இப்போது உமக்கு முத்திவீடுறாது, ஏனெனில், நீர் தெட்சணபாகத்தி லோங்குங் கந்தமாதனச்சார்பில் மங்கல தீர்த்தத்துக்குச் சமீபமாய் ஒரு திவ்யதீர்த்தமிருக்கின்றது, அத்தீர்த்தத்தில் மூழ்கி, அதின்கரையிலே வாசம்பண்ணிக்

கொண்டிருந்தால் உமக்கும் பிரமசைதன்யமாகிய முத்திவீடு கிடைக்குமென்று திருவாய்மலர்ந்தருளி, உமாமகேசன் தேவ கணங்களோடும் ஸ்ரீகயிலாயத்துக் கெழுந்தருளினார்.

கேளும் முநிவர்களே, அப்பால் நாரணமகாரிஷியும் ஜக தீசனாகிய உமாமகேசனது கட்டளையின்படி அவணின்றும் நீங்கிக் காடு மலை வனம் வனாந்தரங் காறுமுதலிய நதிகளும் பதிகளுந் திவ்யஸ்தலங்களுங்கடந்து சேதுவைக்கண்டு தரி சித்து அவ்விடத்திலகும் கந்தமாதனபருவதச்சாரலில் வழங் கும் அமுததீர்த்தத்தில் மறைவிதிப்படி மூழ்கி அத்தீர்த்தக் கரையில் மூன்றுவருடகாலம்வரையில் நிஷ்டைசெய்துகொண் டிருக்கையில் பிரமசொரூபமாகிய ஸ்ரீஅகண்டபரிபூரண சச்சி தானந்த சின்மயசொரூப சாட்சாத்காரமாகிய பரமசிவத்திற் கலந்தமையால் அப்புண்யதீர்த்தத்திற்கு அன்றுமுதல் அமுத தீர்த்தமென்று பெயர்விளங்கிக்கொண் டிருக்கிறதென்று சூத மகாரிஷிசொல்ல, அதுகேட்ட நைமிசாரண்யர், பிரம்மானந்த பரிதராய், முநிவரைப்பணிந்து, சுவாமி, அத்தீர்த்தம் விளங்கு மிடத்திற்கு ஏகாந்தராமமென்று பெயர்வந்த காரணத்தை யும் புலப்படுத்தவேண்டுமென்று வினவ, சூதமுநிவர் கருணா கரராய், ஓ முநிவர்களே! அயோத்தியாபட்டணத்துக் கிறைவ னாகிய தசரதமகாராஜன் குமாரனாகிய இராமமூர்த்தியினிடத் தில் இலங்கையினின்றும் அடைக்கலம் புகும்பொருட்டு விபீ ஷணன்வந்துசேர்ந்து, சேதுபந்தனஞ் செய்ததின்பேரில், தானும் தன்தம்பியாகிய இலட்சுமணனுஞ் சூரியகுமாரனாகிய சுக்ரீவனும் விபீஷணனும் மகாபலம்பொருந்திய அநுமானும் வானராதிகளுமாக வொருங்குகூடிச் சீதாதேவியைக்கண்டு வர வேண்டிய காரியங்களைக்குறித்தும் இராவணனை ஜெயிக்க வேண்டிய காரியங்களைக்குறித்தும் ஏகாந்தமாயிருந்து யோச னைசெய்துகொண் டிருக்கும்போது, மகாமச்சங்கள் குதி கொண்டு விளங்காநின்ற சமுத்திரம் ஆரவாரத்தோடு மிரைச் சலிட்டிருந்தமையால், இரகசியமாகப்பேசும் வார்த்தையா

னது ஒருவர்சொல் லொருவருக்குக் கேளாதிருக்க, அப்போது ஸ்ரீராமனிடத்தில் இவ்விரைச்சலால் ஒன்றுங் கேட்கவில்லை யென்று யாவருஞ்சொல்ல, அவ்வார்த்தையை ஸ்ரீராமமூர்த்தி கேட்டுக் கோபங்கொண்டு தனது இரண்டுபுருவங்களையும் நெரித்துச் சயிக்ஞையாய் சந்தடியடக்கும்படிகாட்ட, அக் ஷணமே சமுத்திரமானது அச்சங்கொண்டு ராமமூர்த்தியினது ஆக்ஞையின்படியே கோஷமடங்கி யிருந்துவிட்டபடியால், அவ்விடத்திற்கு ஏகாந்தராமமென்று பெயர்விளங்கிக்கொண் டிருக்கின்றதோடும் அதற்கு வட்பாரிசத்தில் வில்லூன்றி யென்று மோர் திவ்யதீர்த்தமுமுண்டாதலால், இத்தன்மை யான மகிமைபொருந்திய அமுததீர்த்தத்திலே நாரணரிஷி யானவர் யோகஞ்செய்து அமிர்தங்களைப் புசித்து முத்தி யடைந்ததினலே அத்தீர்த்தத்திற்கு அமுததீர்த்தமென்றும் முத்திதீர்த்தமென்றும் பெயர்விளங்குவதோடுங்கூடி, அதிற் றீர்த்தமாடி யங்கனம் வாசஞ்செய்பவர்களுக்கு சந்தேகமில் லாமல் மோட்சங்கிடைக்குமாதலால், கந்தமாதன பருவதத் திலே யுண்டாயிருக்கிற மகிமைகளைச்சொல்லி முடியாது. மேலும், இதைப்பார்க்கிலு மகாமகிமைபொருந்திய பிரம குண்டமென்றோர் தடாகமிருக்கின்றது அத்தடாகத்தில் உண் டாயிருக்கின்ற மிர்த்திகையை யாரொருவ ரெடுத்துக்கொண் டாலும் புசித்தாலுந் தீர்த்தமாடினலும் அவர்களை மகா புண்யசாலிகளென்று சொல்லுவதல்லாமலும் சதுர்வேதங் களையு முணர்ந்தோதவல்ல கோடிதேவப்பிராமணரை வதஞ் செய்த பாபிகளாயினும் அப்பாபமனைத்தும் பெருங்காற்றிற் பஞ்சுபோற் பறந்துவிடுமென்று சுருதிவாக்கியங்களாற் சொல் லப்பட்டிருக்கின்றதென்று, சூதமுநிவர்சொல்ல, அதைக் கேட்ட நைமிசாரண்யமுநிவர்கள், ஆனந்தபரவசராய், முநிவ ரைப்பணிந்து, சுவாமி, தேவரீர் திருவாய்மலர்ந்தருளியவண் ணம், அப்பிரமகுண்டத்திலே விளங்குகின்ற மிர்த்திகையை யெடுத்து தரித்துக்கொண்டாலும், புசித்தாலும், அதிற் றீர்த்த மாடினலுங் கோடி பிரம்மஹத்தி தோஷங்களாயினும் நீங்கு

மென்றுகூறிய மகிமை அத்தடாகத்துக் கெவ்வகையாயுண்டா கியதோ அதைத் திருவுளம்பற்றவேண்டுமென்று மிகு காத லோடுங் கேட்க, அவர்கண்மீது கருணைசுரந்து சூதமகாமுனி வர் சொல்லத்தொடங்கினர்.

அமுததீர்த்தச்சருக்கம் முற்றுப்பெற்றது.

---

## பிரமகுண்டச்சருக்கம்.

கேளுங்கள் நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்களே, பண்டோர்காலத்தில் ஸ்ரீவைகுண்டவாசராகிய மகாவிஷ்ணு வும் அவரது உந்திக்கமலத்தினின்று முதித்த பிரமனும் ஒரு வருக்கொருவர் சகலாண்டங்களையும் படைத்தளிக்கவல்லராத லால், நான்பெரியவன் நான்பெரியவன் என்று இறுமாப்புக் கொண்டு வார்த்தையாடிக் கோபாவேசங் கொண்டவராய் பூலோகத்தில்வந்து இமாசலத்துக் கொப்பாகிய இரண்டுபரு வதங்களைப்போலும் இரண்டு சிங்கங்களைப்போலும் மும் மதம்பொழியு மிரண்டு யானைகளைப்போலும் உகாந்தகாலப் பேரொலியைப்போற் கர்ச்சித்துத் தோள்கொட்டி தொந்த யுத்தமுதலிய யுத்தங்கள்செய்து, ஒருவருக்கொருவர் தோல்வி யின்றி நெடுநாள்வரையில் அமர்செய்துவருகையில், சமுத்தி ரங்களும் வறண்டு, ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்களு முதிர் ந்து, சூரியசந்திரானுங் கதிமாறி, புவனத்திலுள்ள மன்னுயி ரனைத்துங் கலங்கிப் பரதவித்து, உயிர்விடுவதைக்கண்ட தே வேந்திராதிமுதலிய வும்பர்க ளனைவரும் பயந்து, ஈடுசெய்ய மாட்டாதவர்களாய், ஸ்ரீகயிலாசபதியாகிய பரமசிவத்தினிடஞ் சென்று, சரணாகதியெனப் பணிந்து, தமதுகுறையைத் தெரி விக்க, அதுகேட்ட சந்திரஜடாதரமூர்த்தியாகிய பரமசிவம் கோபங்கொண்டு, காலாந்தருத்திரனைப்போற்சீறி, இவர்களது மமதையைப் போக்கவேண்டுமென்று கருதி யெழுந்து, அக் கினிபருவதம்போல வுருவங்கொண்டு, யுத்தஞ்செய்துகொண்

டிருக்கு மிருவர்கள் மத்தியில் வந்து தோன்ற, அதுகண்ட பிரமன் விஷ்ணு இவ் விருவரும் அச்சங்கொண்டவர்களாய், இதென்ன ஆச்சர்யமென்று நிதானித்துத் தோற்றுதவர்களாய்ப், பின்னர் மகாவிஷ்ணுவானவர் பன்றியாக உருவங்கொண்டு யானிவ்வரையினது அடியைக்கண்டு வருகிறேனென்றும், பிரமன் அன்னவுருவங்கொண்டு முடியைக்கண்டு வருகிறேனென்றும் வாதஞ்செய்துகொண்டு, அவ்வாறே பன்றியாகிய மகாவிஷ்ணுவானவர் பாதாளபரியந்தந் தேடிச்சென்றும் பிரமன் தான்கொண்ட அன்னப்பட்சியுருவத்தோடும் ஆகாயத்தைநோக்கிச் சென்றுங் கற்பகோடிகாலம் வரையிற் றேடுகையில், விஷ்ணுவானவர் தனது கோரைகளால் பூமியைத் திட்டுதிட்டாகப் பெயர்த்தெறிந்து பாதாளம்வரையில் சுல்லடைக் கண்களைப்போற் றுளைத்துப் புகுந்து பார்த்தும், அவ்வரையினுடைய அடியைக் காண்பதற்கு அரிதாய் தனது கோரைகளாகிய தந்தங்களுங் காற்குளம்புகளுந் தேய்ந்து ஆற்றப்படாத துயரத்தோடும் அக்கினிவடிவமாகிய சொரூபத்தை யின்னதென்று யோசிப்பதற்கே சக்தியற்றவராய் அதிக நாணத்தோடும் இவை பரமசிவத்தின் பெருமையென் றுணர்ந்து, தான்கொண்ட மமதை யிழந்து பூலோகத்துக்குவந்து ஆகாய வீதியினிற்குந் தேவேந்திராதி முதலிய வும்பர்களைக் கண்டு கூறுவார்.

கேளுங்கள் தேவர்களே, யானும் பிரமனும் நீ என்படைப்புக் குரியவனென்றும் நீ என்படைப்புக் குரியவனென்றும் ஒருவருக்கொருவர் போர்புரிந்திருக்கையில் அகஸ்மாத்தாய் எங்கள் மத்தியி லெழுந்த இவ் வக்கினி பருவதத்தைக் கண்டு ஆச்சர்யமுற்று இதனது அடியையாகிலும் முடியையாகிலுங் கண்டெவந்தவனே பெரியவனென்றுபேசிச் சம்மதித்து அவ்வாறே யான் பன்றியாகவும் அவன் அன்னப்பட்சியாகவும் உருவங்கொண்டு பாதாளத்தையெல்லாஞ் சென்றும் அடியைக் காண்பதற்கரிதாய் இத்தன்மையாகிய துன்பத்தோடும்

பூலோகம்போய்ச் சேருமளவும் இப்பொந்தியில் உயிர்பொருந்துமோ பொருந்தாமலகலுமோவென வச்சங்கொண்டு பரமசிவத்தருளால் இவ்வணம் வந்துசேர்ந்தேன், முடியைக் கண்டு வருகிறேனென்றுசென்ற பிரமன் என்னகதியானானோ, யான் கொண்ட அகங்காரத்தால் நைந்தேன், இனி சகியேன், என் செய்வேன், தேவர்களே யென்று சொல்லிக்கொண் டிருக்கையில், அன்னரூபங்கொண்டு முடியைக் கண்டுவருகிறேனெனச் சென்ற பிரமன் மகாபராக்ரமத்தோடும் அதிவேகமாய் ஆகாயவீதியிற் கிளம்பி பூலோகமுதல் தட்டுதட்டா யுருவிப் புகுந்தும் இணுக்கிணுக்காய்ச் சோதித்தும் அகப்படாமையால் அக்கினிவடிவமா யிருக்கின்ற பருவதத்தின் பிரமாணத்தை யிவ்வளவென் றறியக்கூடாதவனாய் இறகுகளெல்லா முதிர்ந்துங் கால்களைசந்தும் சரீரம் வற்றியும் பறப்பதற்கு வலியில்லாமல் மறுபடியும் பூலோகத்தை நோக்கி மகா துன்பத்தோடும் தனது மனத்தில் அடியைக்காணச்சென்ற விஷ்ணு யான் கண்டுவந்தேனென்று சொல்ல, நான் முடியைக் காணவில்லையென்று சொல்லுவோமாகில் நம்மை தேவர்கள் முதலிய யாவர்களு மதியாமற்போவதோடும் அவனுக்குப் பின்னுங் கெர்வமுங் கீர்த்தியும் உண்டாகுமன்றோ, மேலும் நான்கண்டு வந்தேனென்று பொய்யேனுஞ்சொல்லி மேம்பாடுபெறுவோமென்றால் அதற்கோர் சாட்சிவேண்டுமாதலால் இதற்கென் செய்வோமென்று யோசனைசெய்துகொண்டு வருகிறபோது, ஆகாயத்திலிருந்து ஓர்தாழம்பூவானது வருவதுகண்டு அதனை மறித்துக்கொண்டு, வாராய் தாழம்பூவே, நீ யெங்கிருந்து வருகின்றாயென்று கேட்க, அதுகேட்ட அப்பூவானது, கேளும் பிரமனே, யான் அநேகங்கோடி கற்பகாலத்துக்குமுன் ஸ்ரீகயிலாசபதியாகிய சாம்பசிவமூர்த்தியினது சடாடவியிலிருக்கும்போது, பூலோகத்தில் நீரும் மகாவிஷ்ணுவும் ஒருவருக்கொருவர் நீபெரியவன் நான்பெரியவனென்று வாதமிட்டு யுத்தஞ்செய்ததின்பேரில் பூலோகமுதலிய யாவும் நாசமுறக்கண்டு தேவர்களச்சங்கொண்டு சாம்பசிவமூர்த்தியிடம்வந்துபணிந்து

முறையிட, அம்முறைகேட்டவுடன் உங்களது கலகத்தை நிவர்த்திசெய்யவேண்டி அக்கினிமலையாக வடிவங்கொண்டு உங்களிருவர்மத்தியில் பூமியிற் குதிக்கையில், அவருடைய திருமுடியினின்றும் நழுவிய யான் இதுவரையினும் நிலையில்லாமல் பெருந்துன்பத்தோடும் வருகின்றேன், இன்னம் பூமியைக்காண எத்தனைகாலஞ் செல்லுமோ தெரிகிலேன் யான் செய்த பாவத்தினால் பரமசிவனது முடியைவிட்டுப் பிரிந்து இப்படிபரதவிக்கின்றேனென்றுசொல்ல, அதுகேட்டபிரமன், மகாசந்தோஷங்கொண்டு, அப்புட்பத்தினிடத்தில் தங்களுக்குள் நடந்தகாரியங்களையெல்லாஞ் சொல்லி, மிகபயத்தோடும், ஓதாழம்பூவே, நீயென்மீது தயைசெய்து எனக்கோருபகாரஞ் செய்வையாகில் அதனை யெனது ஆயுளுள்ளபரியந்தம் மறவேன், உனக்கும் பெரும்புண்ணியமுண்டாம், அது யாதெனில், நான் தேவர்களிடத்தில பரமேசுவரனுடைய திருமுடியைக் கண்டுவந்ததாய்ச் சொல்லுகின்றேன் அதுபோல் நீயும் இவர்வந்துகண்டது உண்மையென்றும் யானு மங்கிருந்துதான் வருகிறேனென்றுஞ் சொல்லுவாயேல், உனக்கு மெத்தவுஞ் சுகிர்தமுண்டாமென்று மெத்தவும் உபசாரவார்த்தைகளாற்சொல்ல, அதுகேட்ட தாழம்பூவானது, ஐயா, பிரமதேவனே, நீர் அஞ்சவேண்டாம், உமது மனம்போல் யான் சொல்லுகிறேனென ஒப்புக்கொண்டு, பிரமனுடனேகூடி பூலோகத்திற்கு வருகிறபோது, ஆகாயவீதியில், இந்திராதி தேவர்களும் மகாவிஷ்ணுவு மிருப்பதுகண்டு, பிரமனானவன், சந்தோஷத்தோடும் மகாவிஷ்ணுவின் முன்னின்று ஓவிஷ்ணுவே, நீரிந்த அக்கினிமலையினுடைய அடியைக்கண்டு வந்தீரோவென்றுகேட்க, அப்போது திருமால் பிரமனைநோக்கி, ஓய் பிரமனே, நான்காணவில்லை, நீ யாவது முடியைக்கண்டு வந்ததுண்டோ சொல்லெனக்கேட்க, அதற்குப் பிரமன், ஆம் நான் முடிகண்டுவந்தேன், அதற்குச் சாட்சிவேண்டுமாயின் இத்தாழம்பூவைக்கேட் டறிந்து கொள்ளுமென்று சொல்ல, அதற்குத் தாழம்பூவும் கண்டுவந்தது உண்மைதான் யானும்

அவர்முடியினின்றுங் கூடவே வந்தேனென்று சொல்லியதைக்கேட்ட இந்திரன்முதலிய தேவர்களெல்லாம் ஆச்சரியங்கொண் டிருக்கும்போது, அக்கினிவடிவாய் நின்ற மலையினின்றுமோர் அகண்டாகார ஜோதிபோற்றோன்றி மான்மழு சதுர்ப்புஜ காளகண்ட திரிநேத்திரங்களோடும் ஸ்ரீகயிலாசபதியாகிய சாம்பமூர்த்தி எழுந்து, பிரமனைநோக்கி அடா பிரமனே, நீ என்னசொன்னாய், இன்னொருகாற் சொல்லுவாயென்று வீராவேசத்தோடுங் கேட்க, அவ்வுரைகேட்ட பிரமனும் தாழம்பூவும் உள்ளம்நடுங்கி மெய்சோர்ந்து பிரதி உத்தரஞ் சொல்லுவதற்கு நாவெழாதவர்களாய்த் தலைகுனிந்து நிற்பது கண்ட மகாவிஷ்ணுவும் இந்திராதிதேவர்களும் இதென்ன காரணமென்று பிரமித்துப் பார்த்துக்கொண்டிருக்கையில், சாம்பமூர்த்தியாகிய உமாமகேசனும் கூறுவார். ஓ பிரமனே, நீ நம்முடைய முடியைக் கண்டுவந்தோமென்று இத்தேவ சபையில் பொய்சாட்சி யேற்படுத்திக்கொண்டுவந்து கிஞ்சித்தேனும் அச்சமில்லாமற் சாதித்தபடியால் இன்றுமுதல் புவனத்தில் உனக்கு ஆலயமில்லாமலும் யாரும் வணங்காமலும் போகக்கடவதென்று சாபங்கொடுத்ததோடுந் தாழம்பூவைப் பார்த்து, ஓ புட்பமே, நீ இப் பிரமன் வார்த்தையைக்கேட்டு பொய்சாட்சியாகவந்து சாதித்தமையால் இன்றுமுதல் நமதுகண்ணிற்படாமலுந் தேவர்களுக் குபயோகமில்லாமலும் போகக்கடவையென்றுகூறி, பின் மகாவிஷ்ணுவைப்பார்த்துச் சொல்லுவார், வாரும் பரந்தாமா, நீர் இத்தேவசபையில் சத்தியமாய் உண்மையை வெளியிட்டமையால் இப்புவனத்தில் நீர் மேன்மேலாகிய புகழும் பூஜிதமும் ஜெயமும் மங்களாகரமும்பெற்று வாழக்கடவீரென்று முகமலர்ச்சியோடுங் கூறியதல்லாமலும், நாமேநீர், நீரேநாம், என்றும் விஷ்ணுவை காடாலிங்கனஞ்செய்து அநேக வுபசார வார்த்தைகள்சொல்லிக் கூட்டிக்கொண்டு தேவேந்திராதியர் புடைசூழும்படியாய்க் கயிலாயத்துக் கெழுந்தருளும்போது பிரமதேவனும் மகாதுன்பங்கொண்டு சந்திரஜடாதர மூர்த்தி

யாகிய பரமசிவத்தினது பாதபத்மங்களிற்பணிந்து இருகரங்களாலுங் கெட்டியாய்ப் பற்றிக்கொண்டு, சுவாமி, அறிவிலியாகிய சிறியேன்செய்த குற்றத்தைப்பொறுத்து சாபநிவர்த்திசெய்ய வேண்டுமென்று தோத்திரஞ்செய்ய, அப்போது பரமசிவங்கருணைகூர்ந்து, வாராய் பிரமனே, உனக்கு நம்மால் நேரிட்ட சாபநிவர்த்தியாக வேண்டுமாயின் பூலோகத்திலிலங்கும் பரதகண்டத்தில் தெட்சணபாகத்தில் சேதுவிலோங்குங் கந்தமாதன பருவதச்சார்பிலிருந்து யாகாதிகிர்த்தியங்கள் செய்து தேவர்களுக்கு பூரணகுதிசெய்து வருவையேயாகில் இச்சாபவிமோசனமாகுமென்று திருவுளம்பற்ற, அதுகேட்ட பிரமன் சந்தோஷங்கொண்டு, அவ்வாறே தேவர்கண்முதலிய மகாரிஷிகளையும் சித்தபுருஷர்களையு மழைத்துக்கொண்டு கந்தமாதனகிரிச் சார்பில்வந்துசேர்ந்து வேள்விக்குண்டமுதலியவைகளை விதிப்படியமைத்து யாகாதிகளைச்செய்து முடிக்கையில், பரமேசுவரன் விருஷபவாகனரூடரா யெழுந்தருளிப் பிரமனுக்கு தெரிசனந்தந்து, அநேகவரங்களைக் கொடுத்து இன்றுமுதல் உன்னைச் சுருதிவாக்ய ப்ரமாணங் களினாலே பூசுரர்கள் வந்தனை வழிபாடுசெய்யக் கடவதென்று திருவாய் மலர்ந்தருளிப் பின்னும் தன்னுடைய சாபவிமோசனமாகும்படி யாகஞ்செய்துகொண்டிருந்த ஓமகுண்ட சாரணைதிசெய்து, அந்த இடத்தில் நிரம்பியதீர்த்தங்களிலே யாவருமூழ்கி அவற்றிலுள்ள மிர்த்திகைமுதலான நீற்றையெல்லாமெடுத்து தரித்துக்கொள்ளக் கடவதென்றும் இவ்வோமகுண்டம் உன்னுடைய நிமித்தம் உண்டாகியபடியால் இதுமுதலிதற்கு பிரமகுண்டமென்று பெயர்விளங்கக்கடவதென்றும் இப்பிரமகுண்டத்தில் மூழ்கினவர்களுக்கு பேரின்பவீடு கிடைப்பதோடும் இதில் உண்டாயிருக்கிற தூளியை யாரொருவர் தரித்துக் கொள்ளுகின்றார்களோ அவர்கள் புண்ணியரென்றுந் தரியாதவர்கள் பாபிகளென்றுஞ் சொல்லியதோடும் சூரிய சந்திரருள்ளளவரையில் நரகவாசிகளா யிருக்கக்கடவரென்று சொல்லிச்சகலதேவர்களுடனேயும் சாபநிவர்த்தியானவர்

ஸ்ரீகயிலாசத்திற் கெழுந்தருளினர். ஆதலால் அதுமுதல் அதற்கு பிரமதீர்த்தமென்று பெயர்வழங்கி வருகின்றதென்று சூதமுனிவர்சொல்ல, நைமிசாரண்யர் சந்தோஷங் கொண்டு, சுவாமி கந்தமாதனத்தில் இத்தன்மையவாகிய மகிமைகளுண்டாயிருக்கின்றதன்றோ வென, அப்போது முனிவர், அவர்தமைநோக்கி, ஓ முனிவர்களே, இப்பிரமகுண்டத்துக்குச் சமானமாகிய அநுமகுண்டமென்று ஒரு புண்ணிய தீர்த்தமிருக்கின்றது, அதின்பெருமையைச் சொல்லுகிறேன் கேளுங்களென்று நைமிசாரண்யருக்கு சூதமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

பிரமகுண்டச்சருக்கம்
முற்றுப்பெற்றது.

---

## அநுமகுண்டச்சருக்கம்.



கேளுமகள் நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்களே, தசரதகுமாரனாகிய ஸ்ரீராமமூர்த்தியும், இலட்சுமணனும், விபீஷணனும், சுக்ரீவன் அநுமன்முதலிய வானரவீரரும், எழுபத்திரண்டு வெள்ளம் வானரசேனைகளும் ஏகாந்தராமமென்னும் ஸ்தானத்திலிருந்து ஆலோசித்துப் பின்னர் பிரயாணப்பட்டு இலங்கையிற் பவளமாமலையிற் சேனைகளையிறக்கி இராவணாதிகளை யெதிர்த்து வதஞ்செய்து விபீஷணனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்த பிரமஹத்திதோஷமானது இராமனைப்பிடித்துக்கொண்டு சகிக்கப்படாததுன்பங்கள் நேரிட்டமையால், அது நிவர்த்தியாகும்பொருட்டு மகாரிஷிகள் கூறிய வண்ணம் சேதுவின்மத்தியில் கந்தமாதனபருவதத்தில் சிவபூசைசெய்யவேண்டி யோசித்து, இலிங்கங் கொண்டுவரும்படியாய் அநுமாரை நர்மதாநதிக்கனுப்பிவைத்து, அதற்குரிய சாமக்கிரிகளெல்லாஞ் சேகரஞ்செய்து, அநுமன்வரவை யெதிர்பார்த்திருக்கையில், அப்போது இலிங்கப்பிரதிஷ்டைக்குரிய இலக்கினம் நேரிட்டுத் தப்பிப்போகுதென்று கருதினவ,

ராய்ச் சீதாபிராட்டியினது கையினாற்பிடித்து விளையாடிக்கொண்டிருந்த மிர்த்திகையினாலே பார்த்திபலிங்கமாகச்சமைத்து, அதனை ஸ்ரீராமன் பூசைசெய்ய, அப்போது ஸ்ரீகயிலாசபதியாகிய சாம்பமூர்த்தியானவர் இராமமூர்த்திக்கு தெரிசனந்தந்து வேண்டியவர்களையுங் கொடுத்து கயிலாசத்திற்கெழுந்தருளியபின்பு, இலிங்கங்கொண்டுவரச்சென்ற அநுமாரானவர் நர்மதா தீரத்திலிருந்து அதிபிரயாசையோடும் இலிங்கத்தைக் கொண்டுவந்து இராமமூர்த்தியினெதிர்நின்று வணங்கிநிற்க, அவ்வநுமானைக்கண்ட இராமன், வாராய் அநுமானே, நீ வருவதற்குள் முகூர்த்தந் தப்பிப் போகிறதாயிருந்தமையால் சீதையின் கையினாற் பிடித்திருந்த மிர்த்திகையிலே சிவபூசை செய்து முடிந்தது, இப்போது நீ கொண்டுவந்த இலிங்கத்தை நாம் பூசைசெய்திருக்குமிடத்தில் உத்தரபாரிசத்திலே பிரதிஷ்டைசெய்து உன்பெயர்விளங்கத்தக்கதாய் பூசைசெய்வாயென்றுசொல்ல, அவ்வார்த்தையைக்கேட்ட அநுமான் சகிக்கப்படாததுன்பமுங் கோபமுங்கொண்டு முகம் வேறுபட்டிருப்பதைக்கண்டராமன் அநேகவிதமாய்த் தேறுதல்சொல்லியும் கேளாததுகண்டு, பின்னும் இரக்கத்தோடும், அப்பா அநுமானே, உன்பெயராற் பிரதிஷ்டைசெய்த இலிங்கத்துக்கு முதற்பூசையும் நிவேதனமும் நடந்தபின் நம்முடைய இலிங்கத்துக்கு நடக்கும்படியாய் கட்டளையிட்டோம், அதன்றியும் இவ்விரண்டிலும் பரம்பரன் பேதமில்லாமல் விளங்கிக்கொண்டிருப்பார். அப்படியிருப்பதிலும் உன்னால் தாபிக்கப்பட்ட லிங்கத்தைச் சகலருந் தெரிசனஞ்செய்து பின்னர் யான் பூசித்தலிங்கத்தை தெரிசித்தால் அவர்களுக்கு அநேகம் பலனுண்டாம்; இதன்றியும் நீ தாபித்தலிங்கத்தை தெரிசியாமல் யான்பூசித்ததைமாத்திரம் தெரிசிப்பவர்களுக்கு யாதொரு பலனு முண்டாகமாட்டாது, ஆதலால் இதனை நீ உண்மையாகநம்பி யான்சொல்லியவண்ணம் முடிப்பாயென்று சொல்லியுங்கேளாது அநுமாரானவர் இராமமூர்த்தியைநோக்கிச்சுவாமி, தேவரீர் பூசித்த இலிங்கத்தைப் பிடுங்கியெறிந்து, அடியேன்

கொண்டுவந்த இலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்யவேண்டுமென்றுசொல்ல, அக்கணமே இராமமூர்த்தி சிவசிவாவென்று செவியைப்புதைத்துக்கொண்டு, அநுமானைப்பார்த்து, வாரும் அநுமானே, சர்வாந்தரியாமியாகவுஞ் ஜகதீசனாகவு மிலங்குஞ் சிவபெருமானைப் பிடுங்கவும வைக்கவு நம்மாற் கூடுமோ, என்னவார்த்தைசொல்லுகிறாய், சரியல்லவென்று சொல்லியுங் கேளாததுகண்டு, இராமமூர்த்திக்கு மனத்திற் கிஞ்சித்து வருத்தமுண்டாகி, அப்பா அநுமானே, யான் பூஜித்தலிங்கத்தைப் பிடுங்கிப்போடும்படியாகிய வல்லமை யுனக்குண்டாயிருந்தால் அவ்வாறே செய்யென்றுசொல்ல, அநுமான் அவ்வுரைக்குச் சம்மதங்கொண்டவனாய் விசுவரூபங்கொண்டு தனதுவாலை வளர்த்து இராமமூர்த்தி பூஜித்த இலிங்கத்துக்கு மூன்றுசுற்றாய் வளையச்சுற்றி இறுகப்பிடித்துக்கொண்டு தனது பூரண வலியோடு மசைக்க, அணுவளவேனு மசையாததுகண்டு, மகாகோபங்கொண்டு, பின்னுங் கெட்டியாய் வாலினாலிறுக்கித் தனதிரண்டுகாலையும் பூமியின்மீது வலிவாயூன்றி இருகரங்களாலும் வாலைப்பிடித்துக்கொண்டு மகாபராக்ரமத் தோடும் ஆகாயவீதியில் விசைகொண் டெழும்புகையில், அநுமான் வாலானது அறுபட்டு அவ்விலிங்கத்திற்கு வடபாலாகக் கூப்பிடு தூரத்தில் பூமியின்பேரில்வந்து விழுந்தபோது அப்பூமியானது பத்தல்பத்தலாய்ப் பிளந்து பாதலமளவும் பள்ளமுண்டாகி அவற்றில் நீரூற்றுத்தோன்றியது, அதில்வீழ்ந்த அநுமானுடைய வாயினிடமாகவுஞ் செவியினிடமாகவும் பெருகிய உதிரமும் நீரும் ஒன்றுபட்டு அப்பள்ளமானது நிறைந்து பிரவாகம்போற் பெருகிவழியும் பள்ளத்திற் சாவுக்குச் சரியாகிய மூர்ச்சைகொண்டிருப்பதை இராமமூர்த்தி முதலிய யாவருங்கண்டு வியாகுலங்கொண்டு சீதாபிராட்டியோடும் அநுமானைக்கிட்டி நெருங்கி, அந்தோ, பண்டுயான் சொல்லியதைக்கேளாது மெலிந்தாயேயென விரக்கத்தோடும் அநுமானையெடுத்து, அம்மனும் சுவாமியுமாக அநுமானது சரீரத்தைத் தடவிக்கொடுத்து, அவரது சோபத்தைமாற்றி;

அநேக வுபசார வார்த்தைகளைச்சொல்லித் தேறுதலைசெய்து, தனது புதல்வனுக்கோப்பாகிய அநுமானுக்குற்ற விபத்தை நீக்கிய அப்பள்ளத்திற்கு குழந்தைகளுக்குவந்த துன்பத்தையும் குழந்தைகளில்லாதபேர்களுக்குக் குழந்தைகளுண்டாகும்படியாகிய பெருமையையும அநேகபாபங்களும் இதில் மூழ்கியபேர்களுக்கு விலகக்கடவதென்று வாக்களித்ததோடும் அத்தடாகத்திற்கு அநுமகுண்டமென்று நாமஞ்சூட்டிப் போனமையால் அத்தன்மைவாய்ந்த அநுமகுண்டத் தீர்த்தமானது உலகத்திற் பெருமையோடு மிருக்குநாளில், கேகயதேசமாளப்பட்ட தருமசகன் என்னும் வேந்தன் நூறுபெண்களை விவாகஞ்செய்துகொண்டு இராச்சியபரிபாலனஞ்செய்து வருகையில், தனக்குப் பிள்ளையில்லாததுகண்டு அநேகவித நோன்புகளை யநுஷ்டித்தும், மறைவிதியிற் கூறியவண்ணம் முப்பத்திரண்டறங்களை வழுவின்றி நடாத்தியும் வருகையில் தனது மஹிஷியின் வயிற்றில் ஓர் பிள்ளையானது பிறக்க, வேந்தன் மிகவுஞ் சந்தோஷங்கொண்டு அப்புத்திரனை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமாய் வளர்த்துவருகையிலோர்நாள் அந்தப்புரத்தில் நவரத்ன கசிதமாகிய தொட்டிலில் நித்திரைசெய்துகொண் டிருக்குங் குழந்தையினது காலில் ஓர் தேள்கொட்ட, உடனே யக்குழந்தை வீறிட்டழுதவோசையைகேட்ட குழவியின் தாயாகிய பட்டமஹிஷியும் பாங்கியர்களுமா யோடிவந்து தொட்டிலைச்சூழ்ந்துகொண்டு, யாது காரணத்தால் அழுகிறதென்று பார்க்கையில், அத்தொட்டியின் ஓர்புறத்தில், தேளிருக்கக்கண்டு, இத்தேளின் கொடுமையால் பிள்ளைக்கு உபத்திரவம்நேரிட்டதென் றறிந்தவர்களாய், சகிக்கமாட்டாமற் கதறுகின்ற அரும்புதல்வனது கோரத்தைக் கண்டயாவருங் கோவென்று வாய்விட்டலறுகையில், அவ்வோசையானது கொலுமண்டபத்தி லநேக ராஜாக்களொருங்கியணிந்து நிற்கவும், நவமணிவெயி லெறிக்குஞ் சிங்காசனத்தி லினிது வீற்றிருக்கும் அரசனதுசெவியிற் கேட்டளவில், இடுக்கிட்டு, அருகேயிருக்கு மந்திரி முதலிய காரியர்களை

நோக்கி, அந்தப்புரத்திலெழுந்த கூக்குரலினது காரணத்தை யின்னதென் றறிந்துவரும்படியாய் ஆஞ்ஞைசெய்ய, அவ் வாறேயவர்க ளந்தப்புரத்திற் கதிவேகமாய்ச்சென்று, விசா ரணைசெய்கையில், சந்திரனென்னுங் குழந்தையைத் தேள் கொட்டியதாகச்சொல்ல, அதுகேட்ட மந்திரிமுதலானோர் துன்பமடைந்து ஓடோடியும்வந்து, அரசனுக்குரைக்க, அர சன் கலங்கி, அங்குள்ள மணிமந்திரசித்திபெற்ற வல்லவர் களையும் பூசுரர்முதலிய பெரியோர்களையு மழைத்துக் கொண்டு, அந்தப்புரஞ்சேர்ந்து, தொட்டிலிற்கதறுங் குழந் தையையுந் தன்மனைவியரும் தோழிப்பெண்களும் படுந்துய ரத்தையுங்கண்டு சகிக்கலாற்றாதவனாய்த் தானுஞ் சலனமுற் றிருக்க, அதுகண்ட மணிமந்திரவல்லவர்கள் ஒவ்வொருவரும்; தங்களுக்குத்தெரிந்த மூலிகைகளினாலும் மந்திர உச்சாடனங் களாலும் குழந்தையின் துன்பத்தைத் தணித்துவருகையில், வேந்தன் தன்னிடமிருக்கும் மறையவர் முதலான பெரியோர் களைப்பார்த்து, ஐயா நான் நூறுபெண்களைமணந்தும் நெடு நாட் பிள்ளையில்லாததைக்கண்டு பற்பல விரதங்களை யனுட் டித்து ஸ்ரீகயிலாசபதியினருளால் உண்டாகிய எனது அரும் புதல்வனுக்கு இப்படிப்பட்ட இடுக்கண் சம்பவித்தால், எவ்வா றுய்வேன், மேலும் எனக்கு விருத்தாப்யதிசையாதலாலும், வேறு பிள்ளையில்லாமையாலும், இவ்வொருகுழந்தைக்கு யா தொரு தீங்குநேரிடாமற் கடவுள் அநுக்ரகிக்கப்படாதோ, பாதகனாகிய வென்மீது பரமசிவத்துக்குக் கருணையுண்டாக வில்லையே, அந்தோவென்று கவலையுற்றிருக்குங் காவலனைக் கண்ட பூவலராகிய பெரியோர்களும் பூசுரர்முதலிய பாவலர் களும், வாரும்வேந்தே, உமது இச்சையின்படி மணஞ்செய்த நூறுதேவிகளுக்குங் குழந்தைக ளுண்டாகும்படியாயும் அவர்களுககு யாதொருதீங்குக ளணுகாதிருக்கும் படியாயும் எண்ணமிருந்தால், இவ்வுலகின்கண் தெட்சணபாகத்தில் ஸ்ரீராமமூர்த்தியால் கட்டப்பட்ட சேதுவிலோங்குங் கந்த மாதனபர்வதச்சார்பில் வழங்கும் அநுமகுண்டத்தைக்கண்டு

தெரிசித்து அத்தீர்த்தத்தில் நீரும் உமது தேவிமார்களும் நீராடி அதன்கரையில் புத்ரகாமேஷ்டியாகஞ்செய்து முடித்தால், யாதுங்குறைவின்றி புத்ரபாக்யமும் வேண்டிய சம்பத்துகளு முண்டாமென்றுகூற, அதுகேட்ட தருமசகன் பிரம்மானந்தபரிதனாய், மிருகாதலோடும் பெரியோர்கூறிய வண்ணம் தனது குழந்தைமுதலிய பேர்களையும், மந்திரிமுதலியபேர்களையும், மறையோரும் வேதவாயினர்களையும், சேனுசயின்யங்களையுங்கூட்டித் தானும் ரதாரூடனாய்ப் பிரயாணப்பட்டு, தனதுபட்டணத்தைவிடுத்துக், காடுமலைவனம் வனாந்தரங் காறுநதிகண்முதலியவைகளையுந் தலங்களையுங் கடந்து, சேதுவைச்சேர்ந்து, அவ்வேணுங்குன் கந்தமாதனபருவதச் சார்பில் அதுமகுண்டத்தைக்கண்டு தரிசித்து, அக்குண்டக் கரையில் தனது தேவிமார்களோடும் புத்திரன்முதலிய பேர்களோடுமிறங்கி வேதவிதிப்படி யதிற்றீர்த்தமாடி, பின்பக் கரையில் புத்ராகாமேஷ்டியாகஞ் செய்யவிரும்பிச், சித்திரை மாதத்தில் அநேகந்தேவப்பிராமணாள்முன்னிலையில்யாகத்தை நியமப்படி நிறைவேற்றிப் பூராணாகுதிசெய்து, பிண்டசேடத்தைத் தனது நூறுதேவிமார்களுக்குங் கொடுத்து, அதுமகுண்டத்தை வலஞ்செய்து, பின்பு சாம்பசிவமூர்த்தியையுந் தரிசனஞ்செய்து, அவணின்றும் பிரயாணப்பட்டுத் தனது பட்டணம்வந்து சேர்ந்து, இராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டிருக்கும் நாளையில், யாகத்திற் பெரியோர்களாற் கொடுக்கப்பட்ட பிண்டத்தின் பெருமையால் அதே கர்ப்பமாகவிருந்து, பத்துத்திங்களும் பூரணமாய் முடிந்தபின், தருமசகன் தேவிமார்களாகிய நூறுஸ்த்ரீகளும் நூறுபிள்ளைகளைப்பெற்றார்கள். அதுகண்டவேந்தன் மெத்தவுஞ் சந்தோஷமடைந்து அநேகம் பிராமணர்களுக்கும் பெரியோர்களுக்குங் கோதானபூதான கன்னிகாதானமுதலிய முப்பத்திரண்டு தருமங்களையுங் குறைவின்றிச்செய்து, [illegible]

புத்திரரும் மற்றவர்க் கொவ்வொருபுத்திரருமாக நூற்றொருகுழந்தைகளையும் நாளொருமேனியாய் வளர்த்து இராச்சிய பரிபாலனஞ் செய்துகொண்டு வருகிறபோது, பிள்ளைகள் மூன்றாம்பிறைபோல் வளர்ந்து இராஜவர்க்கத்துக்குரிய சகல வித்தைகளினும் வல்லவராய் உலாவிவருகையில், தருமசகன் கண்டு, பேரானந்தங்கொண்டு, அண்டையிலிருக்கும நூற்றொருபிள்ளைகளுக்குந் தனது பண்டாரங்களையுந் தேசத்தையும் நூற்றொருபாகமாக்கிக் கொடுத்து, முதல்மனைவியின் முதற்பிள்ளையாகிய சந்திரனென்பவனுக்கு திவ்யமுகூர்த்தத்தில முடிசூட்டிப் பட்டாபிஷேகஞ்செய்து, அவன்கையினா லனேகதானதருமங்கள்செய்வித்துப், பிள்ளைகளுக்குவேண்டிய நீதிவாக்கியங்களை யுரைத்து, அவனவரிடஞ் செலவுபெற்றுத் தானுந் தன்னுடைய தேவிமார்கள் நூறுபேருமாய்ப் பிரயாணப்பட்டு, தெட்சணபாகத்தோங்கும் கந்தமாதனபருவதச் சார்பில், அநுமகுண்டத்தைச்சேர்ந்து தரிசித்து, தீர்த்தமாடி, அத்தீர்த்தக்கரையில், ஸ்ரீகயிலாசபதியாகிய பரமசிவத்தை யிதயகமலத்திலிருத்தி, தர்ப்பாசனத்திலிருந்து, சிலகாலந் தபஞ்செய்து, பின்னர் வேந்தன, சேகவியோகமாக, அநுமகுண்ட அவனுடைய தேவிமார்கள் நூறுபேரும் அரசனோடும் அக்கினிப்பிரவேசமாகியதைக்கேள்விபுற்ற சந்திரனென்பவன் தனது தம்பிமார்களாகிய நூறுபேரோடும் மாதாபிதாக்களுக்குச் செய்யவேண்டிய கிரியைகளைச் செய்துமுடித்து, அவர்களை வைகுண்டபதவிசேர்த்து, தனது மந்திரிமுதலியபேர்களோடுங் காரியர்களோடுங்கூடி மநுநீதிகுறைவின்றி இராச்சிய பரிபாலனஞ் செய்துகொண்டிருந்தானாதலால், அத்தன்மையாகிய மகிமைவாய்ந்த அநுமகுண்டத்தின் பெருமையைச் சிர்தாங்கி யாவராற் சொல்லிமுடியுமென்று சொல்லியதைக் கேட்ட நைமிசாரணிய முனிவர்கள், மெத்தவுஞ் சந்தோஷமடைந்து; சூதமுனிவரைப் பணிந்து, சுவாமி! தேவரீர் புராணங்களையெல்லா மெங்களுக்கு இன்னும் மச்சேதுவி னுடைய மகிமையைச் சொல்லவேண்டுமென்று, பக்தியோடும்

வினவியதைச் சூதமுனிவர் கேட்டுக், கருணைகூர்ந்து, ஓ முனி வர்களே! அகஸ்தியதீர்த்தமென்றோர் தீர்த்தமுண்டு, அதன் பெருமையைச் சொல்லுகிறோம், கேளுங்களென்று திருவாய் மலர்ந்தருளினார்.

அநுமகுண்டச்சருக்கம்
முற்றுப்பெற்றது.

## அகத்தியதீர்த்தச்சருக்கம்.

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்களே, பண்டோர்காலத்தில், ஜகதீசனது க்ருபாலோகத்தினா லுண் டாகிய இலவணம், இட்சு, சுரா, சற்பி, ததி, க்ஷீரம, சுத் தோதகமென்று சொல்லப்பட்ட எழுகடல்சூழ்ந்த இவ்வுல கின்கண் வழங்கும் பருவதங்களில் விந்தியகிரியென்னும் மலை யானது ஸ்ரீசந்திரஜடாதரமூர்த்தியினது வாமபாகத்திலொளி ரும் உமாமகேஸ்வரிக்குத் தாயகமாகிய இமாசலத்துக்கொப் பாக வேண்டுமெனக் கருதி, ஆகாயமளாவியுயர்ந்து வட்ட மிட்டுப் பரவிப் பூரித்து, தாபராதி முதலியவைகளுக்கும் விலங்கினங்களுக்குஞ் ஜீவர்களுக்கு மிடுக்கணைக்காட்டி, இறு மாப்புக்கொண்டிருக்குந் தன்மையை நீலகண்டமூர்த்தியாகிய பரம்பரனறிந்திருந்தும் பருவதராஜகுமாரியை மணஞ்செய்ய வேண்டித் தம்முடன் ஸ்ரீகயிலாசகிரியிலெழுந்தருளியிருக்கும் இரண்டாஞ் சங்கரனாகிய நந்திதேவர் பிருங்கி நாரதர் சப்த ரிஷிகளாதி சிவகணங்களோடும் தேவேந்திராதி முப்பத்து முக்கோடி தேவர்களுறற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள் கருட காந்தர்வ சித்தவித்யாதர ருரகாஷ்டவசுக்களோடும் விருஷப வாகனரூடராய் பிரயாணப்பட்டுக் கயிலையினின்றும் வருகிற போது, பரமேசுவரன் அகஸ்தியனை நினைந்து வருவித்து, அன்னவரைநோக்கி, வாருமகஸ்தியரே, இப்புவின்கண் விந் தியகிரியானது மேருவுக்கு நிகராகவேண்டுமெனக் கருதிவளர் ந்து ஜீவர்கள்முதலிய யாவர்க்கும் இடுக்கணைக் கொடுத்து வெ

வித்திருக்கின்றமையால் நீர்போய் அதனை கெர்வபங்கப்படுத்தி வரக்கடவீரென்று திருவாய்மலர்ந்தருள, அதுகேட்ட அகஸ்தியமுனிவர் கங்காதரனைப்பணிந்து, சுவாமி, கடையேன் தேவரீருடைய திருமணக்கோலத்தைக்கண்டு தரிசிக்க அதியாவலோடுங்கூடிவந்த வெனக்கு இவ்வாறு ஆஞ்ஞைதந்தது எளியேன் வினைப்பகுதியென்று துன்புறுகின்றேன், என் செய்வேனென்று வியாகுலத்தோடுஞ்சொல்ல, அதுகேட்ட சோமசுந்தரக்கடவுள் இரக்கமுற்று, ஓய் அகஸ்தியமுனிவரே, நீர் நம்முடைய மணக்கோலத்தைப் பார்வதியுடனே வேதாரண்ய மென்னுந் தலத்தில் தரிசிக்கலாமாதலால் நீர் போமென்றுகூற, அவ்வுரையைச் சிரமேற்கொண்ட அகஸ்தியர் பிரயாணப்பட்டு, ஆகாயத்திற்கும் பூமிக்குமொன்றாய் வளர்ந்து இறுமாப்புக் கொண்டிருக்கும் விந்தியகிரியின் சிகரத்தில் தனதுகரத்தை வைத்தமாத்திரத்தில், அப்பருவதமானது நெறநெறவென்று நெறிந்து பூமியிற்றாழ்ந்து பூமியோடு பூமியாய்ப் போய்விட்டமையா லதுகண்ட வகஸ்தியர் சந்தோஷத்தையடைந்து, அவணின்றும் நீங்கித் தென்றிசையை நோக்கிப் பிரயாணப்பட்டு சேதுவைச்சார்ந்த கந்தமாதன பருவதத்தைச்சேர்ந்து, அதன் மகிமையையுஞ் சேதுவினதுமகிமையையுங்கண்டு, ஆனந்தங்கொண்டு, இங்ஙனம் நம்முடைய பெயரால் ஓர் தடாகமுண்டுபண்ண வேண்டுமெனக் கருதி, அதுபோலோர்தடாகமுமுண்டுசெய்து, அத்தடாகக்கரையிற் றன்சிறிதுகாலந் தபஞ்செய்துகொண்டிருந்து அதிற் றீர்த்தமாடி, அதற்கநேக வரங்களைக் கொடுத்து, பின்பு பொதிகைமாமலையை நோக்கிச்சென்றார்.

கேளுங்கள் நைமிசாரண்ய முனிவர்களே, மகாதபோதனராகிய அகஸ்தியமுனிவரால் நியமிக்கப்பட்ட அத்தடாகத்திற்கு அன்றுமுதல் அகஸ்தியதீர்த்தமென்று பெயர்விளங்கிக்கொண்டிருக்கும். அத்தீர்த்தமானது அநேககோடிபாதகங்களைப் போக்குவதோடும், செல்வம், கல்வி, அழகு, ஆண்

மை, பின்னைப்பேறு முதலிய இஷ்டகாமியங்களையும் மோக்ஷ காமியங்களையும் நினைத்து அதில் தீர்த்தமாடுபவர்களுக்கு அவரவர்க ளெண்ணப்படி யளித்துவரும், அது எப்படியென் றால், வேதாரண்யமென்னுந் தலத்தில் வசிக்கும் வேதவாயின ராகிய மறையவருள், தீர்க்கதருமனென்றொரு பிராமண னுண்டு, அப்பிராமணனுக்கு சேபரனென்னு மோர் புத்திரன் பிறந்து வளர்ந்துவருகையில், அப்புத்திரனுக்கு சவுளஉபநயன முதலிய கருமங்களை விதிப்படி முடித்துப் பிரமசரியத்திலே நின்றும் வழுவின்றி வேதபாராயணஞ்செய்து வருகையில் இன்னுஞ் சாத்திரங்களை யறியவேண்டுமென்னும் விருப்பங் கொண்டு, உதங்கமாரிஷியிடஞ்சென்று அவரது பாதபத்மங்க ளிற் பணிந்து, தனதுகருத்தைப் புலப்படுத்தி, அம்முனிவ ரது கருணையைப்பெற்று நான்குவேத மாறுசாஸ்திரம் பதி னெண்புராணமுதலிய சாஸ்திரங்களனைத்தும் அறுபதுவரு டம் வரையிலிருந்து அன்னவரிடமோதியுணர்ந்து தெளிந் தவராய், பின்பு தன்னாற்கூடிய பதார்த்தங்களைக் காணிக்கை யாகவைத்துப் பணிந்து, சுவாமி, அடியேன் இதுவரையிலுந் தேவரீரது பாதபத்மங்களுக் கற்பிதமாகும் பணிசெய்து செப் பற்கரிய வாகமவேதபுராணங்களை யுணர்ந்தேன், இனி, தங்க ளுடைய அநுக்ரகத்தினால் பாணிக்கிரகணஞ் செய்துகொண் டில்லறதர்மத்தி லிருக்கவேண்டுமென்று அபேட்சையிருக் கின்றபடியால் அருள்செய்யவேண்டுமென்று பணிந்துநின்ற பிராமணனை உதங்கமாமுனிவர்கண்டு, சந்தோஷங்கொண்டு கூறுவார், வாராய் சேபரனென்னு மன்பனே, உன்னுடைய மனதின்படியே இல்லறத்தி லிருக்கவேண்டுமாயின் உனக்குக் கலியாணஞ்செய்து கொள்ளுவதற்கு ஓர் வகைசொல்லுகின் றோம், அதுயாதெனில், ஸ்ரீராமமூர்த்தியாற் கட்டப்பட்ட சேதுவிற் கந்தமாதனகிரிச்சாரலில் உமாமகேசனென்று நாதல் [illegible] [illegible] [illegible]

தீர்த்தமிருக்கின்றது, அத்தீர்த்தம் இஷ்டகாமியங்களையும் மோக்ஷகாமியங்களையுங் கைகூட்டிவைக்குமாதலால் நீ அத்தீர்த்தத்துக்குப்போய் சங்கற்பவிதியின்படி திரிகாலமும் ஸ்நானஞ்செய்து வணங்கி, மூன்றுவருடம்வரையில் வருவாயாகில் முடிவிலத்தடாகத்தினின்றும் தேவராஜனுடைய ஐராவதமென்னும் வெள்ளையானையானது எழுந்து மகாபராக்கிரமத்தோடும் உன்னெதிரிற் பாய்வதுபோல் வருவதைக்கண்டும் நீ பயப்படாமல் நிற்பாயேல் பின்னர் அந்தயானையானது உன்னைப்பணிந்து தலைகுனியும், அக்காலையிலதன் துதிக்கையைப் பற்றிக் கால்வழியாயேறி மத்தகத்தின்மீது தேவேந்திரனைப் போல் உட்கார்ந்து ஆனையை நடத்தினால் அப்போது மதுராபுரிக்கிறைவனான சுபகுணனென்னும் வேந்தன் வேட்டமாடும் பொருட்டுக் கந்தமாதனகிரிச்சாரலில் வருபவன் உன்னைக் கண்டு வந்தனைவழிபாடுடனழைத்துக்கொண்டுபோய் தனது குமாரத்தியை உனக்கு மணஞ்செய்துவைப்பானாதலாற் சுகஜீவியாய்ப்போய் வரக்கடவையென்று விடைகொடுத்ததைக் கேட்ட கீரன், முனிவரைப்பணிந்து, சுவாமி, தேவரீர் திருவாய்மலர்ந்தருளியவண்ணம் அடியேன் அகஸ்தியதீர்த்தத்தினின்று வெளிப்படும் வெள்ளையானையின்மீதேறிச் செல்லுகையில் கந்தமாதனகிரிச்சாரலில் வேட்டமாடவரும் வேந்தன் தனது குமாரத்தியை எனக்கு விவாகம்பண்ணிக்கொடுக்குங் காரணத்தை இன்னதெனத் தமியேனுக் கருள்செய்யவேண்டுமென்று கேட்க, அதற்கு உதங்கமாமுனிவர் சீடனைப்பார்த்து, வாராய் கீரனே, அவ்வேந்தன் புதல்வியாகிய புண்யநிதியென்பவள் தான் பிரவிடையாவதற்கு முன்னமே இவ்வுலகின்கண் ஆடகலோகத்துக் கிறைவனாகிய தேவராஜனைப்போல் யுத்தரோசனுவர் வெள்ளையானையின்மீது ஏறிவருகின்றார்களோ அன்னவர்களை நான் மணம்புரிவேனேயன்றி மற்றோரைக் கனவிலும் நினையேனென்று பிரதிக்ஞை செய்திருக்கின்றாளென்னும் [illegible] முடிவுமென்று அவள் தந்தை பெருந்துன்பத்தோடும் புலம்பிக்கொண்டும் [illegible] கலியாணமுஞ் செய்யா

மலும் இத்தொல்லை யெப்போது நிவர்த்தியாகுமோவென்று எதிர்பார்த்திருக்கையில், நாரதமகாமுநிவர் ஓர்நாள் அவ்வேந்தனிடஞ்செல்ல, அன்னவர் வரவுகண்ட வேந்தன் சிங்காசனத்தைவிட் டெழுந்து எதிர்சென்று முநிவரைப்பணிந்து, சோடசோபசாரத்தோடு மழைத்துக்கொண்டுபோய், நவரத்தினகசிதமாகிய சிங்காசனத்தி லெழுந்தருளச்செய்து, க்ஷேமலாபங்களைப் பேசிக்கொண்டிருக்கையில், அரசன் தனது குமாரத்திசெய்திருக்கும் பிரதிக்ஞையை நாரதருக்குரைக்க, அதுகேட்ட நாரதமகாமுநிவர், ஞானதிருஷ்டியினாற்பார்த்து, வாராய் வேந்தே, உனது புதல்வியாகிய புண்யவதியென்பவள் கருத்தின்படி கலியாணம் நடக்கவேண்டியதாய் பிரமகற்பனை யிருப்பதால் அப்பெண்ணின்வாக்கி லவ்வாறுதித்தது, அதுபோலவே வெள்ளையானையின்மீ தேறிக்கொண்டு கிபரனென்றொரு புருடன்வருவான், அவனை நீகண்டு அழைத்து வந்து பாணிக்கிரகணஞ்செய்து கொடுக்கக்கடவாயென்று கூறி, நாரதமகாமுநிவர் தெய்வலோகஞ்சென்றபின், வேந்தனும் தனது கவலையொழிந்து எதிர்பார்த்திருப்பதால் நான் சொல்லியபடி நீ கந்தமாதனகிரிச்சாரிலிருக்கு மகஸ்தியதீர்த்தக்கரையில் மூன்றுவருடம்வரையிற் காத்திருந்தால் கைவல்யமாகும் போய்வாவென்று உத்தரந்தந்த உதங்கமகாரிஷியைப் பணிந்து, விடைபெற்றுக்கொண்டு, மகாசந்தோஷத்தோடும் கிபரனென்பவன் அவணின்றும் பிரயாணப்பட்டு, கந்தமாதனபருவதச்சாரலி லோங்கும் அகஸ்தியதீர்த்தத்தைக்கண்டு தரிசித்து, அத்தீர்த்தத்தில் திரிகாலங்களிலும் ஸ்நானஞ்செய்தும் ஜபதபங்களை யநுஷ்டித்தும் மூன்றுவருடகாலம் வரையிற் காத்திருந்து அத்தீர்த்தத்தினின்றெழுந்த வெள்ளையானையின்மீது ஏறிநடத்துகையில், மதுராபுரிக் கிறைவனாகிய சுவனயனென்னும் வேந்தன்கண்டு திடுக்கிட்டு, அப்பால் தெளிந்து, நமக்கு நாரதமகாமுநிவர்சொன்ன வாக்கியப்படி அனைந்தவையான் நமதுபுதல்வியினது சபதமும் இன்று நிறைவேறியிட்டதெனக் கருதிச் சந்தோஷங்கொண்டு, அயிரா

வதத்தின் முன்பாகவந்து அதின்மீ தாரோகணித்துக்கொண் டிருக்கும் புண்ணியவடிவமாகிய வேதியனைக்கண்டு, வாரும் பிராமணா, நீரெங்கேபோகின்றீர், உமக்கு இந்தவெள்ளையானை யேது, சொல்லுமென்றுகேட்க, அப்போது கீபரன்சொல்லு வான், ஓ வேந்தே, யான் உதங்கமாமுனியினுடைய சீடன், என்பெயர் கீபரனென்று சொல்லுவார்களாதலால் என்னைப் பயந்த தாதையாகிய தீர்க்கதருமனென்பவரிடத் திருந்தும் விடைபெற்று முநிவரையடுத்திருந்த செய்திகளையெல்லாம் ஆதியோடந்தமாய வேந்தனுக்குரைக்க, அதுகேட்ட வேந் தன், புளகமுற்று, வாரும் பிரமகுலோத்துமகரே, இதுமுதல் நாமுமக்கு மாமனாகவும் நீர்நமக்கு மருகராகவு மிருக்கவேண்டி என்னுடைய குமாரத்தியை உமக்குப் பாணிக்கிரகணஞ் செய்துகொடுக்கிறேனாதலால் இதுவரையினும் பிரமசாரியா யிருந்தீர், இனிமேலெனது கருத்தின்படி மணஞ்செய்து கொண்டு இல்லறதர்மத்தில் வழுவின்றி சுகசந்தோஷத்தை யநுபவித்துக்கொண் டிருமென்று அநேக வுபசாரவார்த்தை களைசசொல்ல, அதுகேட்ட கீபரனுஞ் சந்தோஷமடைந்து, அயிராவதத்தை விட்டுக் கீழேயிறங்கி, அதற்கு மகாபக்தி விநயத்தோடு மனேக வுபசாரங்கள்செய்து, ஓ அயிராவதமே, எனக்கு கலியாணமாகுமளவும் நீயுஞ் சந்துஷ்டியாகவிருந்து போகவேண்டுமென்று சொல்ல, அதுபோலவே யானையும் சம்மதித்து நின்றுவிட்டது. அதின்பேரில் சுவநயனென்னும் வேந்தனும் கீபரனும் மற்ற மந்திரிபிரதானிகளு மொருங்கு சேர்ந்து ஆலோசனைசெய்து, இந்த கந்தமாதனபருவதத்திற் றானே கலியாணஞ்செய்யவேண்டுமென்று தீர்மானித்து, கீபர னுடைய தாய்தந்தைமுதலியவர்களை வேதாரண்யத்தினின் றும் வருவிக்கும்பொருட்டுத் திருமுகமெழுதி, சுதரிசனனென் கிற ஓர்பிராமணனிடத்திற் கொடுத்தனுப்ப, அவனும் வேந்த னிடத்தில் விடைபெற்றுக் காடுமலைவனம் வனாந்தரமியாவுங் கடந்து வேதாரண்யத்தைச்சேர்ந்து, தீர்க்கதருமனைக்கண்டு, திருமுகத்தைக்கொடுத்து நடந்தசவிஸ்தாரங்களையெல்லா மறி

விக்க, அதுகேட்ட தீர்க்கதருமனுஞ் சந்தோஷத்தையடை
ந்து, பிராமணனைப்பார்த்து, சுவாமி, உம்மைக்கண்டு வெகுநா
ளாகின்றமையாற் பார்க்கும்படி மிகவபேட்சைகொண்டிருந்த
வெனக்கு உமது தரிசனங்கிடைத்தது யான்செய்த பூஜாபல
மெனக் கருதுகின்றேனாதலால், உமதுக்ஷேமலாபங்களென்ன
வென்றுவினவ, அதற்கு சுதரிசனன், தேவரீருடைய ஆசீர்
வாதத்தினால் யாதுங் குறையின்றி உமது சம்பந்தியாகிய சுவ
யவேந்த னரண்மனைப் புரோகிதனாக விருக்கிறேனென்ன,
தீர்க்கதருமன்கேட்டுச் சந்தோஷமடைந்து, தனதுகுமாரன்
கலியாணத்துக்காகவேண்டிய சாமக்கிரியைகளைச் சேகரஞ்
செய்துகொண்டு வேதாரண்யத்தைவிட்டுப் பிரயாணப்பட்டு,
அதிதீவிரமாய்க் கந்தமாதனபருவதச்சாரலில் சுவயவேந்
தனுலமைத்திருக்கும் விடுதியில்வந்துசேர்ந்தார்கள். இவ்வித
மாய்வந்த தந்தையைக்கண்ட கீரன் நனிகாதலோடும் பிதா
வின் பாதகமலங்களிலும் அன்னையினது பாதகமலங்களினும்
பணிந்து, பக்திவிநயத்தோடும் நிற்கையில், தீர்க்கதருமன்
புதல்வனது முகாரவிந்தத்தைக் கண்குளிரக்கண்டு, ஆனந்தங்
கொண்டு, அடாசுதனே, பண்டு நீ எங்களைவிடுத்துவந்த பின்
னர் நடந்தசங்கதி யாதென்றுகேட்க, கீரன் தான் ஊரை
விட்டு நீங்கியபின் நடந்தவையாவு மாதியோ டந்தமாய்ச்
சொல்லிநிற்கத், தாதையானவன், தனதுகுமாரன் கற்றுணர்ந்த
வேதாகமங்களுக்குப் பேரானந்தங்கொண்டவனாய், மகனைக்
கட்டியணைத்து முத்தமிட்டு சந்தோஷித்திருக்கையில், அவன்
சுவயனென்னும் வேந்தன்வந்து தீர்க்கதருமனைக்கண்டு நமஸ்
கரித்து, அன்னவரிட மாசிபெற்று, பின்ன ரவர்களுடைய
க்ஷேமலாபங்களையெல்லாம் விசாரித்து, கீரனுடைய குரு
வாகிய உதங்கமாமுநிமுதலிய பெரியோர்களையெல்லாம் வரு
விக்கும்பொருட்டுத் திருமுகமனுப்ப, அதுபோலவரும்பிர
யாணப்பட்டுத் தனதுசீடர்களுடனுஞ் சில பெரியோர்களுட
னுஞ்சேதுவில் விளங்குந் தநுக்கோடியில் தீர்த்தமாடக்கரு
திச் சங்கற்பவிதிப்படி சக்கரதீர்த்தமுதலான பல தீர்த்தங்க

ளெல்லாமாடி, பின் அகஸ்திய தீர்த்தத்திலே தீர்த்தமாட
வேண்டுமென்று வருகையில், பேரனானவன் தனது குருவாகிய
உதங்கமாமுனிவர் வரவுகண்டு, தாயைக்கண்ட சேய்போற் சந்
தோஷத்தோடுமெழுந் தெதிர்கொண்டோடி, அவருடைய
பாதகமலங்களில் அஷ்டாங்க பஞ்சாங்க கிரியாங்களாய்ப்
பணிந்தெழுந்து, இருகரங்களையுஞ் சிரத்தின்மேற்கூப்பி,
அனந்தவிதங்களாற் ஸ்ரோத்திரஞ்செய்து நிற்பதுகண்ட [illegible]
தருமன்முதலிய வேந்தன் மந்திரி பிரதானிக ளியாவருந் திடுக்
கிட்டெழுந்து திரிகரணசுத்தியோடும் உதங்கமாமுனிவரைப்
பணிந்து நிற்கையில், அதுகண்ட உதங்கர் யாவருக்கு மாசி
கூறி யிருக்கச்செய்து, க்ஷேமலாபங்களை விசாரித்து, பின்
நடக்கவேண்டிய காரியங்களுக்குயத்தனஞ்செய்வீர்களென்று
சொல்ல, அதுபோல் வேந்தனும் வேவுக்காரரைவருவித்து,
அவர்களுக்கு வேண்டிய பரிசுகொடுத்து, மதுராபுரிக்குப்
போய் தனதுகுமாரத்தியாகிய புண்ணியவதிமுதலிய பெண்
களையெல்லா மழைத்துவரும்படியாய்த் திருமுகங்கொடுத்
தனுப்ப, அதைப்பெற்ற வேவுகர் கந்தமாதன பருவதத்தை
விட்டுப் பிரயாணப்பட்டு காடுமலைவனம் வனாந்தரங்களையெல்
லாங் காற்றினு மதிவேகமாய்ச்சென்று கடந்தவராய், மதுரா
புரியைசசேர்ந்து, இராஜனரண்மனையி லந்தப்புரத்திலிருக்கும்
இராஜபத்தினி முதலியபெண்களுக்குத் தங்கள்வரவை யறி
வித்து, திருமுகத்தையுங்கொடுக்க, அத்திருமுகத்தைவாசித்த
இராஜபத்தினிகள் சந்தோஷமடைந்து, குமாரத்தியாகிய
புண்ணியவதியினது பெருமையைக் கொண்டாடி, யாவரும்
பிரயாணசித்தமாய், அளவிறந்த முத்துச் சிவிகைகளினும்
இரதங்களினுமேறிச் சர்வாடம்பரத்தோடும்பிரயாணப்பட்டு,
அதிவிரைவோடுங் கந்தமாதன பருவதச்சாரலில் வந்திறங்கி
னார்கள். அதுகண்ட வேந்தன்முதலிய யாவருஞ் சந்தோஷ
மடைந்து, உடனே இமையாநாடருக்கிறைவனாகிய இந்திரன்
வாழுங் கொலுமண்டபமும் இதற்கிணையோவென்று சொல்
லத்தக்கதாய் வதுவைமண்டபஞ்சோடித்து, மகரதோரணங்

கள்கட்டி, எங்குங் கொடிகள் தூக்கிப் பூரணகும்பங்கணி றுத்தி, வாழை கமுகு பலா கூந்தற்பனை முதலிய சோலைகளையுங் கட்டிச் சரஞ்சரமாய் முத்துக்குஞ்சங்களைத் தூக்கி, நவமணி வெயிலெறிக்கு மாசனங்களை யணியணியாய்ப்பரப்பி, எங்குஞ் சுகந்தமுலாவும் பனிநீர்களைத் தெளித்து, நல்லசுபமுகூர்த்தத்தில் கீரனுக்கு மஞ்சனமாட்டி ஆடையாபரணங்களைப் பூட்டிச் சிங்காரஞ்செய்து, அதுபோலிராஜகுமாரத்தியையு மலங்கிருதஞ்செய்து, இருவரையு மணவறைப்பந்தலிலே அநேக மேளவாத்தியங்கள் முழங்கத் தோழிப்பெண்கள் புடைசூழ்ந்து கவரிவீசும்படியா யழைத்துவந்து, நவரத்தின பீடத்தின்மீ துட்காரவைத்தார்கள், அதுகண்ட உதங்கமா முனிவர் மிகு களிப்போடும் வேதாகமங்களுணர்ந்த பெரியோர்களுடனே கலியாணச்சடங்கின் விதிமுறைவழுவாதுசெய்து, விநாயகமூர்த்தியை ஆவாகனப்படுத்தி, தூபதீப நிவேதனங் காட்டி, அயிராவதத்தைதவருவித்து, அதற்குப் பூசைமுடித்துக் கீரனையதன்மீ தாரோகணிக்கசெய்து, பேரி, பூரி, தாரை, தவுண்டை, யல்லரி, குடமுழா, கொம்பு, காளம், எககாளம், சின்னங்களென்னு முப்பத்திரண்டு வாத்தியங்களையும பேரொலியோடு முழங்கச்செய்து, கீரனை மணக்கோலங் காட்டி, பந்தரிற்சேர்ந்து, வெள்ளையானையை விட்டிறங்கி நமஸ்கரித்து, மணவறையி லுட்கார்ந்தபின், வேதவாயினர்களாகிய பெரியோர்களால் ஓமகுண்ட முண்டுபண்ணி, அதில் ஓமச்சமித்துகளாலே யக்கினிவளர்ப்பித்து, விதிப்படிநடத்தி வேந்தனுற்றனது குமாரத்தியை கீரனுக்கு தாரைவார்த்துக் கொடுக்கும்படிசொல்ல, அதுபோல் ஆகாயவாணி பூமிதேவி அக்கினிசாட்சியாகவுந் தேவப்பிராமணாள் முன்னிலையில்வேத பாராயணத்துடனே தாரைவார்த்துக் கொடுக்கும்போது, பூசுராள்முதலிய பெரியோர்க ளியாவரும் ஆசிகூற அட்சதை யிறைக்கவுந் தேவதுந்துமி முழங்கவும் புண்யவதிக்கு கீரனால் திருமங்கல்யதாரணஞ் செய்துவைத்து, அதன்பேரிற் செய்யவேண்டிய சடங்குகளியாவுங் குறைவின்றி நடத்திப்,

பின்னர் மங்களவாழ்த்துமுதலியவுஞ்செய்து கலியாணமண்ட பத்திலின்றும் இருவரையும் வேறே மண்டபத்திலிருக்கச் செய்து, பால்பழங்கொடுத்து, அதன்பேரில் திருமணத்திற்கு வந்திருந்த உதங்கமுநிவராதி பெரியோர்கள் யாவருக்கும் முப்பழச்சற்கரையோடும் சட்சுவைப் பதார்த்தங்களோடும் விருந்தமுதுண்ணசெய்து, பின்பு சந்தனபுட்ப தாம்பூலாதிகள் கொடுத்து, இவ்வாறு ஐந்துநாள்வரையிலுஞ் சடங்குகளியாவுஞ்செய்து, பின்னர் முநிவராதி பெரியோர்களுக்கும் பிராம்மணருக்கும் வேண்டிய மரியாதைகள்செய்து, அவரவர்களிருப்பிடம் போகும்படியாய் விடைகொடுத்து நமஸ்கரித்து நிற்கையில், குருவாகிய உதங்கமாமுநிவர் தம்பதிகளை யாசீர்வதித்து, தனது சீடர்களுடனே இராஜனிடத்திலும் கேபரன்முதலிய யாவரிடத்தும் விடைபெற்று சேதுவிற்றீர்த்தமாடித் தமது ஆசிரமத்துக்கெழுந்தருளினார்கள். அதன்பேரில் தீர்க்கதருமன் தனதுகுமாரனை வேதாரண்யத்துக்கழைத்துக் கொண்டுபோகக் கருதி வேந்தனிடத்திற்கூற, வேந்தன் சந்தோஷமடைந்து தன்மகளுக்குச் சீதனமாக இரதகஜதுரக பதாதிகளும் ஆடையாபரணங்களுந் தோழிப்பெண்களுங் கோடி பசும்பொன்னுங் கொடுத்ததுமன்றியில், அநேக பசு நிரைகளையும ஏவலாளிகளையுங்கொடுத்து, சுகஜீவிக்ளாய்ப் போய்வரும்படி விடைதர, அப்போது கேபரனு மவன்தேவியும் இராஜனையுந் தனதுதாயையும் பணிந்து, அவர்களாலாசி பெற்று, இரதகஜ துரகபதாதிகளோடும் வேதாரண்யம்வந்து சேர்ந்தார்கள். அதன்பேரில் கவநயனென்னும் வேந்தன் தனது தேவிமார்களோடும் மந்திரிபிரதானிமுதலிய இரதகஜ துரகபதாதிகளோடும் பிரயாணப்பட்டு, மதுராபுரியைச் சேர்ந்து, இராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டிருந்தான். கேட்டீர்களோ முநிவர்களே, இப்படியாகவந்த அகஸ்தியதீர்த்தமானது அநேகமகிமையோடுங்கூடி இஷ்டகாமிய மோக்ஷ காமியங்களையெல்லா மவரவர்களெண்ணப்படி நிறைவேற்றிக் கொண் டிருப்பதால் அத்தீர்த்தத்திலே மூழ்கிய புண்ணிய

புருஷர்களுக்கு மூன்றுவருடத்தில் நினைத்தகாரியங்கள் கை கூடுமென்று சொல்ல, அதுகேட்ட நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்கள் சந்தோஷமடைந்து, சூதமுனிவரைப்பார்த்து, சுவாமி, தேவரீர் திருவாய்மலர்ந்தருளிவரும் கந்தமாதனத்தின் பெருமையைக் கேட்கக்கேட்கப் புன்மையோங்களது செவியாகிய வாயினிடத்து தேவாமிர்தத்தை யருந்துவதுபோற் சுகாநந்தத்தைத் தருகின்றமையால் இன்னுமப்பருவதத்தினுள்ள தீர்த்தங்களின் பெருமையை எளியோங்களுய்யும்படி கருணைசுரக்கவேண்டுமென்று பணிந்த முனிவரைப்பார்த்து, ஓ முனிவர்களே, அக்கந்தமாதனச்சார்பில் இராமதீர்த்தமென்றோர் தீர்த்தமுண்டு, அதன்மகிமையைச் சொல்லுகிறேன் கேளுங்களென்று சொல்லத்தொடங்கினார்.

அகஸ்தியதீர்த்தச்சருக்கம்
முற்றுப்பெற்றது.

---

## இராமதீர்த்தச்சருக்கம்.

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்களே, தசரதகுமாரனாகிய ஸ்ரீராமமூர்த்தியு மிலக்ஷுமணனும் அநுமன் சுக்ரீவன் முதலிய வானரவீரர்களுங்கூடி, இராவண கும்பகர்ணனோடு மளவிறந்த இராக்கதசேனைகளை வதஞ்செய்து, இலங்கையை விபீஷணனுக்குப் பட்டங்கட்டி, சீதாபிராட்டியை மீட்டுக்கொண்டு, புட்பகவிமானத்தேறி வருகையில் இராமமூர்த்தியை பிரம்மஹத்தி தோஷமணுக, அதனை நிவர்த்திசெய்யும்படி, கந்தமாதனபருவதத்திற் சிவலிங்கப்பிரதிஷ்டைசெய்து பூசைமுடித்துச் சாம்பசிவமூர்த்தியா லநேகவரப்பிரசாதங்களைப் பெற்றுக்கொண்டு, அயோத்தியாபட்டணத்துக் கெழுந்தருளும்போது, தன்பெயரால் இக்கந்தமாதனபருவதத்தில் ஓர் தீர்த்த முண்டுசெய்யவேண்டுமெனக் கருதி, அவ்வாறே யேற்படுத்தி, அதிற் றானும் தம்பி முதலிய வானரவீரர்களுந் தீர்த்தமாடி, அத்தடாகத்துக்கு அநேக

வரங்களைக்கொடுத்து இராமதீர்த்தமென்று பெயர்கொடுத்து அயோத்தியாபுரிக் கெழுந்தருள, அதுமுதலத்தீர்த்தத்திலே நீராடியபுண்ணிய புருஷர்களுக்கு நான்குவேதம் ஆறுசாஸ்திரம் பதினெண்புராண கலைக ளியாவுஞ் சம்பூரணமாய்ப் பலிதமாவதோடுஞ் சரிதை கிரியை யோக ஞானமென்னு நான்குநிலையுங் கிடைக்குமென்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை, அதெப்படியெனில், வேதகுலத்திலுற்பவித்த சுதிக்கணனென்றொரு பிராமணன் எப்போதும் ஸ்ரீவைகுண்டவாசராகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைத் தனது இதயகமலத்திலிருத்தி தோத்திரஞ்செய்து, கிரியையின் விதிப்படி பூசித்தும், யோகசாதனங்கள்செய்தும், மகாவிஷ்ணுவின் சொரூபத்தை தெரிசிக்கவேண்டுமென்னு மபேட்சையோடும் பிரயாணப்பட்டு, கந்தமாதனகிரிசசாரலிலே விளங்கும் இராமதீர்த்தத்தில் தீர்த்தமாடி, அத்தடாகக்கரையிலே யிருந்து, இராமமந்திரத்தை இடைவிடாமற் ஜெபித்துக்கொண்டும் அத்தடாகத்தில் தீர்த்தமாடிக்கொண்டும நியமத்தோடு மிருக்குங்காலையில், அம்மறையவனுக்கு குருவினுடைய உபதேசமில்லாமல் தனக்குத்தானே தன்னுடைய அறிவை குருவாகப் பாவனைசெய்து ஸ்ரீராமனுடைய கிருபாகடாக்ஷத்தினாலே பிரம்மானந்த சொரூபத்தையடைந்து, வேதாகமங்க ளெவற்றினுந்தேர்ந்து, ஞானஞாதரு ஞேயங்களையுங் குருவில்லாமலறிந்து, சடத்தோடுந் தேவலோகத்துக்குப்போய்வரச் சித்திகளைப்பெற்றுதேவர்களோடொப்பாய் பிரம்மலோகம் விஷ்ணுலோகம் கயிலாசம் என்னு மிடங்களுக்குச் சென்று, அங்குள மகிமைகளையெல்லாமறிந்து, அதனோடும், அணிமா, இலகிமா, கரிமா, முதலிய அஷ்டமாசித்திகளினுந் தேர்ந்து, பிரம்மானந்தத்தையடைந்து, பூலோகத்துக்குவந்து, காசிபட்டணத்தை[illegible] போயிருந்தான். கேளுங்கள் முனிவர்களே, அம்மறையவன் [illegible] யிருந்தவன் அந்த ராமதீர்த்தத்தில் தீர்த்தமாடிய பெருமையால் அணிமாவாதி அஷ்டசித்திகளையும் அஷ்டாங்கயோகமும்பெற்று [illegible]

ணந்த சொரூபத்தையடைந்து பேரின்பவாழ்விலே சுதீக்ஷண
னென்னும் பிராம்மணோத்தமன் வாழ்ந்துகொண்டிருந்தானாத
லால், அவ்வண்ண மேன்மையான புகழையும் புண்ணியத்
தையு முடைத்தாயிருப்பதோடும், பாபவிமோசனஞ்செய்யத்
தக்கதாகவும் பாதாளலோகத்தையளாவி இஷ்டகாமியமோக்ஷ
காமியங்களையுந் தரத்தக்கதாய் ஸ்ரீராமனுடைய பாதாரவிந்
தத்தின் மகிமைகளைக் கொடுக்கப்பட்டதாய்விளங்கு மத்தடா
கத்தினிடமாக ஸ்ரீராமன் சீதாசமேதனாய் எப்போதும் வாசம்
பண்ணிக்கொண்டிருப்பதோடு மத்தடாகத்திற் குந்திமக்களா
கிய பாண்டவர்களைவரில் தருமபுத்திரனுக்குண்டான பாபமா
னது இத்தடாகத்தில்வந்து தீர்த்தமாடி ஸ்ரீராமமூர்த்தியாற்
பிரதிஷ்டைசெய்து வணங்கப்பட்ட இலிங்கமாகிய இராமநா
தனை தெரிசித்து வணங்கித் தன்னுடைய பாவங்களைப் பறக்க
வடித்து, பிரம்மானந்தத்தோடும் அஸ்தினாபுரம்போய்ச்சேர்
ந்து, இராஜரீகம்பண்ணிக்கொண்டிருந்தானென்று சூதமகா
முனிவர்சொல்லியதைக்கேட்டநைமிசாரண்யர் சந்தோஷமடை
ந்து, முனிவரைப்பணிந்து, சுவாமி, பாண்டவர்களிலொருவரா
கிய தருமபுத்திரருக்குப் பாபம்வந்தகாரணத்தையும் அன்ன
வர்க்கு சம்பவித்தபாபந் தீரும்பொருட்டு இராமதீர்த்தத்தில்
தீர்த்தமாடும்படி உபதேசித்தவர்களையும் அடியோங்களுக்
குத் தெரியும்படியாய் அநுக்ரகஞ் செய்யவேண்டுமென்று
பணிந்துவினவிய முனிவர்கள்மேற் கருணைகூர்ந்து சூதமாமுனி
வர்கூறுவார், கேளுங்கள், நைமிசாரண்யரே, பஞ்சபாண்டவர்
கள் அவர்களது புத்ரமித்ர களத்ராதிகளோடும் அநேகபோக
பாக்கியங்களோடுங் கூடிவாழ்ந்துவருகையில், அவர்கள் தாயா
திகளாகிய துரியோதனாதியர்கள் வஞ்சமனைத்தாற் பாண்டவரை
வருவித்து மாயச்சூதாடி அவர்களுடையபதிநிதிமுதலியயாவு
மபகரித்துப் பராரிகளாக்கிப் பன்னிரண்டுவருடம் வனவாச
மும் ஒருவருட மக்கியாதவாசமும் நாட்டிலொருவரறியாமற்
றிரியும்படியாயனுப்பி, அவ்வாறு அவர்கள் சஞ்சரித்துவந்த
பின் பொருவருக்கொருவர் பாரதப்போர்தொடங்கி யுத்தஞ்

செய்துவருங்கயிற் பத்தாநாட்சண்டையில், சூரியோதநறுதி யர்கள் மெத்தவுந் துன்பமடைந்து, பின்னர் துரோணுசாரியு ருக்குச் சேனுபதிபட்டங்கட்டிப் பதினோராநாள்முதல் தொந் தயுத்தங்களாய் நடந்துகொண்டிருக்கிறபோது பதினோந்தா நாள் துஷ்டத்துய்மனே துரோணரெதிர்த்து அமர்செய்து பாணங்களைச் சரமாரியாக வருஷித்து பாண்டவ சயின்னியங் களைச் சின்னுபின்னப்படுத்தித் துரத்துகிறபோது, சேனைகள் பயந்து நான்குதிக்கினுஞ் சிதறியோடுவதைக்கண்ட துஷ்டத் துய்மன் மகாகோப தீப்தனுயெரிந்து விழுந்து கவுரவசேனே யென்னு மாட்டுத்திரளிற் பெரும்புலிபோற் பாய்ந்து பாண வருடம்பொழிந்து சின்னுபின்னப்படுத்துகையில் அதுகண்ட அர்ச்சுனனு மவனுக்குத் துணையாய்க்கலந்து இருவருஞ் சங் கோபசங்கமாய் பாணங்களை யாகாயம் பூமியெங்கும் நிரப்பிய தன்றியும், இரதத்தை துரோணுசாரியின்மீது தூண்டிச் சிலே யாசிரியரை யெதிர்த்து இரண்டுசிங்கங்களைப்போலும் இர ண்டுபருவதங்களைப்போலும் இரண்டுவடவாமுகாக்கினியைப் போலும் போர்புரிகையில், அண்டகடாகங்களெல்லா மதி ரத்தக்கதாகவுஞ் சமுத்திரஜலமுஞ் சுவறிப்போகும்படியாயும் அர்ச்சுனனும் துரோணரும் விடுக்கும் வாளிகளின் கொடுமை யால் லோகாலோகங்களெல்லாந் தத்தளிப்பதைப் பொன் னுலகவாசிகளாகிய இந்திராதிதேவர்க ளியாவரு மந்தரவீதியி னின்று பார்ப்பதற்கு பயப்பிராந்தியுற்றவராய் நடுக்கங் கொண்டிருக்கையில், அர்ச்சுனராஜனைச் சோர்வடையச்செய் வதற்கு அசக்தராய், அவன்பக்கத்திலிருக்கும் துஷ்டத்துய் மன்பேரிலெதிர்த்து பாணங்களைத்தூண்டி, நாலுபாணங் களினு லவன் ரதத்திற்கட்டியிருக்குங் குதிரைகளைத் துண் டித்து, இரண்டுபாணத்தினுல் தேரையுமுடைத்து, ஒரு பாணத்தினுல் சாரதியைக் கண்டித்துக் கியாவென்று சிங்க நாதஞ்செய்தார். அதுகண்ட வீமசேனன் தனது ரதத்தைத் தூண்டி, துரோணருக்குமுன் கொண்டுவந்துநிறுத்தி, துரோ ணரைநோக்கி, வாருமையர், எமது ஆசிரியரே, பிறப்பகுலத்

திற் பிறந்தவர்களாகியும் வேதாகமங்களை யுணர்ந்தவர்களாயு மிருக்கும் பெரியோர்கள் பிறருக் கிடர்செய்யமாட்டார்கள் தாயாதிகளா யிருப்பவர்கள் புத்ரமித்ர களத்ராதிகளோடு மொன்றுகூடி யிருப்பவர்களை வேறுபடுத்தவுமாட்டார்கள். உலகின்கண் சகிக்கப்படாத துன்பம்வந்தபோதினும் தங்கள் குலமுறையினின்றும் பிறழார்களாதலால் தேவரீர் அத்தன்மை வாய்ந்தவராக விருந்தும் மரபுக்குரியதொழிலைவிடுத்து க்ஷத்திரியர்களுக்கொப்பாகக் கொலைபாதகங்களுக்கு முதன்மையா யேற்பட்டு, இராஜரீகஞ்செய்யப்பட்ட அரசர்களை யனியாயமாயெதிர்த்து உயிர்வதைசெய்து எக்களிப்போடுமிருப்பது பிராமணதருமமல்லவே, மேலும் ஒருவருக்குப்பிறந்து மற்றொருவருக்குப் பிள்ளையாய்ப்புகுந்து இப்படி யனியாயஞ் செய்வது நும்போலியர்களுக் கழகல்லவே, ஓ வேதகுலோத்துங்கரே, வனசரனுக்கொப்பாய் வில்லுமம்புங்கையிற்பிடித்து ஜீவ இம்சைசெய்து அதனால் வயிறுவளர்ப்பது தகாதகாரியமன்றோ, தேவரீர் மறைவிதிப்படி யாகாதி கிர்த்தியங்களைச் செய்யவும் வேதாகமங்களை மரபினருக் கோதிவைக்கவும் இகபரசாதனத்துக் கேதுவாகிய பகவத்தியானஞ்செய்து உலகினரை உச்சீவிக்கச்செய்யும் நியமத்தை நாசப்படுத்தவோ ஏற்பட்டீர், இதோ உமதுமுதுகின்பேரிலிருக்கும் அம்புக்கூடென்ன வேதசாஸ்திரங்களோ, கரத்தினிடமாகவிளங்குந் தநுசென்ன ஓலையோ, வலக்கரத்திலோங்குஞ் சிலையென்ன எழுத்தாணியோ, அந்தோ இப்படி ரணரங்கத்தினின்று கிஞ்சித்தேனு மிரக்கமில்லாமல் வதஞ்செய்யும்படியா யுமக்கு உபதேசித்தவர் யாவர், மேலும் பெறுதற்குரிய உமது புத்திரனாகிய அசுவத்தாமன் யுத்தகளத்தில் மடிந்துபோயிருக்க அச்சலனத்தையும் நினையாமல் யுத்தமுனையில்நிற்பது மெத்தவும் ஆச்சரியமாயிருப்பதோடுந் தங்களைப்போன்றவர்களைப் பார்த்துமறியேன் கேட்டுமறியேனென்று சொல்லிய பீமனதுரையைக்கேட்ட சிலையாசிரியர், அசுவத்தாமன் மடிந்தானென்பதையுன்னித் திகைத்துக் கரத்தினிடமாகவிருந்த வில்லைத்

தரையில்விடுத்து, ஒன்றுந்தோற்றுதவராய், பீமனுரையை யெவ்வாறுநம்பலாமென்று யோசித்திருக்கையில், பீமசேனன் தனது ரதத்தை துரோணருக்குப் பின்புறமாய்த்திருப்பி, சேனைக்கடலுட் புகுந்து, இரதங்களை துட்சப்படுத்தியும், யானைக்கூட்டங்களை கால்வேறு தலைவேறு உடல்வேறு துதிக்கைவேறாகத் துண்டித்தும், குதிரைகளை நாசப்படுத்தியும், காலாள்களைச் சண்டமாருதக்காற்றி லகப்பட்ட சருகுபோல் நான்குதிக்குகளிலுஞ் சிதறியோடச்செய்தும் ஆட்டகாசம் பண்ணிக்கொண்டு, சக்ராகாரமாய் சழன்றுகொண் டிருக்கையில், பகதத்தன்கண்டு, கோபாவேசங்கொண்டு, தன்னுடைய யானைப்படைகளோடும்வந்து பீமராஜனைமறித்துப் போர்புரியத்தொடங்கி, பாணங்களை மாரிபோற்பொழிய, அதுகண்ட பீமன், பகதத்தன்பேரி லெரிந்துவிழுந்து, சிங்கத்தைப்போற் கர்ச்சித்து, வில்லினிடமாக அளவிறந்த தீக்கணைகளைச் சந்தித்துப் பிரயோகஞ்செய்து, அவனுடைய யானைக்கூட்டங்களை தும்சப்படுத்திக்கொண் டிருக்கும்போது, துரோணர் பீமன் வார்த்தையைக்கேட்டு யுத்தஞ்செய்யாமல் திகைத்துக்கொண் டிருப்பதை கிருஷ்ணமூர்த்திகண்டு, இது நல்லசமயமென்று மனக்களிகொண்டு, அர்ச்சுனனுடைய ரதத்தை தருமராஜன் ரதத்திற்குச் சமீபமாய்க் கொண்டுபோய் நிறுத்தி, தருமனைப் பார்த்து, ஓய் தருமநந்தனா, இச்சமயம் நான்சொல்லும் வார்த்தையைத் தடுக்காமல் துரோணரைப்பார்த்து அசுவத்தாமன் மரணமடைந்தானென்று சொல்லுவாயாகில், விலையாசிரியரை வெற்றிபெறலாம், மேலும் பீமன் அவ்வாறுசொல்லியதைக் கேட்டு நம்புவதற் கிடமில்லாமல் ஏதோ எப்படியோவென்று திகைத்திருப்பதால் உனதுவார்த்தையை உண்மையென்று நம்பி வில்லைவிட்டுவிடுவார், நமக்கு ஜெயமுண்டாமென்று சொல்ல, அதுகேட்ட தருமநந்தனன், சிவசிவாவென்று செவியைப்புதைத்து ஐயோ இப்படிக்கெல்லாம் வருமென்று ஆதியிற் றெரிந்திருந்தால் இந்த பாரதயுத்தத்திற்குத் தொடங்காமல் வனத்திற்றானே யிருந்துவிடலாமன்றோ, பொய்சொல்

வியா, ராச்சியமாளவேண்டும், அப்படிக்கொத்த இராஜீகங் கிடைத்தாலென்ன கிடைக்காமற் போயிற்றாலென்ன, ஓய் சுவாமி, இப்பேர்க்கொத்த அபவாதமான வார்த்தைசொல்ல வென்றால் முடியாதென்றுசொல்ல, அப்போது கிருஷ்ண மூர்த்தியானவர் கோபங்கொண்டு, ஓய் தருமநந்தன, உங்க ளால் நான்பட்டபாடெல்லாம் பாழாகிப்போய்விட்டது, அந்தோ நீங்கள் சவுக்கியத்தை யடையவேண்டுமென்று நான் அநேகம் பொய்சொல்லியும் இதராளைவஞ்சித்தும் தூது சென்று சங்கடப்பட்டும் உங்களோடு வனத்திற்றிரிந்தும் சா ரத்யஞ்செய்தும் என்னபிரயோசனமாச்சுது, நான் சொல்லிய படி ஒரு சொற்பகாரியத்திற்கு உடன்படாமல் என்றால் முடி யாதென்று சொன்னால் எனக்காவதென்ன, இங்குயாருக்காகப் பாடுபடுகிறேன், யாருக்காகக் கெடுகிறேன், பளாபளா நன்றா யிருக்கிறது, உலகின்கண் பொய்சொல்லாதவர்களார், சமயோ சித மறிந்தல்லவோ நடக்கவேண்டும், இப்படிசொல்லுவா யென்றறிந்தால் இந்தவீண்காரியங்களுக்குப் பிரவேசிக்கமாட் டேன், இப்போதும் எனக்கென்னவந்ததென்று மெத்தவு மனஸ்தாபங் கொண்டவரைப்போல் தேரைவிட்டு பூமியிற் குதித்துவிட்டார். அதுகண்ட தருமநந்தனன் திடுக்கிட்டு, மனதுகலங்கி, தானும் பூமியிற்குதித்து, கிருஷ்ணமூர்த்தியை தழுவிப் பிடித்துக்கொண்டு, அனேக உபசாரவார்த்தைகளைச் சொல்லித் தேரின்மீதிருக்கச்செய்து, ஓய் ஜனார்த்தன, வேத வேதாந்தமூர்த்தியாகிய தேவரீர் தானே யிப்படி செய்தால் இங்கு யாங்கள் செய்வதாவதென்ன விருக்கின்றது, அடியேன் பொய்சொல்லவேண்டுமென் றுரைத்ததைக் கேட்ட எனது செவியும் மனமும் குழைந்து நடுக்கமுற்றதே, என்நாவினாலே பொய்யைச் சொல்லிவிட்டு உலகிலெப்படி பிராணனை வைத் திருப்பேன், சுவாமி, பேதையே னிச்செய்கைக் குடன்படுவ னாயாகில் புவனமுள்ளளவும் நிந்தைக்காளாவதன்றியும்இகபர சாதனத்துக் கேதுவில்லாமற் போய்விடுவேனே என்செய் வேன் எவ்வணமுய்வேன் என்று தருமநந்தனன் துக்கசாக

ரத்து எழுந்திருப்பதை மாயவன்கண்டு, வாரும் தருமராஜனே, இஞ்சித்தேனு மும்மிடத்தில் க்ஷத்திரியதன்மமில்லை, எவ்விதமேனும் எதிர்த்தபகைவரை வெல்லவேண்டுமாதலால் நீர் ஒன்றும் யோசிக்கவேண்டாம் ஆயினும் நான் ஒருதந்திரஞ் சொல்லுகின்றேன், அது யாதெனில் பீமசேனன் பகதத்தனுடைய யானைத்தளத்திலே சிங்கத்தைப்போற்புகுந்து சர்வசங்கார மூர்த்தியைப்போல் அதப்படுத்துகின்றானாதலால் அந்த யானைத்திரளுள் முதன்மையாயிருக்கும் யானையின்பெயர் அசுவத்தாமமென்று வழங்குகின்றபடியாலும் அதனை பீமசேனன் கொன்றுவிட்டபடியாலும் நீர் துரோணாசாரிக்கு முன்னம்போய்நின்று, அவரைப்பார்த்து, அசுவத்தாமா ஹதா குஞ்சரமென்றுசொன்னால், யான் சங்கம் பூரிக்கிறேனென்றுசொல்ல, அதுகேட்ட தருமநந்தனன் இதுவுமொரு தந்திரந்தானென்று நினைந்து, தனதுரதத்தை சிலைக்குருவின் முன்னங் கொண்டுபோக வெத்தனிக்கையில், கிருஷ்ணமூர்த்தி தருமன் தேரினின்றுங் கீழேகுதித்து, அர்ச்சுனன் தேரிலேறிக்கொண்டு வரும்போது, தருமராஜனை துரோணர்கண்டு, அப்பா தருமநந்தனா அசுவத்தாமன் மடிந்தானென்று பீமன் சொன்னது வுண்மைதானாவென்றுகேட்க, அதற்குத் தருமராஜன் ஆம்சுவாமி, கவுரவதளத்திலே அசுவத்தாமன் பட்டானென்றுசொல்ல, அதுகேட்ட துரோணர் புத்ரவாஞ்சையால் வில்லையெறிந்துவிட்டுமூர்ச்சித்து தழுவணையின்மீதுசாய, அப்போது தருமநந்தனர், சுவாமி, பகதத்தனுடைய யானைத்திரளிற் றலைமைபூண்ட அசுவத்தாமமென்னும் யானையல்லவோ பட்டது, நீரேன்மூர்ச்சித்தீரென்று சொல்லுவதற்குள், கிருஷ்ணபகவான் துஷ்டத்துய்மனை சைகையால் சிரத்தைக்கண்டித்துவிடுமென்றுகாட்ட, துஷ்டத்துய்மனும் மூர்ச்சித்திருப்பவர்மீது ஒருசந்திராயுதத்தைப்பிரயோகஞ்செய்து சிரத்தைக் கண்டித்துக் கீழேசாய்த்தான், அக்காலையில் சிலையாசிரியனைக் கண்டித்த வாளியானது நம்மை யாதுசெய்யுமோவென்று அச்சங்கொண்டு ஒளித்ததுபோல சூரியன் மேற்றிசையிற்

புகுந்தான். உடனே அஞ்ஞானிகளது இதயம்போலக்காடாந்தகாரமாகிய விருண்சூழ்தலமையால் அவ்வேளையிற் பாண்டவர்கள் வெற்றிச்சங்கம்பிடித்து சந்தோஷத்தோடும் பாசறைபோய்ச்சேர, அதுகண்ட கவுரவர்கள் துரோணர்பட்டாரென்னுந் துன்பத்திலாழ்ந்து அவர்களும் பாடிவீடுசேர்ந்தார்கள் இவ்வாறு, அன்றையதினமுடிந்து மறுநாள்முதற் கர்னன் சல்லியன் துற்சாதனன் துரியோதனனுமியரோடு பதினெட்டு நாள்வரையில் யுத்தஞ்செய்து பாண்டவர்கள் ஜெயத்தையடைந்தவர்களாய் வெற்றிமாலைபூண்டு அஸ்தினபுரஞ்சேர்ந்து தருமநந்தனருக்குப் பட்டாபிஷேகஞ் செய்யவேண்டி யத்தனிக்கும்போது, தவுமியாசாரியார் தருமராஜனைப்பார்த்துக் கூறுவார், வாரும் தருமநந்தன, பதினைந்தாநாள் துரோணருடனே யுத்தஞ்செய்கிறபோது உமதுவாக்கிலே பிறந்த சொல்லினால் அவரிறந்தபடியினாலே அத்தோஷம் உமக்குண்டாயிருப்பது மன்றியில் துரோணருக்குமுன் நீர்கண்டதுபோல் மாயப்படரேற்படுத்திச்சொன்ன பொய்வார்த்தையினால் உயிர்நீங்கியதோஷம் உம்மைச்சார்ந்திருக்கப் பட்டாபிஷேகஞ்செய்து கொள்வது சரியல்ல வாதலால் அந்ததோஷத்தை நிவாரணஞ்செய்து பின்பு மகுடந்தரித்துக் கொள்ள வேண்டுமென்று தவுமியர் சொல்லியதைக்கேட்ட தருமநந்தனர் மெத்தவுந் துன்பமடைந்து, தன்னுடைய தம்பிமார்களையுங் கிருஷ்ணபகவானையும் வரவழைத்து, தவுமியர் கூறியதையவர்களுக்குரைத்து யோசித்துக்கொண்டிருக்கையில், அவண் வேதவியாசமகாரிஷியானவர் வந்தார். அப்போது தருமர் முதலிய யாவருமெழுந்து வந்தனைவழிபாடுசெய்து ஆசனத்திருத்தி நடந்தகாரியங்களை யன்னவரோடுரைத்து பின்நடக்க வேண்டிய கட்டளையென்னவென்று வினவ, அதற்கு வேத வியாசர் சற்றுநேரம் யோசித்து நிட்டையிலிருந்து ஞானதிருஷ்டியினாற் பார்த்துச்சொல்லுவார், கேளுந் தருமநந்தனரே, நீர்செய்திருக்கும் பாவந் தீரவேண்டுமாயின் பரதகண்டதெட்சணபாகத்திற் சேதுவின்மத்தியிலோங்குங் கந்த

மாதனபருவதச்சாரலில் ஸ்ரீராமமூர்த்தியினு லுண்டாக்கப் பட்ட ராமதீர்த்தத்தில் தீர்த்தமாடிப் பின் இராமநாதனைத் தெரிசித்துவந்தால் பொய்வார்த்தைசொல்லிக் கலங்கச்செய்து குருவைக்கொன்றபாபமும் மற்ற எல்லாக்கர்மங்களும் நிவர்த்தியாவதோடும் நீர்நினைத்த இஷ்டகாமியத்தையும் மோட்ச காமியத்தையுந் தருமென்றுசொல்லி வியாசபகவான் செலவு பெற்றுக்கொள்ள. பின் தருமராஜன் மெத்தவுஞ் சந்தோஷ மடைந்து, தனது தம்பிமார்களுடனும் தவுமியர்முதலிய சில சயின்னியங்களுடனும் பிரயாணப்பட்டுக், காடு மலை வனம் வனாந்திரம் காநாறு நதிமுதலியவற்றையும் புண்ணியக்ஷேத்திரங்களையுந் தலங்களையுந் தெரிசித்துக்கடந்து, சேதுவைக் கண்டு, அதன்மத்தியில்விளங்குங் கந்தமாதன பருவதச்சாரலில் இராமதீர்த்தக்கரையில் வந்துசேர்ந்தார்கள். அப்படி சேர்ந்தபிறகு அந்தராமதீர்த்தத்தில் தருமநந்தனன்முதலிய யாவரும் தவும்மியர்சொல்லிய சங்கற்ப விதியின்படித் தீர்த்த மாடி, அநேககோதானபூதான கன்னிகாதானமுதலிய முப்பத்திரண்டறங்களையும் வழுவின்றிச் செய்து, ஸ்ரீராமநாதனையுந் தெரிசித்து, அந்திசந்தி இரண்டுவேளையினும் இராமமந்திரத்தை யிடைவிடாமற் செபித்துக்கொண்டு, இப்படி யொரு மாதகாலம்வரையில்நடந்துவருகையி லோர்நாள், ஆகாயத்தினின்றும், ஓய் தருமராஜனே, நீர்சொல்லிய படராகிய பாபம் உம்மைவிட்டு நீங்கியதென்று அசரீரியோத, அவ்வாய்மையைக்கேட்ட தருமராஜன்முதலிய யாவருங்கேட்டு சந்தோஷ மடைந்து, தம்பிமாருடனும் ஸ்ரீராமநாதனுடையபாதபத்மங்களிற்பணிந்து, அநேகவிதமாய்த் தோத்திரங்கள்செய்து அவணின்றுந்திரும்பி அஸ்தினபுரம் வந்துசேர்ந்து இவ்வமூகூர்த்தகாலத்தில் வியாசமகாமுநிவர்முதலிய பெரியோர்கள் முன்னிலையிற் பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு இராச்சிய பரிபாலனஞ் செய்துகொண்டிருந்தா ராதலால், அத்தன்மையாகிய மகிமைபொருந்திய இராமதீர்த்தத்தில் மூழ்கி ஸ்ரீராமமூர்த்தியையுஞ் சீதாதேவியம்மனையுந் தெரிசித்தால், அவர்

களுக்கு வைகுண்டபதவி சித்தியாமாதலால், அத்தீர்த்தத்துக்குச் சமீபமாய் இலட்சுமணதீர்த்தமென்றோர் தீர்த்தமுண்டு, அத்தீர்த்தமும் இவ்வாறே மகிமையுற்றதென்று சூதமகாமுநிவர் கூறியதைக்கேட்ட நைமிசாரண்யர், மெத்தவுஞ் சந்தோஷமடைந்து, முநிவரைப்பணிந்து, சுவாமி, தேவரீர் இப்போதுசொல்லிய இலட்சுமணதீர்த்தத்தின் பெருமையை அடியோங்களுக்குத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று வினவிப் பணிந்துநின்ற முநிவர்மேற் கருணைகூர்ந்து சூதமுநிவர் சொல்லத்தொடங்கினர்.

இராமதீர்த்தச்சருக்கம்

முற்றுப்பெற்றது.

---

## இலட்சுமணதீர்த்தச்சருக்கம்.

---

கேளுங்கள் நைமிசாரண்ய வாசிகளாகிய முநிவர்களே, இமையாநாட்டரென்னும் தேவர்களுக்கு இராக்கதராலுற்ற இடுக்கணைத் தவிர்த்தாட் கொள்ளவேண்டி ஸ்ரீவைகுண்டவாசனாகிய ஜகதீசன் கருணைகூர்ந்து இவ்வுலகின்கண் ஓங்கும் பரதகண்டத்தில் வயங்கும் அயோத்தியா பட்டணத்துக்கிறைவனாகிய தசரதமகாராஜனுக்குச் சுதனாகவந்தவரித்து இராமமூர்த்தியெனப் பெயர்பூண்டதன்றியுந் தனக்குத் துணைவனாக ஆதிசேடனை இலக்குமணனென்னுந் தம்பியாக வருவித்துக்கொண்டும், இலக்குமியைச் சீதாபிராட்டியென்னும் பெண்ணாய் ஜனிப்பித்து அன்னவளை மணந்தும், மூவரும் வனத்திற்ப்ரவேசித்து, அம்மனை இராவணனாற் சிறையிடச்செய்து, வானரவீரர்களைக்கூட்டி இலங்கைக்குச் சேதுபந்தனஞ்செய்து, இராவணனிராக்ஷதர்களையெல்லாம்வதஞ்செய்து, அம்மனை சிறைமீட்டு அவனின்றுந் திரும்புகாலையில், சேதுவின்மத்தியிற் கந்தமாதனபருவதத்தில் இலிங்க பிர

திஷ்டைசெய்து வணங்கியபின், இலட்சுமணரானவர் தனித்து சிவபூசைபண்ணக் கருதி ஸ்ரீராமநாதனுக்கு மேற்பாகத்தில் சிவலிங்கபிரதிஷ்டைசெய்து ஓர் தடாகமுண்டுபண்ணி, அத்தீர்த்தத்தினுற் சுவாமிக்குத் திருமஞ்சனஞ்செய்து, கந்தபுட்ப தூபதீபங்களாற் பூசித்து நிவேதனங்காட்டிப் பணிந்து, பின், அத்தீர்த்தத்திற்கு இலட்சுமணதீர்த்தமென்று நாமகரணஞ் சாற்றிச் சென்றமையால் அதுமுதல் இலட்சுமணதீர்த்தமென்று வழங்கிவருவதனேடும் அதிற் றீர்த்தமாடியபேர்களுக்கு வேதாகம சாஸ்திரப்பயிற்சியும் தனகனகவஸ்து வாகனங்களும் புத்ரசம்பத்தும் தயாளகுணமும் அணிமராதி யஷ்டசித்திகளும் அஷ்டாங்கயோகங்களும் அநுகூலப்படுவதோடும் பிரமசொரூபம்பெற்று, அகண்டபரிபூரண சச்சிதானந்த சின்மய ஸ்வரூப சாட்சாத்காரமாகிய பரசிவத்தைக் கலப்பார்கள். மேலும் அத்தடாகத்தில் மூழ்கி யதன்கரைமீதிருக்குஞ் சிவலிங்கப்பெருமானைப் பஞ்சசுத்தியோடும் பூசித்துப் பணிந்தவர்கள் அகண்ட அயிசுவரியத்தைப் பெறுவதோடுஞ் சுத்த சத்துவத்திலிருந்து கிடைப்பதற்கரிய சாயுச்யமென்னு முத்தி வீட்டையடைவ ராதலா லத்தீர்த்தத்தில் வசுதேவதனயனுக வந் தவதரித்துக் கஞ்சனைக்கடிந்து காலிகளோடுமோடித்திரிந்துங் கருதற்கரிய லீலாவினோதங்களைப்புரிந்த கண்ணபிரானுகிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்திக்கு நந்தன்மனையில் முன்னுதித் தோனுகிய பலராமன் தீர்த்தமாடி பிரம்மஹத்தி விமோசனமாயிற்றென்று சூதமாமுனிவர் கூறியதைக்கேட்ட நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்கள் அதிகாதலோடுஞ் சூதமுனிவரைப்பணிந்து, சுவாமி, தேவரீர் கூறியவண்ணம் பலராமனுக்கு எவ்விதமாய் பிரம்மஹத்தி பற்றியதோ அதனை யடியோங்களுக்குத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று வினவ முனிவர் சொல்லத்தொடங்கினர்.

கேளுங்கள் நைமிசாரண்யரே, குந்திமக்களாகிய பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் பாரதயுத்தந் தொடங்குங்

காலையில், ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் பாண்டவர்பட்சத்தில் அர்ச்சுனனுக்குச் சாரதியாகவமைந்ததுகண்ட பலராமர் தனது தம்பியாகிய கிருஷ்ணமூர்த்தியை வெறுத்து, இருதிறத்தாரோடும் வார்த்தையாடாமல் யாத்திரைசெய்யக் கருதிப் பிரயாணப்பட்டு சிவஸ்தலங்களையும் விஷ்ணுஸ்தலங்களையும் தெரிசித்துக்கொண்டு, கங்கை யமுனை கோதாவரி சிந்து காவேரி நர்மதாமுதலிய நதிகளிலாடியுந் திவ்விய க்ஷேத்திரங்களில் வாசஞ்செய்து மிருக்கிறகாலையில், நைமிசாரண்யத்தில் தீர்க்கசத்ரயாகஞ்செய்வதாய்க் கேள்வியுற்று அதனைப்பார்க்க வேண்டி, நைமிசாரண்யத்தை நோக்கிவருகையில், பலராமர் வருதலைக்கண்ட நைமிசாரண்ய வாசிகளாகிய ருஷிகளெழுந்து எதிர்கொண்டுபோய் வந்தனை வழிபாடுசெய் தழைத்துவந்து, ஆசனத்திருத்தி, தோத்திரஞ்செய்துகொண் டிருக்கையில், அம்முனிவர்களுக்குள் தலைமைபூண்டு அவர்களுக்கு வேதாகமசாஸ்திர ரகஸ்யங்களை யுபதேசித்துக்கொண்டிருக்கும் சூதமாமுனியென்னு மியான்மாத்திரம் பலராமரைக்கண்டு எழுந்திராமலும் வணங்காமலுமிருந்ததுகண்டு, இத்தனை பேருக்குள் இவனுக்குமாத்திரம் இந்த கெர்வம் எப்படிவந்ததென்றும் இவனை உலகில்வைக்கப்படாதென்றும் சங்கரித்துவிடவேண்டுமென்றும் மனத்தி லுன்னியமாத்திரத்தில் உடனே தனக்குமுன்பாக அநேகவலுவோடும் வரப்ரசாதத்தோடுங்கூடிய முசலமுகக்கலப்பை காணப்பட்டது, அப்படித் தோன்றியமாத்திரத்தில் அதையெடுத்துக் கையிலேந்திக்கொண்டவராய் அதன்பிரயோகத்தினால் தெற்பாசனத்திலிருந்த புராணிகனாகிய என்னைக் கொன்றுவிட்டார். கொன்றமாத்திரத்தில் அங்குள்ள யாவருங்கண்டு திடுக்கிட்டு மெய்மறந்து நடுக்கத்தோடெழுந்து, பலராமருடையபாதகமலங்களிற் பணிந்து நமஸ்கரித்து கைகளைக் கட்டிக்கொண்டு, சுவாமி, பலராமரே, தேவரீரது மகிமைதெரியாமல் சிறியோர்களாக விருக்கிறவர்கள் செய்தபிழையை பெரியோர்கள் பொறுத்துக்கொள்ளக் கடனன்றோ, ஆதலால் தேவரீரே

யிப்படி கோபஞ்செய்தால் வேதங்கள் நிலைகுலைந்துபோவதன்றியும் அண்டங்களும் வெடித்துசமுத்திரமுஞ்சுவறி சந்திர சூரியாளுங் கதிமாறி வியர்த்தமாய்விடு மாதலால இப்பிள்ளையின்குற்றத்தைப் பொறுத்து ரட்சிக்கவேண்டுமென்று முனிவர்கள் வணங்கித் தோத்திரஞ்செய்ய, அப்போது பலராமர் கொண்ட கோபந்தணிந்து கூறுவார். வாருங்கள் மகாரிஷிகளே, உங்களுக்கெல்லாமிவர் பெரியவரென்று யோசித்துப் புராணங்களைக் கேட்டுக்கொண் டிருப்பதேயன்றி நமக்கிவர் பெரியவரா, சத்தியவதிகுமாரராகிய பராசரர்முதலாகியபேர்களும் நம்மைக்கண்டு உபசாரஞ்செய்யும்போது இவர் எம்மாத்திரமென்று பலராமர் சொல்லக்கேட்ட மகாரிஷிகள் மறுபடியு மவரைவணங்கித் தோத்திரஞ்செய்து, சுவாமி, புராணகாலக்ஷேபஞ்செய்துகொண் டிருக்கிறகாலையில், அங்ஙனமெத்தன்மையானவர் வந்தபோதினும் பிரசங்கத்தைவிடுத்து உபசரிக்கவேண்டுவ தில்லையென்று சுருதிவாக்கியங்களால் சொல்லப்பட்டிருக்கின்றபடியினாலே சூதரதையோசித்திருந்ததேயன்றி கெர்வித்திருந்தவரல்லவே, ஆயினுந் தேவரீரைக் கண்டு மதையோசித்திருக்கக் கூடாமையாதலால் இவர்செய்த தப்பிதத்திற்கு அடைந்ததெண்டனை போதுமானதால் பழையபடி எழுப்பித்தருவதன்றியும் இவ்வனத்தில் எங்களுக்கு இம்சையைக்கொடுத்துவரும் வில்வலாசுரனுடைய குமாரன் வற்கலாசுரனைச்செயஞ்செய்து எங்கள் துயரத்தைப் போக்கவேண்டுமென்று வினவியதுகேட்ட பலராமர், கோபந்தணிந்து, குழந்தைகளாய் நமக்குவிளங்குகின்ற நீங்கள் கருதியவண்ண முடிப்போமென்று யோகாநுக்ரகத்தினாலேயும் முனிவர்களது யாகாதிமகிமைகளினாலும் என்னையெழுப்பி எனக்கு வேண்டியவரங்களைக்கொடுத்து முனிவர்களைப்பார்த்து, ஓ முனிவர்களே, இன்றையபோது துவாதசி திதியாதலாலும் இன்று நம்மாற் சூதமுனிவர் வதஞ்செய்யப்பட்டு உங்களுக்கு நடந்துவரும் புராணகாலக்ஷேபந் தூண்டியப்பட்டுப் போனமையாலும் மிதுருதல் உலகின்கண்வரும் பிரதி தினக

டோறும் காலக்ஷேபமில்லாமல் புராணசூன்னியதிதியென்று
விளங்கக்கடவதென்று கட்டளையிட்டுச் சூதமாமுனிவர் முத
லிய சகலத்ராளோடும் தீர்க்கசத்திரயாகத்தை நடத்துகின்ற
விநோதங்களைப்பார்த்துக்கொண்டிருந்தார். அப்படியிருக்கை
யில் வற்கலாசுரனென்பவன் பவரணையாகு மத்தினத்தில்
முனிவர்களால் நடத்தும் தீர்க்கசத்திரயாக ஓமகுண்டத்தில்
மலமூத்திரங்களும் மாமிசாதி யென்புகளுங் கொண்டுவந்து
சொரிந்தும், மதுக்குடங்களைப்போட் டுடைத்தும் பிணங்க
ளைச்சொரிந்தும் யாகசாலையில் இம்சைசெய்யும்போது, முனி
வர்கள்கண்டு வெகுண்டு, பலராமரிடத்திற்சொல்ல, பலராமர்
கேட்டுக் கோபங்கொண்டு, ஆகாயத்தை யேறிட்டுப் பார்க்கிற
போது, ஆகாயவீதியினின்றும் வெளியெல்லாம் நெருங்கிமூடி
கன்னங்கரேலென்று நீலபருவதத்தைப்போன்ற தேகமும்
செவ்வானம்போன்ற சடைகளும் கரத்திற் சூலாயுதமும்பிடி
த்து சத்தாடம்பரத்துடனே நிற்கும் வற்கலாசுரனைக்கண்டு,
கோபாவேசங்கொண்டு, தன்னுடைய கரத்திலிருந்த கலப்பை
யை வற்கலாசுரன் கழுத்திலேமாட்டிக் கீழேதள்ளிக்கொண்டு
வலதுகையிலேயிருந்த உலக்கையினாலே வொரேயடியா
யடிக்க, அவ்வசுரன் வாயினாலுமூக்கினாலு மிரத்தங்களைக் கக்
கிக்கொண்டு தேவேந்திரனாற் சிறகறுப்புண்டு விழுந்த பருவ
தங்களைப்போல வெத்திசையுமிரத்தங்கள் கொப்பளித்தோட
வலறிவிழுந்து மரணமடைந்தான், அப்போது நைமிசாரண்ய
முனிவர்க ளியாவருஞ் சந்தோஷமடைந்து, பலராமரைவணங்
கித் தழுவி தீர்த்தமாடச்செய்து பட்டுவஸ்திரங்களைத் தரிக்கச்
செய்து விபூதிருத்திராக்ஷ மாலிகாபரணங்களை யணிந்து
தோத்திரஞ்செய்து, வாருமையா சுவாமி, பலராமரே, இந்த
ராக்ஷதன் பிரம்மபீஜத்துக்குரியவனாதலா லிவனைக்கொன்ற
பாபம் தீரும்படியாய்ப் புண்யநதிகளிலேபோய்த் தீர்த்தமாடி
வரவேண்டுமென்று சொல்லியதைக்கேட்ட பலராமர், அப்
படியேயாகட்டுமென்று நைமிசாரண்யத்தில் விடைபெற்
றுக்கொண்டு, கோதாவரி, பிரயாகை, காவேரி, சரஸ்வதி,

ஸ்ரீமதா, துங்கபத்திராமுதலிய நதிகளில் சங்கற்பவிதியின்படி ஸ்நாநஞ்செய்து, அஸ்தினாபுரத்தை நோக்கிப் பிரயாணப்படு கிறபோது, அண்டகடாகங்களு மதிர்ந்துபோகும்படியாய்ச் சத்தாடம்பரஞ்செய்துகொண்டு நீலபர்வதம்போல பலராம ருக்குமுன் மறித்துக்காட்டிப் பின்பக்கத்தில் ஆகாயம்வரையி லுயர்ந்து வற்கலாசுரனுடைய பிரமஹத்திதொடர்ந்துபற்ற, அப்போது பலராமர்கண்டு பயந்து, இதுவென்ன காரண மென்று யோசித்துநிற்கிறபோது, ஆகாயத்திலே, ஓ உரோ கணிகுமாரா, பிரம்மகுலத்திலே யுற்பவித்த வற்கலாசுரனைக் கொன்றதோஷம் சிறிதுநீங்கியும் நீங்காமலு மிருக்கிறபடியி னாலே அந்தபிரமஹத்தி உன்னைத் தொந்தரவுபண்ணுகின்ற தென்று அசரீரியுரைக்க, அவ்வார்த்தையை பலராமர்கேட்டு மறுபடியுந்தாருகாவனத்தைநோக்கி பிரயாணப்பட்டுப்போய் ரிஷிகளைக்கண்டு, இவ்வனத்தில் வற்கலாசுரனைக் கொன்ற தோஷம் ஒருவருடமாய்ப் புண்யநதிகளிற் றீர்த்தமாடியும் திவ்யக்ஷேத்திரங்களிலே வாசம்பண்ணியும் என்னைவிட் டக லாதிருப்பது யாதுகாரணமென்று நடந்த வர்த்தமானங் களைச்சொல்ல, முநிவர்கள்கேட்டு யோசித்துச் சொல்லுவார், வாருமையா சுவாமிகளே, தேவரீர் மனதின்படியே இத்தோஷ நிவாரண மாகவேண்டுமாயின் கந்தமாதன பருவதத்தில் ஸ்ரீராமசந்திரனுடைய சகோதரனாகிய இலட்சுமணன் இந்திர சித்தைசெயஞ்செய்து தன்னுடையதோஷந் தீரவேண்டி சிவ பூசைசெய்து உண்டாக்கப்பட்ட தடாகமாகிய இலட்சுமண தீர்த்தமென்று ஒருபுண்யதீர்த்தமிருக்கின்றது, அத்தீர்த்தத் தில் ஸ்நாநஞ்செய்தமாத்திரத்தில் தோஷநிவர்த்தியாமென்று முநிவர்சொல்ல, பலராமர்கேட்டுச் சந்தோஷமடைந்து அவ ணின்றும் பிரயாணப்பட்டு, காடுமலைவனம் வனாந்திரமுதலிய யாவுங்கடந்து சேதுவிலேயிருக்குங் கந்தமாதனகிரிச் சாரலிலே விளங்கும் இலட்சுமணதீர்த்தத்தில்வந்து விதிப்படி ஸ்நாநஞ் செய்து, சந்தியாவந்தன நியமநிட்டைகளை முடித்துக்கொண்டு, கோதும்பை என்முதலிய நவதானியங்களும் பொன் ஆடை

யாபரணமுதலிய யாவும் பிராமணருக்குக் கொடுத்து, இலட்சுமணேசனை பிரதட்சணஞ்செய்து நமஸ்காரம்பண்ணி அபிஷேகமுதலிய யாவு நடப்பித்து ஆராதனைசெய்து துதித்து நிற்கையில், ஆகாயத்தினின்றும், ஓ பலராமமூர்த்தியே, உன்னைப்பற்றியிருந்த பிரமஹத்தி நிவர்த்தியாகிவிட்டதென்று அசரீரிதோன்ற, அவ்வாய்மையைக்கேட்ட பலராமர் மெத்தவுஞ் சந்தோஷமடைந்து, துவாரகையைநோக்கிப் பிரயாணப்பட்டுப் போய்விட்டாரென்று சூதமகாமுநிவர் சொல்லியதை நைமிசாரண்ய ரிஷிகள்கேட்டு, சுவாமி, தேவரீர் சொல்லிய யாவுங்கேட் டானந்தமடைந்தோம், ஆயினும் பலராமர் ஸ்ரீராமநாதனைத் தெரிசியாமல் வந்துவிட்ட காரண மியாதென்று வினவ, சூதமாமுநிவர், கேளுங்கள் நைமிசாரண்யரே, சேதுவின் மத்தியிலே விளங்குந் தீர்த்தங்க ளாடப்போனவர்கள், ஸ்ரீராமநாதனைத் தெரிசிக்காமலும் சேது தநுக்கோடியிலே மூழ்காமலும் வருகிறபேர்களுமுண்டோ, இலட்சுமண தீர்த்தத்தின் மகிமைகளைச்சொன்னோம் அல்லது மற்றமகிமைகளை இக்கரையிலே சொல்லவில்லை யாதலால் பலராமர் நித்யப்படியாய்ச் சேதுகோடிக்கரையில் மூழ்கி ஸ்ரீராமநாதனைத் தெரிசித்து விடைபெற்றுக்கொண்டு அஸ்திநாபுரமார்க்கமாய் துவாரகைக்குப் போய்விட்டாரென்று சூதமாமுநிவர்சொல்ல, முநிவர்கள்கேட்டுச் சந்தோஷமடைந்து, இன்னமந்தச் சேதுவில் விளங்கிய தீர்த்தமகிமைகளைச் சொல்லவேண்டுமென்று வினவ, சூதமுநிவர் சொல்லத் தொடங்கினார்.

இலட்சுமணதீர்த்தச்சருக்கம்

முற்றுப்பெற்றது.

---

## சடாதீர்த்தச்சருக்கம்.

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முநிவர்களே, அயோத்தியா பட்டணத்தினின்றும் ஸ்ரீராமமூர்த்தியானவர் பிதுர்வாக்கியப்படி சீதாபிராட்டியோடும் இலட்சுமணப்பெரு

மாரோடும் பிரயாணப்பட்டு வனத்தைநோக்கிச் செல்லு கையில், அரசுக்குரிய கிரீட மகரகுண்டல வாகுவலயமுதலிய யாவும் நீக்கிச் சிகையைக்கோதிச் சடைமுடியாய் வகுத்து கட்டிக் கந்தமூலபலாதிகளைப்புசித்துச் சஞ்சரிக்கையில், தேவி யைச் சிறைகொண்டுசென்ற இராவணனை வதஞ்செய்யநிமித் தம் இலங்கைக்குச் சேதுபந்தனஞ்செய்து வானரப்படைக ளோடுஞ் சென்று அன்னவனைக் கிளையோடுங்காய்ந்து சீதை யின் சிறைமீட்டுத் திரும்பிக் கந்தமாதனகிரிச்சாரலில் வரும் போது, தனது சடாமகுடத்தில் இராவணாதி ராட்சதர்களு டைய இரத்தமாமிசத் தூளிக ளடர்ந்திருக்குமெனக் கருதி யவ்விடத்திலோர் தடாகமுண்டுபண்ணி யதிற் றீர்த்தமாடிச் சடைமுடிகளைச் சுத்திசெய்து அத்தீர்த்தத்திற்குச் சடாதீர்த் தமென்று நாமகரணஞ்செய்து சென்றமையால் அதுமுதல் அத்தீர்த்தத்தில் மூழ்குபவர்களது நரைதிரை மூப்புங் காமக் குரோதாதி யறுவிதப்பகையும் நீங்குவதோடும் ஆணவகாமிய மாயையென்னு மலங்களுமற்று, சரிதை கிரியை யோக ஞானங் களையநுட்டித்து நித்தியானந்தசொரூபராய் முத்திவீட்டைப் பெறுவார்கள். அத்தீர்த்தத்தில் மூழ்கிச் சித்திபெற விருப்ப மில்லாதவர்கள் தங்கள் உச்சிவெடிக்கும்படியாய் வேதாகம சாஸ்திரங்களைப் பாராயணஞ்செய்தும், பிரதமை சஷ்டி ஏகா தசி பிரதோஷம் அமாவாசை பவுரணை சாந்திராயணவிரதங்க ளிருந்தும், வனங்களிலும் மலைநுழைவுகளிலும் ஜலத்தில் மூழ்கியிருந்தும், கந்தமூலங்கள்முதலிய சருகு ஜலபக்ஷண வாயு பட்சணங்களைச் செய்தும், தலைகீழாகநின்றும், ஒற்றைக்காலில் நின்றும், மான்றோல் புலித்தோல் வெண்டுகில் இரத்தினக் கம்பளம் தருப்பைமுதலிய ஆசனங்களிலிருந்தும், பத்திரம் வீரம் குக்கிடம் பங்கயம் கோமுகமென்னும் அங்காதனஞ் செய்து உருத்திராமுகமாயிருந்தும், இயமநியமாதி யஷ்டாங்க யோகங்களைச்செய்தும், பஞ்சாக்கினி இடைநின்று தபஞ்செய் தும், முத்திபெறாமல் இராகத்வேஷங்களைப்பெற்று, பிறவிப் பிணியிலுழன்று திரிவார்கள், மேலும் ஒருநாளைச் சடாதீர்த்தத்

தரித்திருப்பதும், எருக்கமாலையை யணிந்திருப்பதும் நீங்கள் தானே, அப்பரசிவம் நடத்து மிக்கோலங்களெல்லாம் உங்களுக் கேச்சாயிருக்கின்றபடியால் நீங்களிறந்தகாலையிற் சேருமிட மின்னதென்பதாய்ப் புலப்படவில்லையோ, அப்படி யுங்களுக்குத் தோன்றாமற் போனபோதிலும் புவனத்திலோங்குஞ் சகலவுயிர்களும் சைதன்யத்தி லொடுங்குங்காலத்தில் மிஞ்சியது பேய்ப்படைகளல்லவோ, மேலும் உங்களுடைய பாதாதிகேசபரியந்தம் விளங்கிக்கொண்டிருப்பது என்பல்லவோ, அவ்வெலும்பல்லாமல் சரீரமுண்டாயிருக்கின்றதே, ஐயா, மகாவிஷ்ணுவே, நீரெடுத்த தசாவதாரத்தில் மச்சாவதாரத்தினுடைய எலும்பும் கூர்மாவதாரத்தினுடைய ஓடும் வராகாவதாரத்தினுடைய கொம்பும் நரசிம்மாவதாரத்தினுடைய நகமும் யாவரணிந்திருப்பது, அவைதெரியாதோ, இவையல்லாமலும் அப்பரமசிவத்தினுடைய வாமபாகத்தில் வீற்றிருக்கப்பட்ட பார்வதியல்லவோ உம்மிடத்தில் இலட்சுமியாகவும்பிரமனிடத்திற் சரஸ்வதியாகவும் உருத்திரனிடத்தில் உருத்ரியாகவும் விளங்குவது, இதுவல்லாமலும் பூமியாதியாகவும் நாதவிந்தாகவும் ஏகவுருவாயிருக்கப்பட்ட வஸ்துவிலே பிரமாண்டங்களையெல்லாங்காட்டி ஒடுக்கப்படுத்திவருவது உங்களுக்குத் தெரியவில்லையோ, அந்தோ, இராகத்வேஷத்தால் மதிகெட்டுழலுகின்றீர்கள் இனியேனும் அம்மதியை அகலவிடுத்து ஏகமனதாக விருங்கள், இதல்லாமலும் ஆணாகவும் பெண்ணாகவும் அலியாகவும் வாசாமகோசரமாகவும் ரூபியாகவும் அரூபியாகவும் வேதாகமங்களுக் களவுபடாத வற்புதசின்மயசோதியாய்விளங்கும் பரம்பரனென்றறியுங்கள், மேலும் அவ்வத்துவினிடமோங்குந் திரிகுணத்தில் இராசதகுணத்தாற் பிரமனையும் சத்துவகுணத்தால் உன்னையும் தாமதகுணத்தால் உருத்திரனையும் நிருமித்துத் தான் நிர்மலனாய் நடித்துக்கொண்டிருக்குமாதலால் அவ் வத்துவினது விளையாட்டொழிந்தால் யாவுமகன்றதென்றறிக, இதன்றியும் அவ்வஸ்துவை ஆணுருவமென்று சிந்தித்தாற் பெண்ணுருவாம், பெண்ணுருவமென்று

சிந்தித்தால் ஆணுருவாம், அவ்வாறேங்குஞ் சந்திரசடாதர
மூர்த்தியாகிய உமாமகேசனை அடியார்க்கெளியனை நாமும்
நீங்களும் நான்குவேதங்களும் இந்திராதி முப்பத்துமுக்கோடி
தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் தும்புரு நார
தாதி சப்தரிஷிகளு மஷ்டவசுக்களும் கின்னரகிம்புருட கெருட
காந்தர்வ சித்தவித்யாதர உரகராகாயவாசிகளும் போகபூமி
யரும் சிவகணங்களும் நாட்களுங் கோட்களும் வணங்கப்
பட்ட வஸ்து ஒருவனிருக்க அவனைத் தோத்திரஞ்செய்து
வணங்காமல் நீங்கள் இப்படி அமர்புரிவது சரியல்ல வாத
லால் இனியாகிலும் உங்கள்மனத்திலுண்டாகிய சந்தேகத்
தையும் ஆண்மையையும் விட்டுவிட்டு உங்களிருப்பிடம்
போய்ச்சேருங்களென்று அநேகமகிமைபொருந்திய அசரீரி
யுரைத்ததைக் கேளாமற் பின்னும் விஷ்ணுவும் பிரமனும் நீ
பெரியவன் நான்பெரியவனென்று அண்டங்கள் செவிடுபடும்
படியாய் உத்தண்ட கெம்பீரத்துடனே தர்க்கமிட்டுக்கொண்
டிருந்தது எப்படியிருந்ததென்றால், சென்மாந்தரங்களிலவ
ரவர்கள்செய்த பிழைகளையெல்லாம் பொறுத்து நல்வினைக்
குத்தக்க நன்மையையும் பதவியையும், தீவினைக்குத்தக்க
தீமையையும் நரகத்தையும் கொடுத்து, யோகஞானவழிகளி
லே திறப்படச்செய்து உண்மைபோதங்களை யறிவித்துந்
தெளிவில்லாத அஞ்ஞானிக ளொருக்காலுந் தெளியமாட்
டார்க ளென்பதுபோல வைகுந்தவாசனாகிய விண்டுவும் மறை
மலர்த்தேவாகிய பிரமனும் தமது அஞ்ஞானநீங்காதவர்களாய்
தாங்கள்பற்றியதே பற்றாகவிருக்கையில் உடனே அந்த இடத்
திலிருந்து ஓராயிரங்கோடி சூரியப்பிரகாசம்போல ஆகாசம்
பூமியெல்லாம் நிறைந்து பத்துதிசையும்பரவி எங்கணுஞ்
சோதிமயமாய் உருவெளித்தோற்றமாக, அத்தோற்றத்தைக்
கண்ட பிரமன் இதென்னகாரணத்தால் உண்டாயிற்றோ
வென்று இதைக்கிட்டிப் பார்ப்போமென் றெண்ணங் கொண்
டிருக்கையில், பிரமனது மனக்கலக்கமானது அந்தச்சோதியிற்
கலந்து அவனுடைய முகமும் அக்கினிசொரூபமாகி அந்த

அக்கினிக்குள்ளே நீலகிரிபோல ஓர்புருட னிருக்கக்கண்டு, உடனே வெகுளி மேற்கொண்டு, அஞ்ஞானத்திலாழ்ந்து, மகாவிஷ்ணுவைநோக்கி, ஓ விஷ்ணுவே, உம்முடைய அக்கைதயினாலே என்னோடு வீண்வாதுகூறினதால் இந்த அக்கினியிலே எரிந்து பற்பமாய்ப் போகும்படி நேரிட்டதென்று எவ்வளவுந்தோற்றமலும் மனவாக்கு காயங்களினாலே எண்ணைப்படாதவனாயிருக்கும் பரமசிவன் விஷ்ணுவினுடனே கலந்து கற்பூரதீபம்போற் காண்பிப்பதை அறியாதவனாய் அகங்கரித்துப்பேச, உடனே அவ்வக்கினிசொரூபமான பருவதத்தின் மத்தியிலேநின்ற பரமசிவத்திற்குக் கோபமுண்டாகி, காளவயிரவாவென்றோர் சப்தமுண்டாகிச் சூலகபாலத்துடனேயும் சிங்கப்பல்லும் கோர மீசைகளும் சிவந்தசடைகளுமாகக் காளவயிரவனெழுந்து அண்டங்களெல்லா நடுங்கும்படியாய் வாயினிடத்தும் மூக்கினிடத்துங் கண்களிடத்தும் அக்கினிப்பொறிகள் குபீர்குபீரென்று சிந்தத்தக்கதாய் தாவித் திடீரென்று குதித்தான். அப்படிகுதித்த காளவயிரவனைப்பார்த்துப்பரமேசுவரன் கூறுவார். ஓ காளவயிரவா, நீ இந்தபிரமனை ஜெயஞ்செய்துவரக்கடவை யென்றுசொல்ல, உடனே காளவயிரவனும் கோபாவேசங்கொண்டவனாய் பிரமனை வந்தெதிர்த்துப்போராடி ஒருவருக்கொருவர் தங்கள்காத்தினிடமாயிருந்த ஆயுதங்களால் நெடுநாள்வரையிற் போராடிக்கொண்டிருக்கிறபோது, காளவயிரவர் கடுங்கோபங்கொண்டு விகவசொரூபத்தோடும் எங்கும் வயிரவசொரூபமாய் சூலகபாலங் கையிற்கொண்டு நிற்பதை பிரமன்கண்டு பயந்து நடுநடுங்கி ஓடிப்போக எண்ணங்கொண்டு இடம்பார்க்கும்போது, பார்த்தவிடமெல்லாம் வயிரவசொரூபமாய்த் தோற்றுகிறதினாலே பின்னும்பயந்து ஆகாயமார்க்கத்தி லெழும்பியோட யத்தனிக்கையி லதுகண்ட வயிரவர் மகாகோபங்கொண்டு அவன்சிரத்தில் நடுமையாகவிருப்பதை இரத்தவெள்ளம் பெருகும்படியாய் தனதுகைநகத்தாற் கிள்ளிவிட அதனாலே பிரமதேவனுடைய பிராணனொழிந்து பூமியின்மேற் சாய்ந்தான். அவ்

போது அதை மகாவிஷ்ணுவானவன்கண்டு திடுக்கிட்டு இது வெல்லாம் பரமசிவத்தின் செயலால் நடந்ததென் றறிந்து தனது அஞ்ஞானத்தைநீக்கி அச்சத்தோடும் பரமசிவத்தைத் தோத்திரஞ்செய்ய, உடனே ஸ்ரீகயிலாசபதியாகிய பரமசிவன் வெள்விடையின்மீது பார்வதிசமேதராய் ககனத்திலெழுந் தருளிவந்து பூமியிலிருக்கும் பிரமதேவனை எழுப்பும்படி யாய்க் கருணைசுரந்து பிரமனைப்பார்த்தபோது, உடனே பிர மன் உயிர்பெற்றெழுந்து பரமசிவனைத் தோத்திரஞ்செய்து அவரதுபாததாமரையைச் சிரமேற்சூட்டி ஆனந்தக்கூத்தாடி னுன். இவ்வாறு வயிரவமூர்த்தியினது கரத்தால் வதஞ்செய் யப்பட்டு பரசிவத்தினுடைய அருளால் மறுபடியுமுயிர் பெற்று தனது அஞ்ஞானநீங்கித் தோத்திரஞ்செய்தமையால் இப்படிகொடுமையான தண்டனைசெய்கிறதே ஞாயமென்றும் இவ்வாறல்லாமல் என்போலியர்களுக்கு வேதசாஸ்திரபுரா ணங்களை ஓதுவதிற் பிரயோசனமில்லையென்றும் பிரமனுன வன்கூறி உமாமகேசனைப் பலவாறாய் தோத்திரஞ்செய்கை யில், அப்போது விடையூர்தியாகிய பெருமான் புன்சிரிப்போ டும் பிரமனையும் மகாவிஷ்ணுவையும் பார்த்துச்சொல்லு கிறார், வாருங்கள், அரிபிரமர்களே நீங்களிருவரும் வேதங்க ளாற் கூறப்பட்ட மொழியையுங் கேளாமல் அதிக்ரமித்து நடந்தமையால் துன்பத்துக்குள்ளாய் நின்றீர் இனிமேல் அச்ச முறுதீர்களென்று அபயாஸ்தங்கொடுத்துப் பின்பு வயிரவ ரைப்பார்த்து சந்தோஷத்தையடைந்தவராகியும் ஓ வயிரவா, நீ இந்தபிரமனுடைய சிரத்தைக்கிள்ளி அச்சிரம் உனதுகரத் திலேஒட்டிக்கொண்டிருக்கின்றமையாலும் அது இனியுன்னை மிகுந்த இம்சைபடுத்துமாதலாலும், அந்ததோஷநீக்கும்படி யாய் ஒருபாயஞ்சொல்லுகின்றோம், அதுயாதெனில், இந்த பிரமகபாலத்தை கையிலேயேந்தி உலகின்கண் ஒருவருடம் வரையில் ஐயமெடுத்துண்டுதிரிந்து, வருடமானபிறகு பூலோ கத்திலுண்டான தீர்த்தமெல்லாமாடிப் பிறகு காசிக்குச்செ ன்று கங்கையில் தீர்த்தமாடினுல் உன்னைப்பற்றிய பிரம்ம

ஹத்தியில் நான்கிலோர்பாகம்விலகும், மற்ற மூன்றுபாகமும் விலகும்படி யவணின்றும் பிரயாணப்பட்டு தென்றிசையிற் சேதுமத்தியிலோங்கும் கந்தமாதனகிரிச்சார்பில் நமது ஆலயத்துக்குமுன்பாக நம்மாலுண்டாகிய சிவதீர்த்தத்தில் மூழ்கினல் உடனே அந்தபிரம்மஹத்தி யுன்னைவிட்டு நீங்கிப்போம், இதற்குச் சந்தேகமில்லை யாதலால் பயப்படாமல் நாம்சொல்லியபடி செய்யக்கடவையென்று பரமேசுவரன் திருவாய்மலர்ந்தருளி அரிபிரமர்முதலிய தேவர்கள் துதிக்கும்படியாய் கயிலாசகிரிக் கெழுந்தருளினர். அப்பால் பிரமதேவனுடைய சிரங் கிள்ளப்பட்டு மறுபடியும் பரமசிவனால் உயிர்பெற்ற அந்த ஸ்தானத்துக்குப் பிரமாபுரமென்னும் பெயர்விளங்கச் செய்து அவ்வாறு வழங்கிவருகின்றபடியாலும் அவ்விடமிருந்த வயிரவர் பிரமகபாலத்தைக் கையிலேந்தி அவணின்றும்பிரயாணப்பட்டுச் சகலலோகங்களிலேயும்பிரவேசித்துப் பிச்சையெடுத்துச் சாப்பிட்டுக்கொண்டு திரிகிறபோது, பிரம்மஹத்தியும் அவர்பின்னே தொடர்ந்து திரியப் பரமசிவத்தின் கட்டளைப்படி ஒருவருடமானபிறகு அதன்பேரில் பூலோகத்திலுள்ள தீர்த்தமியாவுமாடிப் பின்னர் காசிக்குச்சென்று கங்கையிற் றீர்த்தமாடும்போது நீலகண்டமூர்த்தியின் கட்டளைப்படி பிரம்மஹத்தியில் நான்கிலோர்பாக மகன்று மற்ற மூன்றுபாகம் வயிரவரைப்பற்றி வாதிக்கும்போது வயிரவரும் பயந்து நடுங்கி அதிஜாக்ரதையோடும் காசியைவிட்டுப் பிரயாணப்பட்டுத் தென்றிசையிலோங்கும் கந்தமாதனபருவதச்சாரலில் சிவதீர்த்தக்கரைவந்துசேர்ந்து அத்தீர்த்தத்தில் மூழ்கியவுடனே வயிரவரைப்பற்றிய பிரம்மஹத்தியாவும் நீங்கினபடியால் தனதுகரத்தினிடமாயிருந்த சூலகபாலத்துடனே ஸ்ரீகயிலாசபதியைத் தோத்திரஞ்செய்ய, பரமேசுவரனும் விருஷபவாகனமீது பார்வதிசமேதராயெழுந்து வயிரவமூர்த்திக்குப் பிரசன்னமாய்ச் சொல்லுவார், வாராய் காளவயிரவனே, உன்னைப்பற்றியிருந்த பிரம்மஹத்தி நீங்கிவிட்டபடியினாலே நீ காசிக்குப்போய் அந்த திவ்யக்ஷேத்திரத்திற்றானே இந்தபிரம

கபாலத்தை ஒருபக்கம் ஸ்தாபனஞ்செய்து விடுவாயென்று விடையளித்துப் பரமசிவன் கயிலாசத்துக்கெழுந்தருளினர். அதன்பின் காளவயிரவர் மகாசந்தோஷத்துடனே கந்தமாதன கிரியினின்றும் நீங்கி காசிபட்டணம்போய்ச்சேர்ந்து சந்திர ஜடாதரமூர்த்தியினது ஆஞ்ஞையின்வண்ணந் தன்னிடமிருந்த பிரமகபாலத்தை அங்ஙன மோரிடத்தில் ஸ்தாபனஞ்செய்து விட்டு ஓர் தடாகமுமுண்டுபண்ணிப் பின் அந்தவிடத்துக்கு பிரமகபாலமென்றும் பிரமகபாலதீர்த்தமென்றும் நாமகரணஞ்செய்து தானும் அவ்விடத்திற்றனே வாசஞ்செய்து கொண்டிருந்தா ராதலால் அந்த காசிக்ஷேத்திரத்திலே ஓங்கும் பிரமகபாலதீர்த்தத்தில் யாவரேனுந் தத்தம பிதுர்களுக்குப் பிண்டமளிப்பார்களாகில் அவரைப்பற்றிய பாபங்களி யாவும் விலகுவதோடும் இகபரசாதனத்துக்கு மேதுவாவார் களென்றும், அப்பால் இந்தகந்தமாதனபருவதத்திலே விளங்குஞ் சங்கதீர்த்தமானது அநேககோடி பிரம்மஹத்திகளை யெல்லாம் விமோசனஞ்செய்து மிக மகிமையோடு மிருக்கின்றதென்றும் சூதமகாமுனிவர்சொல்ல, அதுகேட்ட நைமிசாரண்யர் மெத்தவுஞ் சந்தோஷமடைந்து, சுவாமி, இன்னுமப்பருவதச் சாரலிலோங்கும் புண்ணியதீர்த்தமகிமைகளை தேவரீர் திருவாய்மலர்ந் தருளவேண்டுமென்று வினவச, சூதமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

சிவதீர்த்தச்சருக்கம்
முற்றுப்பெற்றது.

---

## சங்கதீர்த்தச் சருக்கம்.

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்களே, வேதாகமங்களால் விளங்கப்பட்ட சேதுவின்மத்தியிலே இலகுங் கந்தமாதனகிரிச்சாரிபில் பொன்னுலக வாசிகளாகிய தேவர்களாலு மற்ற மூவர்களாலுஞ் சாற்றுதற்கரிய சங்கமா முனியென்றோர் முனிவர் தவஞ்செய்துகொண் டிருக்கிறபோது,

அத்தபோதனரால் உண்டாக்கப்பட்ட தீர்த்தமாதலால் அதற்குச் சங்கதீர்த்தமென்று பெயர்வழங்குவதோடும் அத்தீர்த்தத்தில் யார்மூழ்கினாலும் அவர்கள் மாதா பிதா குரு தெய்வங்களை நிந்தனைசெய்த தோஷமும் செய்நன்றிமறந்த தோஷமும் பஞ்சமாபாதகங்களும் துலைந்து புநிதராவார்கள். அதெப்படியென்றால், முன்னொருகாலத்தில் வேதகுலத்தி லுற்பவித்து வாசநாபனென்று சொல்லப்பட்ட ஓர் பூசுரன் குணசீலனாகவும் மாதுர் பிதுர்க்களினிடத்தில் அத்யந்தபிரீதி யுள்ளவனாகவும் பிரம்மக்கியானமுடையவனாகவும் யோகவானாகவும் தர்மசொரூபனாகவுமிருக்கு மவ்வேதியன் பிரமசர்யம் கிரகஸ்த்தம் வானப்பிரஸ்தம் இவைகளிலே ஒழுக்கமாய் நடந்து அநேககாலம் நிருவிகற்பசமாதியிலே அசைவற விருந்துவிட்டான். அவ்வாறிருக்கும்போது அவனுடைய சரீரத்திலே புற்றுவளர்ந்து மூடிக்கொண்டு அப்புற்றிலே அநேகம் புற்பூடுகள்முளைத்து பறவைகளுக்கிருப்பிடமாய் அப்பறவைகளின் எச்சத்தினின்று தங்கிய வித்துகளாலே அநேகவிருட்சசாதிகளுண்டாய் வளர்ந்து ஆகாசத்தையளாவிக்கொண் டிருக்கையில், அவற்றின்வேர்களில் மூடப்பட்ட புற்றுக்குள்ளே யோகத்திலிருக்கும் வாசனாபமுநி யிருந்ததெப்படி யிருந்ததெனில், பலாமரத்தின் வேரினின்றும் பூவுண்டாகிப் பின்னர் பிஞ்சாய் காயாய் பழமாய்க் கனிந்திருப்பதுபோல சரிகை கிரிகை யோகங்களினின்றும் பருவங்கடந்து கனிந்த ஞானப்பழமாய் மதியமிர்தமுண்டு சுகித்திருந்தார் அப்படியிருக்கும் வாசனாபனென்னு முநிவர்தன்னுடைய சரீரத்திலே புற்பூடுமுதலிய விருட்சங்களுண்டாயிருந்தும் தேகாபிமானமற்றுத் தன்னை மறந்து சச்சிதானந்தமயமாய் விளங்கிக்கொண் டிருப்பதை ஆட்கலோகத் திறைவனாகிய தேவராஜனறிந்து சப்தமேகங்களையும் வருவித்து, ஓ முகிலினங்காள், பூலோகத்திற் றபஞ்செய்துகொண் டிருக்கும் வாசனாபனுடைய தபத்தை நாமழிக்கவேண்டி யிருப்பதால் நீங்கள்போய் உங்களுடைய வலுக்கொண்டவரையில் கோரதாரையாய் மழை வருஷியுங்க,

னென்று சொல்லியனுப்ப, அதுபோல் அந்த சப்தமேகங் களும் மகாகெம்பீரத்துடனே ஆகாசவீதியெங்கு நிறைந்து இடைதெரியாமல் மறைத்துக் கருங்கடலுடைந்ததுபோல அண்டகடாகங்களும் வெடிக்கும்படியாய்ச் சத்தாடம்பரஞ் செய்து அடிக்கடி மின்னலுங் கெற்சிதமும் இடைவிடாமற் செய்துகொண்டு இராப்பகலாய் கல்மாரிபோற் சிந்தும்போ தும் புற்றுக்குள்ளேயிருக்கிற வாசனுபனுக்கு எவ்வளவுந் தோற்றுமல் உயுத்தரங்கத்தில் அத்திரங்களைச் சர்மாரியாய் வருஷித்தபோதினும் அவைகளைத் தாங்குகிற சுத்தவீரனுக் கொப்பாகவும், தேவேந்திரனு லேவப்பட்ட ஆவர்த்தமென் னுஞ் சோனைமாரிக்கு கிஞ்சித்தேனுமஞ்சாமல் தேவேந்திரனே தன்னைப் புட்பங்களா லர்ச்சிப்பதுபோலும் நீரிடி நெருப்பிடி முதலிய மேகங்களின் கெற்சிதமும் மின்னலும் அன்னவன் செய்யுந் தோத்திரம்போற் கருதியவராய், வாசநாபமுனிவர் சமாதியோகத்தி லசைவறவிருப்பதை இந்திரன்கண்டு ஆச் சரியமடைந்து, மகாமேருவைப்போ லசைவில்லாதிருக்கும் வாசநாபனது சரீரத்தை அசையும்படியாயும் நிட்டைநீங்கும் படியாயுஞ் செய்யவேண்டுமென அதிப்பிரியங்கொண்டவனாய், வாயுபகவானை வருவித்துத் தனது கருத்தையுரைத்து எவ் விதமேனும் அம்முனிவரனது நிட்டை கலையச்செய்யவேண்டு மென்றனுப்ப, அதுபோல் வாயுபகவானுனவன் யுகாந்தகால த்திலோங்கி எழுஞ் சண்டமாருதத்தினுங் கோடிபங்கு அதிக மாய் மேருமுதலிய அஷ்டகுலபருவதங்களும்நடுங்கி கலகலத் துப் போகத்தக்கதாக மாரியோடுகலந்து புவனமுழுதுங் காடாந்தகாரத்தைப்போற் கிட்டியடர்ந்து பேரிடியோடும் லோகத்திலுள்ள சமஸ்தஜீவராசிகளும் உயிரிழக்கும்படியாய் வருஷிப்பதோடுஞ் சண்டமாருதவேகத்தால் ஆகாசத்தையளா வித் தழைத்த விருட்சங்களையெல்லாம் வேரோடுகெல்லிக் கிள ப்பி பூமியைக்காணுமல் கொக்கைப்போற் பறக்கும்படியாயும், பருவதங்களைக்கிளப்பிப் பொடித்துக்காற்றேடுகாற்றுய் சமுத் திரத்திற்கலந்து நீடிய ஆழியினது ஆழத்தை அடைத்துக்

சேறுபடுத்தும்படியாயும், இடிகளின் கொடுமையால் லோகங்கள் பஸ்மீகரமாய்ப் போவதோடும் பாதாளலோகம்வரையில் பத்தல்பத்தலாய் வெடிக்கும்படியாயுஞ் செய்துவருங் கொடுமையால், வாசநாபமுநிவர்மீது வளர்ந்தோங்கிய விருட்சங்களுமொழிந்து, புற்றுமிடிந்து, பதுமாசனத்தின் சந்நிதிமுன் வைத்திருந்த கமண்டலமும் துகள்பட்டு அல்லோலகல்லோலப்படுத்துவதை அம்முநிவரது புண்ணியபலனுனதுகூடித் திரண்டு தருமதேவதையாய் ஓர் எருமைக்கடாவைப்போற் சொரூபமெடுத்து அண்டமுகடுகளெல்லாம் பொடிபடும்படியாய்த் தனது கொம்புகளையசைத்து வாலைச்சுழற்றி வீசுந்தன்மையால் மேகக்கூட்டங்களைந்து நடுங்கிகதிமாறி வாலினிடமிருக்கும் உரோமங்களுக்கு தயிலமிட்டதுபோற் கலந்துபோகவும், இடிகளை வாலினுற்றட்டிச் சுளுந்தின்பொறிபோற்றிசாதிசைகளிற் சிந்தும்படியாய்ச்செய்து, வாசநாபமுநிவர்மீது ஓர் திவலையேனுமணுகவொட்டாமல் தனதுவயிற்றின்கீழிருத்தி கெற்சனைசெய்து தருமதேவதையானவள் நிற்பதைக் கண்ட தேவேந்திரன் ஆச்சரியமடைந்து, இவன்றவத்தையழிக்க நம்மால் முடியாதென்று நாணமுற்றவனுய் மழைபொழியாமலிருக்கும்படியாய் மேகங்களுக் குத்தரவுசெய்ய, அதுபோல் மழைநின்றுபோனதைக்கண்ட பகடியமானது முனிவரைவிடுத்துப் பத்தடிதூரம் விலகிப்போம்போது, வெள்ளங்களினுல் பூமியைப்பிளந்து சேறுபட்டிருக்கும் வெடிப்புக்குள் எருமைக்கடாவாகவிருக்குந் தருமதேவதையினது நாலுகாலுஞ்சிக்கிப் புதைந்து பெயர்ப்பதற்கு ஏதுவில்லாமலிருக்க, வாசநாபனென்னுமுனிவர் உடனே தற்செயலாய் நிட்டைநீங்கிக் கண்ணைவிழித்துப்பார்த்து எங்கும் வெள்ளமயமாகவும் பூமிகள்வெடிப்புண்டும் விருட்சங்களும் அருகேயிருந்த பருவதங்களுமில்லாது திசாதிசையிற்போய்ப் படிந்திருப்பதை முநிவர்கண்டு ஆச்சரியங்கொண்டு, இதென்ன காரணம், நமதுபேரில் ஒருதிவலையேனும் படக்காணும், உலகம் கீழதுமேலதாய்ப் புரண்டிருக்கின்றதேயென்று ஞான

திருஷ்டியாற் பார்க்கையில், தேவேந்திரனாலடைந்த தீமை யென்றும் அதற்கு தருமதேவதை யாதொரு இடருமுறாமல் தன்னைப் பாதுகாத்ததென்றுந் தெளிந்து சுற்றிப்பார்க்கையில், பக்ஷிருவங்கொண்டிருக்குந் தருமதேவதையைக்கண் டெழுந் ததனருகேசென்று தருமதேவதையின்மீது சந்தோஷமடைந்து, ஓ தருமதேவதையே, நீ யென்னை இரட்சித்த பண்பால் நீடூழி வாழக்கடவையென்று சொல்லி, பின்பு சிலதூரத்திற் சாய்ந்திருக்கு மோர் விருட்சத்தடியிற் போய்ச்சேர்ந்து பழைய படி தவம்புரிய மேவுகையில், கண்ட தருமதேவதையானவள் மனம்வருந்தி நாம்செய்த நன்றியை யோசியாமலும் புதைபட்டிருக்கும் நம்மைவெளிப்படுத்தாமலும் போய்விட்டானெனக் கருதியும் நாம்செய்த கருமமென்றும் தன்னைத்தான் வெறுத்துக்கொண்டு அதிபிரயாசையோடும் புதைபட்டிருந்த கால்களைப் பிடுங்கிக்கொண்டு மெதுவாய் தேகவாதையோடும் மனமெலிந்து நடக்குஞ் செய்கையைக்கண்ட முனிவர், திடுக்கிட்டெழுந்திருந்து, தருமதேவதையினிடம் வந்து, ஓ தருமதேவதையே, பாவியாகிய நான் அஞ்ஞானத்தால் உனதுகால் புதைபட்டிருப்பதை யறியாமற் போய்விட்டபடியால் எனது குற்றத்தைப்பொறுத் தாட்கொள்ளுவாயென்று பலவாறாகத் தோத்திரஞ்செய்தும், அந்தோ, நான்செய்தபாபத்துக் கென் சொல்லுவேன், உலகின்கண் யாரொருவர் உபகாரஞ்செய்கின்றார்களோ அவர்களுக்கு அபகாரஞ்செய்பவர்கள் பிரம்மா விஷ்ணுமுதலிய தேவர்களது காலவளவுவரையில் ரவுரவாதி நரகத்துள் எழுந்திக் கரைகாணாதவர்களாய் துன்பப்பட வருமேயென்றும், செய்நன்றி மறந்தவர்களுக்கும், வேதாந்தசாஸ்திரங்களை உபதேசஞ்செய்த குருவுக்கும் மாதா பிதாவுக்கும் தீக்கடன் நீர்க்கடன் முதலிய கிரியைகளைச்செய்யாத பாவிகளுக்கும் உண்டாயிருக்கிறபாதகம் அவருடைய உயிரை மாய்த்துக்கொண்டாலொழிய வேறே அதற்கோர் பரிகாரங் [illegible] சொல்லவில்லையே, ஆதலால் நம்முடைய உயிரை மாய்த்துக்கொள்வதே நமக்குப் பரிகாரமென்று நினைத்து, அதி

தீவிரமாய் அவணின்றும்நீங்கி ஓர் பருவதஉச்சியிற்போய் தலைகீழாய் பூமியில்விழுந்து மரணமடைவோமென்று போகும்போது, தருமதேவதையான மகிஷம்கண்டு, அக்கணமே தனதுசொரூபத்தையெடுத்து வாசநாபனென்னு முநிவனுக்கு முன்பாகவந்துநின்று, வீராய் வாசநாபனென்னு முநிவனே, நானே தருமதேவதை, நீயேன் இப்போது வீணாய், செய்நன்றி மறந்தமையால் இவ்வுயிரை வைக்கப்படாதென்று நினைந்து மடியப்போகின்றாய், வேண்டாம், உன்னையறியாமல்வந்த அபசாரத்தை நீககிக்கொள்ளும்படியாய் நானோருபாயஞ் சொல்லுகின்றேன், அது யாதெனில், பரதகண்டத் தென்றிசையிற் சேதுமத்தியிலோங்கும் கந்தமாதனகிரிச் சார்பில் முன்னோர் காலத்தில் சங்கமாமுநி என்பவராலுண்டாகிய சங்கதீர்த்தமென்று ஓர் தீர்த்தமிருக்கின்றது, அத்தீர்த்தத்திலே நீபோய் மூழ்கி அங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீராமநாதனைத் தெரிசனஞ்செய்து வருவையேயாகில் உனது பாவங்களெல்லாம் விமோசனமாமென்று தருமதேவதைசொல்ல, அவ்வுரை கேட்ட வாசநாபன் மகாசந்தோஷமடைந்து, நான்செய்த அபசாரங்களை யெண்ணாமல் இப்போது எனக்கு உபகாரஞ்செய்தனையேயென்று பணிந்து அநேக உபசாரவார்த்தைசொல்ல, அதை தருமதேவதைகேட்டு மகிழ்ச்சியடைந்து, நான் யாருக்குந் தருணதருணங்களிலே உபகாரஞ்செய்வதே என்னுடைய உண்மையாதலால் நான்கூறியவண்ணம் கந்தமாதனகிரிச்சார்பிலே விளங்குஞ் சங்கதீர்த்தத்திற்குப்போய் சங்கற்பவிதியின்படி மூழ்கிவாவெனச்சொல்ல, அவ்வார்த்தையின்படியே வாசநாபனென்னுமுனிவன் அவணின்றும் பிரயாணப்பட்டு தென்றிசையிலோங்கும் கந்தமாதனகிரிச்சார்பிலே விளங்குஞ் சங்கதீர்த்தத்தில்வந்து மூழ்கியவுடனே, நன்றிமறந்தபாதகமவனை விட்டகன்று அந்த கந்தமாதன பருவதத்திற்றானே அனந்த கோடிகாலந் தவஞ்செய்துகொண்டிருந்து மோட்சசாம்பிராச்சியமாகிய முத்திவீட்டைப்பெற்றார். ஆதலால், அத்தீர்த்தத்தினுடைய பெருமையை யாவரால் சொல்லமுடியுமென்று

சூதமாமுநிவர்சொல்ல, அதைக்கேட்ட நைமிசாரண்யர் மெத்தவுஞ் சந்தோஷமடைந்து, முநிவரைநோக்கி, சுவாமி, இன்னம் அவ்வரைச்சார்பிலிருக்கும் தீர்த்தங்களின் மகிமையை அடியோங்களுக்குத் திருவுளம்பற்றவேண்டுமென்று கேட்க, சூதமுநிவர் சொல்லத்தொடங்கினர்.

சங்கதீர்த்தச்சருக்கம்
முற்றுப்பெற்றது.

---

## முத்தீர்த்தச்சருக்கம்.

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முநிவர்களே, முன்னொருகாலத்திலே பிரம்மகுலத்தில் உற்பவித்து இரயுக்குவனென்று பெயர்படைத்த ஓர் முடவன், ஒற்றைமாடுகட்டிய வண்டியில் ஏறிச் சஞ்சாரஞ்செய்துகொண் டிருப்பவன், கந்தமாதனபருவதச்சார்பிலே தவஞ்செய்துகொண்டு தனது அஞ்ஞானத்தைநீக்கி நிர்மலனாய் லோகத்திலுள்ள சகலதீர்த்தங்களினுமாட எண்ணமுற்றவனாயினும் தன்னால் நடந்துபோவதற்குச் சத்தியில்லாமையால் தானிருந்த கந்தமாதனத்திற்றானே பஞ்சாக்கினிமத்தியில் நின்று அன்னபானாதிக ளில்லாமல் சருகு ஜலபட்சணங்கள்செய்து நிட்டைசெய்து வருபவனுக்கு தேகத்தில் வறட்சிகொண்டு, எந்நேரமுஞ் சொறிந்துகொண்டேயிருக்குந் தன்மையால் இரத்தம்பெருகி வருவதை நகத்தினாலெடுத்துத் தெறித்தும், மனத்தை வேறுபடுத்தாமல் பிரமசொரூபத்தினின்றும் அகலாமல் தவஞ்செய்துவருபவன், கங்கை யமுனை கயை இம்மூன்றுநதிகளிலுந் தீர்த்தமாட எண்ணங்கொண்டவனாய், தன்னிடத்திலிருக்குஞ் சிறியவண்டியானது நதிகளிலும் காடு மலை வனம் வனாந்தரங்களிலும் போகமாட்டாதே, என்செய்வோம், அம்மூன்றுநதிகளையும் இவ்விடத்திற்றானே வருவித்துக்கொள்ள வேண்டுமென்று தத்தசத்துவத்திலிருந்து தவஞ்செய்து சின்மயானந்த சொரூ

யத்தையடைந்து ஒருமந்திரத்தைஜெபித்து கங்கை யமுனை கயை என்னு மூன்று தீர்த்தங்களையும் மனதிற் சிந்தித்த வுடனே அம் மூன்றுநதிகளும் பூமியைப்பிளந்து பாதாள லோகமார்க்கமாக கந்தமாதனகிரிச் சார்பிலே விளங்கு மோர் பூஞ்சோலையிற் கீட்டிசையைநோக்கிக் கண்களைமூடித் தவஞ் செய்துகொண் டிருக்கும் இரயுக்குவனென்னு முநிவனது தேகமெல்லாங் குளிரும்படியாய் அலைகளைவீசிச் சிதறி ஆடம் பரஞ்செய்து சொல்லும், வாருமையா முநிசிகாமணியே, நாங் கள் மூவரும் உமதுதவப்பெருமையாற் பிரயாணப்பட்டு வந்தோ மாதலால் இனி உமதுசித்தத்தின்படி நிறைவேற்றிக் கொள்ளுமென்று சொல்ல, அப்போது இரயுக்குவமுநிவன் கண்ணைவிழித்துப்பார்த்து நதிகளைக்கண்டு சந்தோஷமடைந்து, நனிகாதலோடும் அம்மூன்றுநதிகளுக்கும் அர்க்கியபாத்திய சோடச உபசாரங்களுஞ்செய்து மந்திரவித்தாய் மகா நிவேதனங்களுங் கொடுத்து அவற்றில் மூழ்கியெழுந்திருந்து சந்தியாவந்தன நியமநிட்டைகளியாவுமுடித்து கங்கையமுனை கயை என்னு மூன்று நதிகளையுந் தோத்திரஞ்செய்கையில், அம் மூன்றுநதிகளுஞ் சந்தோஷத்தையடைந்து, இரயுக்குவனைநோக்கி, ஓ முநிவனே, உமக்குவேண்டிய காரியமென்ன வென்றுகேட்க, அதுகேட்ட முநிவன், ஓ தாய்மார்களே, நீங் கள் மூவரும் இவடம்வாசஞ்செய்திருந்து என்னைப்போன்ற பாபிகளுக்கு உங்களுடைய பரிசம்பட்டமாத்திரத்தில் அவர் களைப்பற்றியிருந்த கர்மமியாவுமகன்று புநிதராகும்படியாகிய வரந் தரவேண்டுந் தாய்மார்களேயென்று வினவ, அது கேட்ட மூன்றுநதிகளும் இரயுக்குவமுநிவன் தவப்பெரு மைக்கு அஞ்சித் தடுக்காதவர்களாய் சந்தோஷமடைந்து, ஓ முநிசிகாமணியே, உமதுகருத்தின்படி நாங்கள் மூவரும் இவ்விடத்திலிருந்து எங்களிடத்தில் எவ்விதமாகிய பாபிகள் வந்து தீர்த்தமாடியபோதும் அவர்கள் கருமமகன்று புண் ணியராக விளங்ககடவரென்று வாக்களித்து, பின்பு மாதுடருவங்கொண்டுவந்த மூன்றுபெண்களும் நதிகளில் மூழ்கி

மறைந்தார்கள். அதுமுதல் அம்மூன்றுநதியினும்வந்து தீர்த்தமாடுகிறவர்களுக்கு அஞ்ஞானமுதலிய கருமங்களகன்று பிறவிநோய்கெட்டாதவர்களாய் சைதன்யத்திற் கலப்பார்களாதலால் செப்புதற்கரிய இரயுக்குவமகாமுனிவனது தபோமகிமையால் மூன்றுநதிகளையும் வருவித்து திரிகாலமும் அவற்றில் தீர்த்தமாடிச் செய்விதியாவுமுடித்து தவஞ்செய்து கொண்டு வருகிறபோது, நந்தனென்னும் ஓர் வேந்தனுடைய புத்திரனாகிய சானசுருதியென்பவன் மன்னுயிர்களைத் தன்னுயிர்போற் பாவித்துப் பாதுகாத்துவருவதோடுங் குடிகளிடத்தில் ஆறிலொருகடமைவாங்கி நீதிவழுவாது இராச்சியபரிபாலனஞ் செய்துவருபவன் கந்தமாதனச்சார்பில் விளங்கும் கங்கை யமுனை கயை என்னு மூன்றுநதிகளிலுந் தீர்த்தமாடி தனது அஞ்ஞானத்தை யகற்றி மெய்ஞ்ஞானத்தைப் பெற்று பிரமசொரூபத்தை யடைந்தான். அது எப்படியெனில், இராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டிருக்குஞ் சானசுருதியென்பவன் மகா தருமநீதியோடும் சகலஜீவர்களுக்கு மாதரவாய்த் தன்னுடைய ராச்சியத்தில் அன்னசத்திரங்களமைத்து பிரமக்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னு நான்கு வருணத்தவர்களுக்கும் கைத்தல் புளித்தல் காத்தல் உவர்த்தல் துவர்த்தல் தித்தித்தலென்னும் அறுசுவையோடுங்கூடிய பதார்த்தங்களோடும் அன்னதானஞ் செய்துவருவதோடுந் தன்னுடைய தேசமுழுமையும் சிவாலய விஷ்ணுவாலயங்களில் பிரம்மோற்சவ நித்யோச்சவங்களும் நடாத்தியும் பூசுரர்களால் யாகாதியெக்கியங்களும் வேதபாராயணங்களுஞ்செய்து நாடோறும் வேள்விச்சாலையிலிருந்து மறைவிதியிற்கூறிய தருமங்களில், ஆதுலர்க்குச்சாலை, ஓதுவார்க்குணவு, அறுசமயத்தார்க்குண்டி, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டநல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவுவளர்த்தல், மகப்பால்வார்த்தல், அறவைப்பிணஞ்சுடுதல், சுண்ணம், நோய்மருந்து, வண்ணான், நாவிதன், கண்ணாடி, காதோலை, பெண்போகம், தலைக்கெண்ணெய், கண்மருந்து, பிறர்துயர்காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம்

தடம், விலைகொடுத் துயிர்காத்தலென்னு முப்பத்திரண்டு தருமங்களையும் வழுவற நடாத்திவருகிறபோது, தனது செங்கோலுக் குட்பட்ட தேசமுழுமையும் நான்கு வருணத்தவர்களும் தத்தம் வீட்டில் அடுப்புமூட்டிப் பன்னிரண்டு வருடகாலமாகியும் அவரவர்களுக்கு யாதுங்குறைவில்லாமல் அன்னதானஞ் செய்துவருகையில், அவ்வரசனால் நடாத்திவருந் தருமமானது மூன்றுலோகத்திலும் மேம்பாடுகொண்டு எங்கும் வேந்தனது பெருமையைக் கொண்டாடும்படியாகிய புகழ்ச்சியை பூலோகவாசிகளும் தெய்வலோகத்தில் வசிக்கும் தேவேந்திராதி பெரியோர்களும் முனிவர்களும் ஆகாசவாணியும் பூமிதேவியும் கண்டு அரசன்மீது சந்தோஷமடைந் திருக்கும் நாளையில், சானசுருதியென்னும் வேந்தனுடைய நகரத்தை ஆடகலோகவாசிகளாகிய தேவர்களும் தேடுதற்கரிய முனிவரர் சித்தர்களும் கருடகாந்தர்வ சித்தவித்யாதரர்களும் பார்க்கவேண்டி ஆவல்கொண்டவர்களாய், அன்னப்பட்சியைப்போலுருவங்கொண்டு மண்டலத்துள்ள மன்னர்களினது மகுடமுடிகளை இடறத்தக்க வீரகண்டாமணி தரித்த கால்களையுடைய சானசுருதிவேந்தன்வாழும் பட்டணத்தின் பூங்காவனங்களிலோங்குந் தாமரைத்தடாகங்களில் வந்திரங்கி, அவற்றிற் புட்பித்திருக்கு மலர்த்தாதுகளை யருந்தி விளையாடிப் பகற்காலத்தைப்போக்கி, அன்று இராப்போதுவந்தகாலையில் அப்பட்டணத்தை யாளுஞ் சானசுருதியென்னும் வேந்தன் வசந்தகாலமாதலாலும் பூர்ணோதயமாகிய சந்திரன் பிரகாசமாயிருப்பதாலும் தான் பூங்காவனத்தில் ஆகாயத்தை யளாவியோங்கும் மங்களவாசமாதலிற் பின்னுதற்கரிய சந்திரகாந்தமணிமேடையிலே தனதுபட்டத்துத் தேவியோடுஞ் சேர்ந்து பேசிக்கொண் டிருக்கையில், அப்பூங்காவனத்தில் அன்னவுருவங்கொண்டு வந்திருக்கும் ஆடகலோகவாசிகளாகிய தேவர்கள் தமது லோகத்தைச் சேரவேண்டி அப்பூங்காவனத் தடாகத்தினின்றும் நீங்கிக் ககனமார்க்கத்தி லெழும்பும்போது, வேந்தனைக்கண்ட அப்பட்சிகள் தமது கூட்டத்துக்குத் தலை

மையாக விருக்கும் இராஜபட்சியைநோக்கி, ஓ அரசே, இவ் வேந்தன் தயாளுவாதலால் இவனைச் சந்தித்துப்போவதே சுகுணமென்றுரைக்க, அவ்வார்த்தையைக்கேட்ட ராஜபட்சியாகிய இந்திரன் மன்னனுக்கு அநுக்கிரகஞ்செய்ய மனசில் நினைத்துப் பின்னுந் தன்னினங்களாகிய அன்னங்களைப்பார்த்துக் கூறுகின்றது, ஓ அன்னங்களே, என்னவார்த்தை சொன்னீர்கள், இவ்வேந்தன் என்ன நற்குணத்தையுடையவன், என்னதவஞ்செய்தான், எந்தபெரியோர்களுக்கு உபகாரஞ் செய்தான், தான் மறுபிறப்பிற் சுகத்தையடையவேண்டிச் செய்யுந் தருமமேயன்றி மோட்சசாம்பிராச்சியத்தை விரும்பவில்லையே ஆதலால் இத்தன்மைவாய்ந்தவனை யாம் எவ்வாறு சந்திப்பது, உணராமற் சொல்லுகின்றீர்களேயென்று இராஜபட்சி கூறியதன்றியும் பின்னுஞ்சொல்லும், ஓ இனங்களே, பூலோகத்திற்பிறந்து அஞ்ஞானநிவர்த்திசெய்து மனவாக்குக் கெட்டாத சுயஞ்சோதியாய் விளங்குஞ் ஜகதீசனது பாதநீழலிற் குடிபுகவும், சிதாகாசத்தைக் கலக்கவும் எண்ணங்கொண்ட ஓர் புண்ணியபுருஷன் இவ்வுலகிண்கண்ணேயுங்கும் பாதகண்ட தெட்சணபாகத்தில் ஸ்ரீராமமூர்த்தியாற் கட்டப்பட்ட சேது மத்தியிற் கந்தமாதனகிரிச்சார்பில் தவஞ்செய்துகொண்டிருக்கும் புண்ணியனை நம்போலியர் சந்திக்கலாம். அப்படி அவனை பிரயாசையோடு சந்தித்தபோதினும் பெயருண்டாம், அன்றியும் அவன் எவ்விதமானவனெனில், இரண்டுகாலுமில்லாத முடவன், இரயுக்குவனென்னும் பெயர்படைத்தவன், முடவனாகவிருந்தும் கங்கை யமுனை கயை என்னு மூன்றுநதிகளையுந் தனது தவப்பேற்றால் தானிருக்குங் கந்தமாதனகிரிச்சார்பில் வருவித்து, அவற்றில் தீர்த்தமாடி, அவைகளை அங்கிருந்து இன்னும்வந்து அத்தீர்த்தத்தில் மூழ்குபவர்களுக்கு இட்டசித்தியாகும்படியுங் கேட்டுக்கொண்டசாது, அன்னோனது தவத்திலே பதினாயிரத்திலோர்பங்கு மிவன்செய்தறியான், ஆதலால் இவனை யாம் சந்திக்கவேண்டியதில்லையென்று சொல்லி அசட்டைசெய்து யாவுமொருங்குசேர்ந்து தெய்வ

லோகம்போய்ச்சேர்ந்து தத்தம் சொரூபத்தையெடுத்து அவ ரவர்கள் இருப்பிடம்போய்ச் சேர்ந்தார்கள். பின்னர் இவ்வித மாய் அந்த அன்னப்புட்கள் கூறிச்சென்ற வார்த்தையைக் கேட்டிருந்த சானசுருதிராஜன் வியாகுலங்கொண்டு சோர்ந்து துக்கக்கடலுள் மூழ்கிப் பெருமூச்செறிந்து யோசித்து, இவ் வன்னப்பட்சிகள்சொல்லிய இரயுக்குவமாமுனியை நாம்போய்க் கண்டு சரணகதியடைந்து அவராலே நாம் கதிபெறவேண்டு மல்லது இவ்விதமாய் நாம் செய்யுந் தருமங்களால் யாதும் பிர யோசனமில்லை, அந்தோ, ஆகாயத்தில் உலாவும் பறவையினங் களுக்கு முதன்மைபூண்ட அன்னங்கள் சொல்லிச் சென்ற வார்த்தையே சரியாம், ஏனெனில், நாமிதுபரியந்தஞ் செய்த தானத்தில் என்னதேடிக்கொண்டோம், ஒன்றுமில்லை யாத லால், மேலோர்களைக்கண்டு சேவைசெய்து அவர்களுடைய அநுக்ரகத்தைப் பெற்று அனித்ய சரீரத்தை யெடுக்காமல் மோட்சசாம்பிராச்சியத்தை யடையவேண்டுமென்று இராப் போதெல்லாம் யோசித்திருந்தவனாய், அருணோதயமானவுட னே எழுந்து, காலைக்கடன்முதலிய நியமநிட்டைகளை முடித்து, தேவேந்திரனது இரதசாரதியாகிய மாதலிக் கிணையாகிய தனது தேர்ப்பாகனை அழைத்துக்கூறுவான். வாராய் எனது வலவனே, நீ நமதுரதத்திலேறி தெட்சணபாகத்திலோங்குங் கந்தமாதனகிரிச் சார்புக்குப்போய் அவண் விளங்கும் வனங் களிலேனுஞ் சோலைகளிலேனும் திரிநேத்திரதாரியாகிய பரம சிவத்தை இதயகமலத்தி லிருத்தித் தவஞ்செய்துகொண் டிருக்கும் இரண்டுகாலுமில்லாத முடவராகிய ஓர் முனிவர் அவடமிருப்பதும் இல்லாததுங்கண்டு, அப்படி யிருப்ப ராயின், அவரைக்கண்டு வணங்கி வார்த்தையாடி, அவரது பெயரையுந் தெரிந்துகொண்டு, அதிவிரைவி லிவடம்வந்து சேருவாயென்று வேந்தன் கட்டளையிட்டதைக்கேட்ட தேர்ப் பாகன், அவ்வாறே இரதாரூடனாய் பட்டணத்தைவிட்டுப் பிரயாணப்பட்டு, கரடு மலை வனம் வனாந்தரம் காநுறுமுத லிய நதிகளும் பதிகளுந் திவ்யக்ஷேத்திரங்களுங்கடந்து, சேது

மந்திரிலோக்கும் கந்தமாதனகிரிச் சாரலிற் சேர்ந்து, அவ ட்த்திலுள்ள வனங்களிலும் பூங்காவனங்களிலும்காவுகளிலும் மலைமுழைவுகளிலும் தடாகக்கரைகளிலும் அரசன்சொல்லிய அடையாளப்படி ஒருவரையுங்காணுமல் துன்பமடைந்து திரிந்து பார்த்துக்கொண்டுவருகிறபோது, அங்ஙனமோர்வண்டியிலுட்கார்ந்துகொண்டு தீர்த்தமாடவேண்டிப் பிரயாணப்பட்டு வருகிற இரயுக்குவரென்னு முனிவரைக்கண்ட சாரதியானவன் சந்தோஷமடைந்து, இரதத்தைவிட்டுக் கீழேயிறங்கி மகா பக்திவிநயத்தோடும் முனிவரை அஷ்டாங்க பஞ்சாங்க திரியாங்களையும் பணிந்தெழுந்து, இருகரங்களையுஞ் சிரமேற் கூப்பி அஞ்சலியஸ்தனுய்ப், பலவாறுகத் தோத்திரஞ்செய்து சுவாமீ, தேவரீரைத் தரிசித்தபோதே கடையேனைப்பற்றிய கர்மமியாவுமகன்றன, ஆதலால் தேவர்சித்தங்கனிந்து நமது நாமகரணத்தைப் புலப்படுத்தவேண்டுமென்று கேட்க, அப்போது முனிவரர் வலவனைப்பார்த்து, அப்பா, எனதுபெயர் இரயுக்குவனென்று சொல்லுவார்களென்று புன்சிரிப்புடனே சொல்ல, அவ்வார்த்தையைச் சாரதியானவன்கேட்டு, சுவாமி, மெத்தவுங் களிப்படைந்தேன், அடியேன் போய்வருகிறேனென்று விடைபெற்று, இரதமேறி, அவணின்றும் பிரயாணப்பட்டு, வாயுவேகத்திலுங் கொடியவேகமாய்த் தேரை நடாத்திப் பட்டணம்வந்துசேர்ந்து, தனது இராஜனைக்கண்டு, வணங்கித், தான்போய்வந்த சங்கதிக ளியாவு மாதியோடந்தமாய்த் தெரிவிக்க, அதைக்கேட்டவேந்தன் மெத்தவுஞ் சந்தோஷமடைந்து, முனிவரைக்கண்டு தரிசித்துநற்பெறவேண்டுமென்னுங் காதல்கொண்டவனுய், இராச்சியமுதலிய பண்டபண்டாரங்களையெல்லாம்வெறுத்து அம்முனிவருக்கு காணிக்கையாக காமதேனுவுக் கொப்பாகிய ஆயிரம் பசுக்களும் ஒரு பாரந் தங்கமும் நவரத்தினகசிதமாகிய ஓர்தேரும் இட்டப் படுத்திக்கொண்டு, இராச்சியமுதலியயாவும் மந்திரிகள்வசப் படுத்திவிட்டு, முனிவருக்குக் கொண்டுபோகும் காணிக்கை வஸ்துக்களை முன்னேநடத்தி, இராப்பகலாய் காடு மலை முத

விய யாவுங் கடந்து சேதுமத்தியிலேயாங்குங் கந்தமாதனகிரிச் சார்பில் கங்கை யமுனை கயை என்னு மூன்றுநதிகளும் விளங் குந் தீர்த்தக்கரையில் தவஞ்செய்துகொண்டிருக்கும் முநி வரைக் கண்டு, இரதத்தை விட்டிழிந்து, தான்கொண்டுவந்த காணிக்கைகளை முநிவரர்முன்னிருத்தி, அந்தரங்கபக்தியோ டுஞ் சாஷ்டாங்கனுப்ப் பணிந்து எழுந்து கைகட்டி யெதிர் நின்று, பலவாறுகத் தோத்திரஞ்செய்து, சுவாமி, அடியேன் கொண்டுவந்த காணிக்கைகள் அற்பமாயினுந் தேவரீர் திரு வுளங்கனிந்து ஒப்புக்கொள்ளவேண்டுமென்றும், அடியேனையு மாட்கொள்ளவேண்டுமென்றும, பக்திவிநயத்தோடு கூறிப் பணிந்துநிற்கும் பார்த்திபனைக்கண்ட முநிவர் அகமகிழ்ந்து, முகமலர்ந்து, ஜகபதியைப்பார்த்து, வாருமையா வேந்தே, இந்த அற்பமாகிய பதார்த்தத்தை யெங்குத்தேடினுய், நித்ய மல்லவே, அநித்யமாயிற்றே, மேலும் நாம் கனகக்கடலுட் டோய்ந் திருக்கின்ரேம் அக்கடலில் ஓர் திவலைக்குமிணையில் லாத விதனை விரும்பினுற் றன்பர்த நமாதலால் யான்வேண் டேனென்று கூறியதைக்கேட்ட வேந்தன், சுவாமீ, தேவரீர், நாயேனுக்கு கடாக்ஷிக்கும் நித்பானந்தவஸ்துவுக்கு அணுவிற் கோடிபங்கி லோர் பங்குக்குமிணையில்லாதாயினும் எளியேன் தந்தவையை ஒப்புக்கொண்டு இரட்சிக்க வேண்டுமென்று வணங்கித்தோத்திரஞ்செய்ய, அப்போது இரயுக்குவர் மன மகிழ்ந்து, வேந்தன்கொண்டுவந்த காணிக்கைகளை அவணை மூந்தருளியிருக்கும் ஸ்ரீராமநாதக்கடவுளுக்கு அர்ப்பிதஞ்செய் தவராய், வேந்தனைநோக்கி, ஓ வேந்தே, உலகின்கண் யா ரொருவர் இல்லறதன்மத்திலிருக்கும்போது பாபபுண்ணிய மென்று சொல்லப்பட்ட இரண்டையும் நினையாமற் பரிசுத்த மாகிய மனத்தோடும் இருக்கின்றவர்களே புண்ணியராவர், மேலும் ஞானமோட்சத்தையும் பெறுவார்கள், ஆதலால் நீ அந்த இரண்டுகாரியத்திலும் இச்சையுடையவனுகவிருந்தும் நம்மைவந் தடுத்தமையால் இக்கந்தமாதனத்திலே விளங்கும் கங்கை யமுனை கயை என்னு மூன்று தீர்த்தங்களிலும் மூழ்கி

வினையகன்று நிர்மலவஸ்துவை யடைவாயென்றுசொல்லி, வேந்தனுக்கு ஏகாட்சரத்தை யுபதேசித்தருளினர். உடனே சானசுருதிவேந்தன் மகாசந்தோஷத்தோடும் கங்கை யமுனை கயை யென்று சொல்லப்பட்ட மூன்றுநதிகளிலுந் தீர்த்த மாடி, அஞ்ஞானத்தைப்போக்கி, பிரபஞ்சவாழ்க்கையைச் சொற்பனம்போற் கண்டு தெளிந்தவனாய், நேமநிஷ்டையை முடித்துக்கொண்டு, தனதுகுருவாக எழுந்தருளியிருக்கும் இரயுக்குவமாமுனியைவணங்கி தோத்திரஞ்செய்து, அவருடனே தானுமிருந்து, அவர்கட்டளையின்படி மௌனமந்திரத்தை தியானஞ்செய்து, ஒருவராலு மடையப்படாத ஞானசாகரத்திலமுழ்ந்தி, பேரின்பத்தைபடைந்து கந்தமாதனத்திற்றனே வாசஞ்செய்துகொண் டிருந்து, பிரமசொரூபத்தை யடைந்தா ராதலால் இத்தன்மையாகிய மகிமையைப்பெற்ற கங்கை யமுனை கயை என்னு மூன்றுதீர்த்தத்துக்குச் சமீபமாய்க் கோடிதீர்த்தமிருக்கின்றது, அத்தீர்த்தத்தினது பெருமையைச் சொல்லுகிறேன் கேளுங்களென்று சூதமகாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

முத்திதீர்த்தச்சருக்கம்
முற்றுப்பெற்றது.

---

## கோடிதீர்த்தச்சருக்கம்.

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முநிவர்களே, இவ்வுலகின்கண் ஓங்கும் இப்புண்ணியதீர்த்தமானது சிறப்போங்கிய கோசலதேசத்தை அரசாட்சிசெய்துவந்த தசரத மகாராஜகுமாரனுகிய ஸ்ரீராமசந்திரமூர்த்தியினது கரத்தினிடமாக விளங்கும் கோதண்டமென்னும் விற்கோடியால் உண்டாக்கிய தீர்த்தமாதலால் கோடிதீர்த்தமென்று விளங்கப்பட்டு, புவனசராசரத்திலுள்ள புண்ணியராகி சகலத்ராளுக்கும் உற்ற ஆகாமியசஞ்சித பிராரத்வவினைகளைப்போக்கிச்

சகலலோகங்களும் புகழும்படியாய் இஷ்டகாமியங்களையும் மோட்சகாமியங்களையுங்கொடுத்து மகிமையோடுமிருக்கு மித் தீர்த்த மெவ்வணமுண்டாயிற்றெனில், மிதிலாபுரிக்கிறைவனாகிய ஜனகமகாராஜனுக்குப் புத்திரியாகவாய்ந்த ஜானகியை இலங்கைவேந்தன் வஞ்சித்தெடுத்துக்கொண்டுபோய்ச் சிறையிட்டிருந்த தீங்கால் அப்பாதகனுதி யரக்கப்பூடுகளை, பாநுகோடி கிரணம்போலோங்கும் ஸ்ரீராமசந்திரமூர்த்தியானவர் பற்றறக்காய்ந்து பஸ்மீகரப்படுத்தி அவணின்றுஞ் சீதாபிராட்டியுடன் கந்தமாதனகிரிச்சார்பில் சிவலிங்கபிரதிஷ்டைசெய்து அச்சிவபெருமானுக்கு அபிஷேகஞ்செய்யவேண்டிப் புநிதமாகிய தீர்த்தத்தின்பொருட்டுத் தன்னுற் பிரதிஷ்டை செய்திருந்த இராமலிங்கத்துக்கருகில் தனது கரத்தினிடமா விளங்குங்கோதண்டமென்னும் வில்லை பூமியிலிருத்தி, பகீரதியென்னுங் கங்கையை அவண்வரும்படியாக தியானஞ்செய்து, ஊன்றிய தனது சிலைக்கோடியை எடுத்தமாத்திரத்தில் அவ்வழியினின்றுங் கங்கையானவள் பாதாளவாகினியாய்ப் புறப்பட்டு திவ்யவாசத்தோடும் வந்து பிரவேசித்தபோது, அதைக் கண்ட இராமமூர்த்தி மெத்தவுஞ் சந்தோஷமடைந்து, உடனே இராமலிங்கத்துக் கபிஷேகஞ்செய்து, அக்கடவுளால் அநேக வரங்களைப்பெற்று, அங்குள தீர்த்தமியாவற்றினுந் தனதுதேவிமுதலிய யாவரோடுஞ் சேர்ந்தமூழ்கிச், சகல வானரவீரரோடுஞ் சேனைகளோடும் பிரயாணப்பட்டு அயோத்தியா பட்டணம்போய்ச்சேர்ந்து, பட்டாபிஷேகஞ்செய்துகொண்டு, தேவியோடுங்கூடி இராஜரீகஞ்செய்துவந்தார். ஆதலால் அந்தராமமூர்த்தியினது விற்கோடியையூன்றி யுண்டாகிய தீர்த்தமானது சொர்க்க மத்ய பாதாளமென்னு மூன்று லோகங்களும் புகழத்தக்கதாய் தீர்த்தமாடினவர்களது பிறவித்துன்பத்தைநீக்கி முத்திவீட்டைத்தரும், இத்தீர்த்தத்தில் மூழ்கியபின் வேறேதீர்த்தத்தில் மூழ்குவார்களாகில் அவர்களுக்கு யாதும் பிரயோசநமிராதென்றசொல்ல, அதுகேட்ட நைமிசாரண்யர்கள் ஆச்சரியமடைந்து, சூதமுநிவரைப்பார்

த்து, சுவாமி, தேவரீர் வியாசபகவானுடைய வாக்கியத்தின்படி பதினெண்புராணங்களையுமறிந்து எங்களைப்போன்றவர்களுக்கு போதித்து வருவதில், தீர்த்தமகிமையென்றும் மூர்த்திமகிமையென்றும் தலமகிமையென்றுஞ்சொல்லிய இம்மூன்றில் ஒன்றுக்கொன்று மேன்மையாய்ச்சொல்லிவந்து, இப்போதுசொல்லிய இக்கோடிதீர்த்தத்தில் மூழ்கியவர்கள் பிறகு வேறே தீர்த்தமாடினால் ஒருபிரயோசனத்தையு மடையமாட்டார்களென்று சொல்லிய தெவ்வாறெனக்கேட்க, அப்போது சூதர் முனிவரைப் பார்த்து, ஓ நைமிசாரண்யர்களே, நீவிரிப்போதுகேட்ட சங்கையானது நற்சங்கையாகி இருப்பதால் அதைப்பற்றி யான் மெத்தவுஞ்சந்தோஷமடைந்தேன், ஏனெனில், ஆதியில் எனக்கும் இச்சங்கை உண்டாயிருந்து அச்சங்கையை நான் நாரதமகாமுனியால் அறிந்து உங்களுக்குச் சொல்லப்போகின்றதால் இயாபகசுத்தியோடுங் கேட்கக்கடவீர்களென்று கூறிப் பின்னுஞ்சொல்லுவார், கேளுங்கள் முனிவர்களே, இப்போது யான்சொல்லப்போகும்படியாகிய கோடிதீர்த்தந்தவிர மற்றதீர்த்தங்களெல்லாம் ஒவ்வொரு மகிமைகளைப்பெற்று இஷ்டகாமியங்களை அவரவர்கள் கருதியப்படி கொடுப்பதோடும் மோக்ஷசாம்பிராச்சியத்துக்கும் ஏதுசெய்பவைகளாக விருக்கினும், இக்கோடிதீர்த்தமாத்திரஞ்சுயம்புவாய் பகீரதியான கங்காபவானியானவள் தானே பிரத்யக்ஷமாய்ப் பாதாளவழியாய்வந்து குடிகொண்டிருப்பதனாலே இந்ததீர்த்தம் அகண்டபரிபூரண சச்சிதானந்தசொரூபமாய் விளங்குகின்ற ஆகாசத்தின் அண்டமுகட்டினின்று மிறங்கி மகாமேருவிற் பிரவேசித்துப் பரமசிவத்தினது சடாடவியிற் குடிகொண்டிருந்து தனுப்பி நான்குபிரிவாய் கிழக்கு வடக்கு மேற்குத்திசையிலே மூன்றுவகை நாமதேயத்துடனே சமுத்திரத்திலே விழுவதோடுந் தென்பாகத்திலே பிரவேசித்த கங்கையானவள் பாகீரதியென்னும் பெயருடையதாய் காசிக்ஷேத்திரத்திலே மோக்ஷத்துக்கேதுவாய் விளங்கிக்கொண்டிருந்த பாகீரதியை பாதாளவழியாய் ஸ்ரீராமமூர்த்தியானவர்

வருவித்து, அத்தீர்த்தத்தை மறுபடியுஞ் சிவத்தினது சிரத்திற்குடிகொண்டிருக்கும்படியாய்ச் செய்வித்ததோடும் தனது கோதண்டமாகிய வில்லும் தன்னுடைய அஸ்தங்களும் அவற்றிற் சந்திக்கும்படியாய்ச்செய்த பண்பால், அக்கோடிதீர்த்தத்திலே தீர்த்தமாடிய ஜீவாத்மாக்களுக்குசித்தமாய் மோட்சசாம்பிராச்சியங் கிடைப்பதோடும் அன்னவர் பூமியிலிருக்குமளவும் இஷ்டகாமியங்களையுந் தரவல்லதாதலால் இத்தீர்த்தத்தில் மூழ்கியபின் வேறேதீர்த்தத்தில் மூழ்கப்படாதென உரைக்கலாயிற்று. மேலும், இப்பெருமைபொருந்திய தீர்த்தந் தவிர மற்றதீர்த்தங்களோவெனில், தீர்த்தமாடியவர்களுக்கு அநேகஜென்ம சுகிர்தபலவிசேட புண்யானந்தபோகபாக்கியங்களைத் தரும்பொருட்டு ஜென்மங்களை உண்டாக்குமாதலால் மோட்சத்தை விரும்பினபேர்கள் மறுபடியுந் தாழ்வடைய விரும்பார்கள். அப்படிவிரும்பி கோடிதீர்த்தத்தில் மூழ்கி மறுபடியும் வேறேதீர்த்தத்தில் மூழ்கினூற் பிறவிரோகையையநுபவித்துத் தீரவேண்டும், ஆதலால் இதையுணர்ந்து ராமமூர்த்தியானவர் முன்பு மற்றதீர்த்தங்களிலெல்லா மூழ்கி முடிவிற் கோடிதீர்த்தத்தில்மூழ்கி அயோத்தியா பட்டணம் போய்ச்சேர்ந்தார். கேட்டீர்களோ மகாரிஷிகளே, மேலும் பூலோகத்திலே வசிப்பவர்கள் அவரவர்கள் கர்மாநுபவப்படி யாத்திரை செய்யப்பட்டபேர்கள் எத்தலத்திலாவது எந்த மூர்த்தியை எந்ததீர்த்தத்தைக் காணுநின்றார்களோ அவற்றில் உடனே ஸ்நானஞ்செய்து வணங்கித் துதித்து வரவேண்டும், அவ்வாறவருகிறபேர்கள் இந்தக் கோடிதீர்த்தத்திலே மூழ்கிவிட்டால் பிறகு அத்தலத்திலே வேறேயொரு தீர்த்தங்களினும மூழ்கப்படாது, ஆயினும் அவரவர்கள் காலதேசவர்த்தமானங்களைக் குறித்தும் நல்வினை தீவினையைக்குறித்தும் பிதுர்சிரார்த்த தேவபூஜாவிதிகளைக்குறித்தும் அந்தவிடத்திலேவிளங்குகின்ற தீர்த்தங்களிலே மூழ்கிக் கிரியைகளை நடப்பித்துப் பொழுதுபோக்கிக்கொண்டிருந்தாலும் அவரவர்களுடைய ஆயுள்முடிவிலேயாவது இந்தக் கோடிதீர்த்தத்தில்

நத்தம் ஆத்மாவுக்கு ஸ்நானபானமாகவேண்டியதாய் இத் தீர்த்தத்தைக் கமண்டலங்களிலே கொண்டுபோய் பத்திரப் படுத்திவைத்திருப்பார்கள், ஏனெனில், அந்த பாகீரதியானவள் சதாகாலமும் ஸ்ரீராமலிங்கத்தினுடைய சந்நிதானத்திலே குடிகொண்டிருப்பதாலும் எப்போது மப்பெருமானுடைய சடாடவியில் விளங்குவதாலும் காசிமகாக்ஷேத்திரத்தில் விளங்கும் பாகீரதியினுடைய பிரவாகத்தை பூலோகவாகினியாய்ப் புண்ணியபுருஷர்ளெடுத்துவந்து ஸ்ரீராமநாதனுக்கு அபிஷேகம்பண்ணினால் மகத்துவமிருப்பதினாலே நர்ஜன்மங்களாய்ப் பிறந்தவர்கள் அதைக்கொண்டுவந்து ஸ்ரீராமநாதனுக் கர்ப்பிதஞ்செய்கிற கங்கையைப்பார்க்கிலும் சுயம்புவா யிருக்கின்ற கோடிதீர்த்தமானது அநேகங்கோடி விசேடமென் றறிந்து அதை எடுத்துக்கொண்டுபோய் வைத்திருப்பார்கள், மேலும் அந்த பகீரதியானவள் ஆத்மலாபத்துக் குடையவளா யிருப்பதால் அதினின்றும் ஓங்கிய கோடிதீர்த்தத்தின் பெருமையை அளவிடப்போமோ, மேலும் பண்டோர்காலத்தில் யாதவ குலத்தி லுற்பவித்த ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் தனது அம்மானாகிய கஞ்சனைக்கொன்ற தோஷந்தீரவேண்டியதாய் இக் கோடிதீர்த்தத்தில் தீர்த்தமாடினாரென்று சூதமுநிவர் சொல்லியதைக்கேட்ட நைமிசாரண்யர்கள் சூதமுநியைநோக்கி, சுவாமீ, ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் யாதுகாரணத்தால் அம்மானைக்கொன்றார், அப்படிகொன்றபோதிலும் அவருக்கு தோஷமுண்டென்று விதித்தவர் யாவர், யாவருடைய வாக்கியத்தைக்கேட்டு இக்காரியத்திற் பிரவேசித்தார், இவைகளையெல்லாந் தேவரீர் அடியோங்க ளறிந்துகொள்ளும்படியாய்த் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று கேட்க, சூதமாமுநிவர் சொல்லத்தொடங்கினார்.

கேளுங்கள் மகாரிஷிகளே, வடமதுராபுரி என்னும் பட்டணத்தை அரசாட்சிசெய்துவந்த சூரசேன மகாராஜாவின் குமாரனாகிய வசுதேவனுக்கு உரோகணிதேவி என்றுந் தேவகிதேவி என்றும் இரண்டுபெண்களைக் கலியாணஞ்செய்து

வசுதேவனோடும் இரதத்திலேற்றி ஊர்க்கோலங்காட்டு நிமித்தம் மைத்துனனாகிய கஞ்சன் சாரதியாகவமைந்து இரதத்தை நடாத்தி வீதிப்ரதட்சணமாய் வருகையில், அப்போது ஆகாசத்தினின்றும், ஓ கஞ்சமகாராஜனே, இவ்விருவர்கள்வயிற்றிற் பிறக்கும் பிள்ளைகளால் உனக்கு மரணமுண்டாமென்று அசரீரிகூற, அவ்வாய்மையைக் கேட்டநாள்முதற் கஞ்சன் மெத்தவுந் துக்கசாகரத்துளாழ்ந்தி, பின்னர் ரோகணிதேவி தேவகீதேவி வசுதேவன் இம் மூவரையும் வதஞ்செய்ய வேண்டுமென்று நினைத்து ஆரவாரஞ்செய்துவருகையில், வசுதேவனானவன் அக்கொள்கையைக்கண்டு கஞ்சனுக்கு அநேகவித உபசாரவார்த்தைகளைச் சொல்லி அவ்வெண்ணத்தைத் தடுத்து, அப்பா மைத்துனா, உனக்கு இவர்கள்வயிற்றிற் பிறக்கும் பிள்ளைகளால் மரணம் நேரிடுமென்று எண்ணமிருப்பதால், அப்படி பிறக்கும் பிள்ளைகளை வையாமல் உடனே கொன்றுவிடென்று கூறியதைக்கேட்ட கஞ்சனும் அதுபோல் சமமதித்து, அம் மூவரையும் சிறைச்சாலையி லடைத்து காவலமைத்து, அவர்கள் வயிற்றிற் பிள்ளைபிறந்தவுடனே எடுத்துவரச்சொல்லி தனது மந்திரவாளால் இரண்டுதுண்டாய் வீசி மகிழ்ந்திருப்பான் இவ்வாறு ஆறுபிள்ளைகளைக் கொன்றுவிட்டதின்பேரில், பிறந்து பிறந்து வாளுக்கிரையாகுந் தனது குழந்தைகளினது சோபத்தால் மெலிந்திருக்கும் வசுதேவனுடைய மனக்கவலையை அகற்றவேண்டியதாயும் பூமிபாரந் தீர்க்கவேண்டியதாயும் ஸ்ரீவைகுந்தவாசராகிய ஸ்ரீமந் நாராயணமூர்த்தியானவர் ஆதிசேடன்முதலிய தேவர்களுடனும் வைகுந்தத்தைவிட்டுப் புறப்பட்டு அவர்கள்வயிற்றிற் ஜெனிக்கவேண்டி யோசித்து தேவகிதேவிவயிற்றில் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியும் ரோகணிவயிற்றில் ஆதிசேடனும்வந் தவதரித்ததுமன்றி தனதுகலையில் ஒன்றையெழுப்பி ஆயர்பாடியில் நந்தகோபன்மனையில் அவன்பத்தினியாகிய யசோதையம்மன்வயிற்றில் துர்க்கி என்னும் பெண்ணுருவாய் பிறக்கச்செய்து, தான் பிறந்தவுடனே வசுதேவனுக்குச் சொற்பனமூலமாய் ரோகணி

வயிற்றிற்பிறந்த பிள்ளையையும் தேவகிவயிற்றிற்பிறந்த பிள்ளை யையு மெடுத்துக்கொண்டுபோய் நந்தகோபனுடைய வீட்டில் அச்சமயம் யசோதையம்மன் பெண்குழந்தையைப் பிரசவித் துப் பிறந்தகுழந்தை யின்னதென்று தெரியாமற் சோபித் திருப்பார்களாதலால் அச்சமயத்தில் இவ்விரண்டு குழந்தை களையும் அவளிடத்தில் விட்டுவிட்டு அங்ஙனம் பிறந்திருக்கும் பெண்குழந்தையை யெடுத்துவந்து இங்கே சேர்க்குமளவும் காவலாளிகள் முதலிய பதியிலுள்ளோர் யாவரும் மூர்ச்சித் திருப்பார்க ளாதலால் அதுபோற் செய்யக்கடவையென்று நாராயணமூர்த்தி சொல்லியவுடனே, வசுதேவன் விழித்துப் பார்த்து, பிள்ளைபிறந்து பேசாமலிருப்பதுகண்டு கடவுள் கட் டளையிட்டதுபோல் சகலஜீவர்களு முறங்கியிருக்க, அத்தரு ணத்திற் குழந்தைகளையேந்தி ஆயர்பாடியில் நந்தன்மனையில் யசோதை பெண்குழந்தையைப்பெற்று ஒன்றுந்தோன்றாமல் சோபித்திருப்பது கண்டு, தெய்வச்செயலென்று சந்தோஷங் கொண்டு, தான் கொண்டுபோன பிள்ளைகளை அவளிடத்தில் விட்டு அங்குள பெண்குழந்தையாகிய துர்க்கையையும் மற்று மோர் பிள்ளையையு மெடுத்துவந்து தேவகிதேவி உரோகணி தேவி யிவர்களிடத்தில் விட்டபிறகு, யாவருக்குந் தெளிவுண் டாகிப் போதும்விடிந்தவுடனே, இங்குற்ற இரண்டுகுழந்தை களு மழக்கேட்ட கஞ்சன் பிள்ளைகளைக் கொண்டுவரும்படியாய் காவலாளிகளுக் கறிக்கையிட, அவர்களுமதுபோல் அப்பிள் ளைகளைக் கொண்டுபோய்க் கஞ்சனிடங்கொடுக்க, அவன் கிரு சித்தேனு மஞ்சாமல் அப்பிள்ளைகளைக் கொண்டுபோய் ஓர் பாறையினிடமாக நின்று பிள்ளைகளை உயரவெறிந்து வாளை யோங்கும்போது, ஒருபிள்ளை மாய்கையாய் மறையவும் மற் றோர் பெண்ணாகிய துர்க்கையானவள் அஷ்டபுஜத்தோடும் மூவிலைவேற் சூலத்தோடும் அந்தரவீதியில் நின்று, அடா நிர் மூடனாகிய கஞ்சனே, உன்னைக்கொல்லுவதற்கு இரண்டுபிள் ளைகள் வளருகின்றார்க ளாதலால் சாக்கிரதையாயிரடா, மத்தித்துப்போவாயென்று கூறி அந்தரபாகத்தில் மறைந்தாள்.

அவ்வாறு துர்க்கியானவள்சொல்லி மறைந்தநாள்முதல் கஞ்சனானவன் நெடுங்கவலையுற்று ஆயர்பாடியில் வளர்கின்ற பிள்ளைகளைக் கொல்லவேண்டுமென்னுங் கருத்துடையவனாய் எதிர்பார்த்திருக்கையில், ஆயர்பாடியில் நந்தகோபன்வீட்டில் வளரும் பிள்ளைகளில் பெரியபிள்ளைக்கு பலராமனென்றும் இளைய பிள்ளைக்கு கிருஷ்ணனென்றும் நாமகரணஞ்செய்து வளர்த்து வருகிறபோது, கஞ்சனானவன் பூதகிமுதலிய ராக்ஷதர்களுக்கு அநேக தந்திரங்களைச்சொல்லிக் கொன்றுவரும்படியாக வனுப்பிவைத்தும் அவர்களால் முடியாமல் கிருஷ்ணன்கையினால் மடிந்தபின், ஆயர்கள் அச்சமுற்று, அப்பிள்ளைகளை எடுத்துக்கொண்டு, கோகுலபிருந்தாவனத்திற் போயிருக்கும்போது, ஆயர்களால் இந்திரனுக்குச்செய்யும் பிரார்த்தனையைத்தடுத்து கோவர்த்தனத்துக்குச் செய்யச்சொல்லி, அப்படியவர்களாற் செய்த பூசையையுந் தானே தேவதையாகவிருந்து ஒப்புக்கொண்டு, தேவேந்திரனாற்பெய்வித்த சோனைமாரியை, கோவர்த்தனகிரியைக் குடையாகவெடுத்துப் பிடித்து ஏழுநாள் வரையில் ஆனிரைகளைக் காத்து, கோபஸ்திரீகளுடனே கூடி விளையாடியும், அவர்கள்வஸ்திரங்களை யபகரித்தும், அவர்கள் வீட்டிலுள்ள வெண்ணெய் தயிர் பால் முதலியவைகளைத் திருடியுண்டும், அநேகந் திருவிளையாட்டாகிய லீலாவிநோதங்களைச்செய்தும், காளிங்கனை கர்வபங்கப்படுத்தியுமிருக்கும்போது, கஞ்சனானவன் பலராமனையுங் கிருஷ்ணமூர்த்தியையுந் தன்பட்டணத்தில் வரவழைத்து சூதுமார்க்கமாய்க் கொல்லவேண்டுமென எண்ணங்கொண்டவனாய் அக்ரூரனென்னு மொருவனை பலராமகிருஷ்ணனிடந் தூதனுப்பி அழைத்துக்கொண்டுவரும்படியாய்ச் சொல்ல, அவனும் அவணின்றும் பிரயாணப்பட்டு கோகுலபிருந்தாவனத்திலிருக்கும் பலராமகிருஷ்ணனைக்கண்டு பலபலவாய்த் தோத்திரஞ்செய்து கஞ்சன்சொல்லி யனுப்பியதைக்கூறி அழைக்கச் சம்மதித்தவர்களாய் பலராமகிருஷ்ணனிருவருந் இராஜபேட்டியைக்காணும் உடுமானங்களையும் பிரயாணப்பட்டு மதுராபுரி வந்து

சேர்ந்து அப்பட்டணத்தை பலராமனும் கிருஷ்ணமூர்த்தியும் கோபாலர்களுடனே சுற்றிப் பார்த்துக்கொண்டு வேடிக்கையாய் வருகிறபோது, ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய அழகுகளையும் நடைநொடி பாவனைகளையும் அப்பட்டணத்திலுள்ள பெண்கள் கண்டு மயக்கத்தை யடையும்படியாயும் வெகு கோலாகல கெம்பீரத்துடனே சிங்கக்குட்டிகளைப்போல் வருகிறபோது, கஞ்சனானவன் அநேக மல்லஜெட்டிகளையும் இரத கெஜ துரகபதாதிகளையும் அணியணியாய்விடுத்து வருபவர்களைக் கொல்லும்படியாய் உத்தரவுசெய்தனுப்ப, அதுபோலவர்களும் வந்தெதிர்த்து கோரமாகிய சமர்விளைக்க, அது கண்ட பலராமகிருஷ்ண ரிருவருங் கோபித்து யுகாந்தகால ருத்திரரைப்போற் சீறி எதிர்த்த படைவீரர்களையுஞ் சேனாசயின்யங்களையும் பாழ்பட நூறி, ஜயவென்று சிங்காரஞ் செய்து, கஞ்சனிருக்குங் கொலுமண்டபம்நோக்கி வருகிறபோது, கஞ்சன்கண்டு, குவலயாபீடமென்னும் யானைக்கு மதங்களூட்டிக் கொல்லும்படியாகிய சைகைகளைச்சொல்லிவிடுக்க, அந்த யானையைக் கிருஷ்ணபகவான்கண்டு வெகுண்டு, இருதுண்டாகச் செய்து, அதன் தந்தங்களைப் பிடுங்கி கையிற்பிடித்துக்கொண்டு கிருஷ்ணபகவானானவர் கஞ்சனிருக்கும்படியாகிய சப்பிரமஞ்சத் தடியிற்போய் கஞ்சனது இரண்டு காலையும் பற்றித்தூக்கிக் கரகரவென்று, சுழற்றிநிலத்திலே யறைந்து தன்கரத்தினிடமாயிருந்த யானைக்கொம்பினாலே தலைமண்டைசிதறும்படியாக வடித்துக்கொன்று, பின்னுமவனுக்குத் துணையாகவெழுந்த சூரர்களையும் சேனாசயின்யங்களையும் நாசப்படச்செய்து சர்வசங்காரமூர்த்தியைப்போற் கெற்சித்து அட்டகாசஞ்செய்து யாவருமுடிந்தபின்னர் தமது தந்தையாகிய வசுதேவனையும் தாய்மார்களாகிய ரோகணிதேவி தேவகிதேவியையும் சிறைச்சாலையினின்றும் நீக்கி, அவர்களுக்கு அநேக உபசாரஞ்செய்து, வடமதுராபுரியை கஞ்சன் தாதையாகிய உக்ரசேனனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்துவைத்து, சத்யபாமைமுதலிய கோபிகாஸ்திரீகளுட

னையுங் கோபாலர்களுடனேயும் ஆயர்பாடியிலும் மதுராபுரியிலுமாகவிருந்து, அநேகலீலாவிநோதங்களை நடப்பித்துக்கொண்டிருந்தார்.

கேட்டீர்களோ முநிவர்களே, இங்ஙன மிவ்வாறிருக்க, தெய்வலோகத்திலிருந்து பிரமதேவன்புதல்வனாகிய நாரதமகாமுநிவர் கிருஷ்ணபகவானிடத்துக்கு வருகையில், அன்னவர்வரவைக்கண்டு, கிருஷ்ணமூர்த்தியானவர் நாரதருக்குவேண்டிய உபசாரனைகளைச்செய்து, ஐயா நாரதமகாமுநியே, யான் தங்களைக்காணும்படியாய் எண்ணியிருந்தவண்ணந் தேவரீரே இவடமெழுந்தருளினமையால் என்மனத்திலுள்ள கவலையை நிவர்த்திசெய்யவேண்டுவதென்னவெனில், என்னுடைய அம்மானாகிய கஞ்சனைக்கொன்றதோஷம் எனக்குண்டாயிருப்பதனாலே அதுதீரவேண்டியதற்கு ஓர் பரிகாரஞ்சொல்லவேண்டுமென்றுகேட்க, அவ்வார்த்தையைக்கேட்ட நாரதபகவான்முகமலர்ந்து, வாரும் சுவாமி, வேதவேதாந்தமூர்த்தியே, ஆதிபராபரவஸ்துவாகியும் அகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகராகியும், ஆதிமத்தியாந்தரகிதராயும், சின்மய னந்தசொரூபமாகியும், ஆண்பெண் அலியாகியும், சகலஜீவான்மாக்களிலுங்கலந்துநின்றதாகியும், என்போன்ற ஏழைகளுக்கெட்டாதவஸ்துவாகியும் ஒளிருந் தேவரீருக்கு, பாபமேது புண்ணியமேது, அடியேனுடைய மனதைச்சோதிக்கவோ இப்படி கேட்டகாரியம், சுவாமி, என்று நாரதர்சொல்ல, அதற்கு ஸ்ரீகிருஷ்ணபகவான் கூறுவார். ஐயா நாரத மகாமுநிவரே, நாம் நரயோனியினிற்பிறந்து, நானாவித சுகதுக்கங்களை யடைவதனாலே யான் கேட்டகாரியம் உண்மைதானென்று ஸ்ரீகிருஷ்ணபகவான்சொல்ல, அதற்கு நாரதர்சொல்லுவார், வாருமையா பகவானே, தேவரீர் வினவியவண்ணம் உமதுமாமனாகிய கஞ்சனைக்கொன்றதோஷம் நீங்கவேண்டுமாயின் தென்றிசையிற் சேதுமத்தியிலோங்குங் கந்தமாதனகிரிச்சார்பில் இதற்குமுன் தேவரீரெடுத்திருந்த ஸ்ரீராமாவதாரத்தில் இராமலிங்கப்பிரதிஷ்டைசெய்து பகீரதியான கங்கையைப்

பாதாளவாகினியாய்வரவழைத்து சிவபெருமானுக் கபிஷேகஞ்செய்துவைத்த கோடிதீர்த்தமென்று ஒருதீர்த்தமிருக்கின்றது, அந்ததீர்த்தத்திலே, ராமனாய்பிறந்து ராவணனைக் கொன்றபோது சம்பவித்ததோஷந்தீரவேண்டி அதிற் றீர்த்தமாடி அதுபரிகாரமானதால் இப்போது இந்தகிருஷ்ணவதாரத்திலே கஞ்சனைக்கொன்றதோஷம் திரும்படியாய் அந்தக் கோடிதீர்த்தத்திலேபோய்மூழ்கினால் தோஷவிமோசனமாகுமென்று நாரதர்சொல்லி, ஸ்ரீ கிருஷ்ணபகவானிடத்தில் விடைபெற்றுக்கொண்டு பிரம்மலோகத்தை யடைந்தார். பின்பு கிருஷ்ணமூர்த்தியும் நாரதர்வாக்கியப்படியே தமையனான யலராமனுடனும இரதகஜதுரகபதாதிகளுடனும் பிரயாணப்பட்டு, சேதுவைசசேர்ந்து, அதன் மத்தியிலோங்கும் கந்தமாதனகிரிச்சார்பிலுள்ள தீர்த்தங்களிலெல்லாம் வேதவிதிப்படி மூழ்கிப் பின்னர் கோடிதீர்த்தத்தில்மூழ்கி, அநேகதானதருமங்களைச்செய்து, ஸ்ரீ ராமநாதனை வணங்கி விடைபெற்று, வடமதுராபுரி வந்துசேர்ந்து சுகமாயிருந்தார்க ளாதலால் இப்பேர்கொத்த மகிமைதங்கிய தீர்த்தத்துக்குச் சமீபமாய் சாத்தியாமிர்ததீர்த்தமென் றோர்தீர்த்தமுண்டு, அதன்பெருமையோ அளவுபடுத்திச்சொல்ல ஆதிசேடனுக்கு மரிதாமென்று சூதமுனிவருரைத்ததைக்கேட்ட நைமிசாரண்யர்கள், முனிவரைபபணிந்து, சுவாமி, தேவரீர் திருவுளங்கனிந்து அடியோங்களுக்கு அத்தீர்த்தத்தின் பெருமையைச் சொல்லவேண்டுமென்று பணிந்துநின்ற முனிவர்களுக்கிரங்கிச் சூதமகாமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

கோடிதீர்த்தச்சருக்கம்
முற்றுப்பெற்றது.

---

## சாத்தியாமிர்ததீர்த்தச்சருக்கம்.

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்களே, தெட்சணபாகத்தில் சேதுமத்தியிலோங்கும் கந்தமாதனகிரிச்

சார்பில் விளங்குஞ் சாத்தியாமிர்த தீர்த்தமென் றோர் தீர்த்த முண்டு, அத்தீர்த்தத்தில் மூழ்கினவர்களது பாபமனைத்தும் பருதிமுன் பனிபோல்விலகிப் போவதன்றியும், இகத்தில் அவர்கள் நினைத்த காரியங்களெல்லாங் கைகூடி, யாகாதிக்கிரியைகள் செய்தபலனைக்கொடுத்து, பரத்துக்கேதுவாகிய ஞானோதயத்தையுங் கொடுக்குமாதலால், அந்ததீர்த்தத்திலே புரூரவச்சக்ரவர்த்தியென்பவன் தீர்த்தமாடி, தனக்கு தும்புரு முநிவரால் கொடுக்கப்பட்ட சாபத்தை நிவர்த்திசெய்து கொண்டு, தெய்வலோகக்கணிகையருள் ஒருத்தியாகிய ஊர்வசி என்பவளைக்கூடிச் சுகபோகங்களை யநுபவித்துக் கொண்டிருந்தானென்று சூதமாமுநிவர்சொல்ல, அதுகேட்ட நைமிசாரண்யர்கள், முநிவரைநோக்கி, சுவாமி, புரூரவச்சக்ரவர்த்தி என்பவனுக்கு தும்புருமுநிவரால் சாபம்வந்த காரணமும் தெய்வலோகக்கணிகைமாதாகிய ஊர்வசி என்பவள் பூலோக ராஜனைசசேர்ந்தவிதமுந் தேவரீர் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்றுகேட்க, அப்போது சூதமுநிவர்சொல்லுவார், வாருங்கள் இருடிகளே, முன்னொருகாலத்திலே புரூரவனென்னுஞ் சக்ரவர்த்தியானவன் மகாகுபேரசம்பத்தோடும ரூபலாவண்ய சவுந்தரியத்தோடும் ஒப்பொருவரில்லாத பராக்ரமத்தோடும் மகாமண்டலேசுவரனாய் கோலோசசி இனிது வீற்றிருக்கும் நாளையில், தெய்வலோகத்தில் இந்திரன்சபையில் நடிக்கும் ஊர்வசி என்பவள் தேவர்களிலொருவனாகிய மித்திராவருணனென்பவனை இகழ்ந்துபேசினாளென்று அவனுக்கு பூலோக மாந்தரைப் புணரும்படியாய் சாபம்நேரிட்டதால், அச்சாபத்தையநுபவித்து நிவர்த்திசெய்யக்கருதி, துன்பத்தையடைந்து, தெய்வலோகத்தினின்றும் நீங்கி, பூலோகத்தில் புரூரவச்சக்கரவர்த்தி யரசாட்சிசெய்துவரும் பட்டணத்தினருகிலிருக்கும் ஓர் சிங்காரவனமென்னுந் தயித்ராவனத்திற் சேர்ந்து, சுரலயதாளவழுவின்றி வீணைகானம்பண்ணிக்கொண்டிருந்தாள், அவ்வாறு ஊர்வசியானவள் வீணையைமீட்டி வாசிக்கின்ற நயகுணங்களினாலே அவ்வனத்திற் பட்டமரங்க

னெல்லாந் தளிர்த்தும் பூத்தும் காய்த்தும் பழுத்துக் கனிந்தும், அவற்றினின்றுந் தேன்கள்சிந்தி யாறுபோற் பெருகவும், கரடிபுலி சிங்கங் காட்டானைமுதலிய மிருகங்களெல்லாம், அவைகளது வீராவேசத்தைவிடுத்து உறங்கிச் சுகானந்தத்தைக் கலந்திருக்கவும், பறவைச்சாதிகளெல்லாந் துவனிசெய்யாமல் இசையின்வழியிற் செவியைச்செலுத்தி பிரமித்திருக்கவும், ஊர்வனஜெந்துக்களும் பாம்புகள்முதலிய யாவும் இன்னிசையைநாடித் தன்னிச்சையை விடுத்துப் பொன்னைப் போன்ற படங்களைவிரித்துச் சென்னியைச்சாய்த்தாடவும், தாவராதிகளாகிய பாரைகண்முதலிய வெல்லாம் நீராயுருகி, ஓடும்படியாய் வாசித்துக்கொண்டிருக்குஞ் சமயத்தில், அப்பட்டணத்தை யாளப்பட்ட புரூரவனென்னுஞ் சக்ரவர்த்தியானவன் தனித்து வேட்டமாடக்கருதி, தனதுகையில் வில்லும் வேலுங்கொண்டு, குதிரை ஏறி வேட்டமாடி, மீண்டும் அச்சிங்காரவனத்துட் பிரவேசித்து, அங்ஙனம் சிருஷ்டிகர்த்தாவின் தேவியாகிய சரஸ்வதியைப்போலும் இந்திரன்தேவியாகிய இந்திராணியைப்போலுஞ் சுந்தரமமைந்து இலகாநின்ற சித்திரப்பாவையைப்போன்ற ஊர்வசியைக்கண்டு ஒன்றுந் தோற்றாதவனாய்த் திக்பிரமைகொண்டு, தனதுபுத்தியினாற் பிறகு பெண்ணென்றறிந்து, அப்பூவையை நாடியகண்கள் அரைக்கண்களாகச்சோர்ந்தும் நாவானது வறண்டும் உரைகுளறியும் அனங்கன் கணைவலியை ஆற்றமாட்டாதவனாய் மோகக்கடலுட்டோய்ந்து, முன்பின்யோசியாமல் ஊர்வசியினது அருகிற்சேர்ந்து கூறுவான், ஓ பஞ்சரத்தினின்றிலகும் அஞ்சுகம்போற்கொஞ்சுங்கிளியாகிய வஞ்சியர்நாயகமே, உனக்குத் தஞ்சம்தஞ்சம், இந்து கோடிகிரணம்போன்ற முகாரவிந்தத்தையுடைய இளங்குயிலே, கந்தர்ப்பன்கணையால்வருந்திச் சிந்தையுழலும் என்னை இந்தவேளையிற் கந்தமுலாவும் உனது கனதனங்களைக் கொடுத்து சிந்தையாளனாகிய நெடியோன் மகனை நாணச்செய்யுங் கருணைசெய்வாய், நாயகமே என்று கூறிய ராதிபன்சொற்றுளங் காதல்கொண்டவளாய்க் கூறு

வான், வாராய் லோகாதிபனே நான் ஆடகலோகத்திறைவ னாகிய அயிராணிகேள்வனென்னுந் தேவராஜன்சபையில் நடிக் கும் அப்ஸரஸ்த்ரீகளில் ஒருத்தி, என்பெயர் ஊர்வசியென்று சொல்லுவார்கள், நீ பூலோகத்தில் உற்பவித்த நரஜன்மமா யிருப்பதாலும் என்மீதுமோகங்கொண்டதாலும் என்கருத் தின்படி நடப்பதாய் பரவசஞ்செய்து கொடுப்பையேயாகில் உன்னைச்சேருவேன், இல்லாவிடிற்சேரேன், அதுயாதெனில்; நான் இப்புவியின்கண் உன்னோடுகூடிச் சுகித்திருக்கவேண்டு மாயின், இந்தலோகத்துள்ள பசுவின்நெய் சற்கரை வாழை பலா மாங்கனிமுதலிய கனிவகைகள்தவிர மற்றவஸ்துக்களைப் புசியேன், ஆதலால் நீ எனக்கு மூன்றுகாரியங்களுக்கு உறுதி வார்த்தை செய்துகொடுத்தால் உன்னுடன் கூடிவாழ்வேன், இல்லாவிடில் என்னிருப்பிடம்போய்ச் சேருவேனென்றாள். அதுகேட்ட புரூரவவேந்தன், வாரும்பெண்ணே, ஊர்வசியே; நீ என்னகேட்டபோதினும் அவ்வாறு பரவசஞ்செய்து தரு வேனாதலால் உன்கருத்திலுள்ளதை வெளியிடுவாயென்று சொல்ல, அப்போது ஊர்வசியானவள் புரூரவனைப்பார்த்து, ஓ வேந்தனே, நான் இவ்வுலகின்கண் இருக்குமளவும் இரண்டு ஆட்டுக்கடாக்கள் வளர்த்துவர எண்ணங்கொண்டிருக்கிறேன், அப்படி வளர்த்துவருகையில் அதையாரும் அபகரித்துக் கொண்டு போகாமற்பதிலமாய்க் காத்துவரவேண்டும், இதல் லாமலும் நீ எந்தக்காலத்திலும் என்கண்ணுக்குமுன் வஸ்திர ஹீனனாய்வந்து நிற்கப்படாது, இதன்றியும் உனது உச்சிட் டத்தை நானருந்தும்படியாய் செய்யத்தகாது, இந்த மூன்று காரியந்தான் என்மனதிலிருப்பதாதலால் என்னசொல்லுகிறா யென்றுகேட்க, அதற்குவேந்தன் சம்மதித்துப் பரவசஞ் செய்து கொடுத்தவனாய், ஊர்வசியை அழைத்துக்கொண்டு பட்டணம்வந்துசேர்ந்து, தனது மந்திரியை அழைத்து, முத் திரைமோதிரத்தைக்கொடுத்து மநுநீதிதவறாமல் இராஜரீகஞ் செய்துவரும்படியாய்க் கட்டளையிட்டுப், பின்னர்தனதுபட்ட ணத்துக்கருகேயிருக்குஞ் சரஸ்வதி நதிக்கரையிலோர்குஞ்

வர்களே, இப்போது நாம்கூறியவண்ணம், கங்கைக்குப்போய் வந்து ராமநாதனை வணங்காதபேர்கள், அவர்கள் தந்தைக்குப் பிறந்தவர்களல்ல. அருணோதயத்தி லெழுந்தவுடனே, ஸ்ரீராம நாதா, ராமநாதா, ராமநாதாவென்று மூன்றுவிசை சொன்ன பேர்களுடைய பாபங்களெல்லாம், நாளுக்குநாள் அகன்று போவதன்றியும், அவர்களுடைய பவப்பிணியுமொழிந்து, அவர்கள் வாய்மொழியானது சூரியனைப்போற் பிரகாசிப்ப தோடும், அன்னவர் ஆன்மா பிரியுங்காலையில், இராமநாதா வென்று சொன்னால், அவ்வான்மா மறுபடியுஞ் ஜனனத்துக் கேதுவாகாமல் தேவசொரூபம்பெற்று விளங்கப்படும். உலகின்கண் ஜனித்தவர்கள், யாவராகவிருந்தபோதினும், இராம நாதப்பிரபு, மகாதேவா, கிருபாநிதி, அகண்டபரிபூரணா, லோகரக்ஷகா, உலகநாதா, சந்திரசடாதரா, சதாசிவா, நீலகண்டா, சங்கரா, சயம்பு எனச் சொல்லப்பட்ட பேர்களினுடைய பாபங்களெல்லாம் பரிகாரமாய் துன்பமகன்று, இன்பமுண்டாகி மேன்மையை யடைந்து வாழ்வார்கள். இராமநாதனுடைய ஆலயத் திருப்பணிசெய்ய முயலுவாராயின், அவர்களுடைய சுற்றத்தைச்சார்ந்த கோடிஜென்மம் வரையிற் கயிலாயத்தை யடைவார்கள். ஸ்ரீராமநாதனுடைய ஆலயத்தைச் சாந்திறைக்கட்டி முடித்தபேர்கள் பிரமலோகத்தைப் பெறுவார்கள். பளிங்குக்கற்களினால் மண்டபமிழைத்த பேர்கள், சொர்ன்ன விமானத்திலேறிச்சென்று கயிலைவாழ்வைப்பெறுவார்கள். ஸ்ரீராமநாதனுடைய திருப்பணி மண்டபத்துள் வெள்ளியினாற் சிங்காசனமமைத்தபேர்கள், சாம்பவமூர்த்தியைப்போல சொரூபம்பெற்று மகிழ்ச்சியடைந்திருப்பார்கள். பொன்னினாலும், தங்கத்தினாலும், கடவுளுக்குரிய சப்ரமஞ்சங்கள், விமானங்கள், ஸ்தூபிகள், செய்துவைத்த பேர்கள், அச்சிவக்கொழுந்தோடுங் கலந்திருப்பார்கள். இராம நாதனுக்குவேண்டிய பாத்திரங்கள், தலைச்செம்புகள், குத்துவிளக்குகள், தாம்பாளங்கள், தூபதீபக்கால்கள், கற்பூரத் தட்டுகள், குடை, பீலி, ஆலவட்டம், சாமரை, குஞ்சம்,

பாவாடை, ஆடையாபரணம், ஆண்குதிரை, ஒட்டகம், சிவிகை, கண்டிகைமுதலிய கயிங்கரியங்கள் செய்தபேர்களை ஸ்ரீராமநாதன் தன்னுடைய சொரூபத்திலேநின்று விடுபட்டவர்களென்றும், நனிகாதலோடுங் கருணைசெய் தாட்கொள்ளுவார். இதல்லாமலும், அந்த ராமநாதனுக்கு திரிகாலமும், அபிஷேகம், ஆராதனை, நிவேதனம், ஆடல்பாடல், திருவிழா செய்துவைத்தபேர்கள், பூலோகத்திலே குபேரனைப்போல் வாழ்ந்து, முடிவிற் கயிலாயவாழ்வைப் பெற்றிருப்பார்கள். இதல்லாமலும், அந்த இராமநாதனுக்கு அபிஷேகஞ் செய்கிற காலத்தில் உருத்திர நமக சமகமென்னு மந்திரத்தைச் செபித்தவர்கள் ஒருகாலங்களிலும் நரகத்தை யடையமாட்டார்கள். அந்த ராமநாதனுடைய அபிஷேகத்துக்குப் பால், தயிர், பஞ்சகவ்யம், பழவற்கம், ரசவற்கம் கொடுத்து அபிஷேகஞ்செய்து வைக்கப்பட்டவர்கள் பெறுகிறபேற்றைச் சொல்லுகின்றோம். யாதெனில், பாலபிஷேகஞ்செய்துவைத்த பேர்கள் அவர்கள் இருபத்தொரு தலைமுறைவரையில், புத்ர மித்ர களத்திராதி வற்கத்தோடும், தேவசொரூபத்தைப் பெற்று கயிலாயத்தில்வாழ்வார்கள். தயிர் அபிஷேகஞ்செய்து வைத்தபேர்கள், அவர்கள் கற்பகோடிகாலங்களி லெடுத்த ஜென்மங்களிலடர்ந்த தீங்குகளெல்லாம அகன்று, சங்கு சக்கரத்தையுடைய ஸ்ரீமந்நாராயணன் பதியாகிய வைகுந்தத்திலே வாழ்ந்திருப்பார்கள். நெய்யினால் அபிஷேகஞ்செய்து வைத்தபேர்கள், கற்பகோடிகாலம்வரையிலெடுத்த ஜென்மங்களினது பாபங்களெல்லாம் விமோசனமாகி தெய்வலோகத்தை யடைவார்கள். தேனினால் அபிஷேகஞ் செய்துவைத்தபேர்கள், பிரம்மலோகத்தையடைந்து வாழ்வார்கள். எண்ணெயினால் அபிஷேகஞ்செய்து வைத்தபேர்கள், குபேரனுடைய அளகாபுரியைச்சேர்ந்து வாழ்ந்திருப்பார்கள். கருப்பஞ்சாற்றினால் அபிஷேகஞ்செய்து வைத்தபேர்கள், வருணனுடைய லோகத்தை யடைந்திருப்பார்கள். கனிவற்கங்களால் அபிஷேகஞ்செய்து வைத்தபேர்கள், பிதுர்லோகமடைந்து

வாழ்ந்திருப்பார்கள். சம்பா அன்னங்களினால் அபிஷேகஞ்செய்து வைத்தபேர்கள், சாயுச்யபதவியையடைந்து வாழ்ந்திருப்பார்கள். கற்பூரவாசனைகட்டிய சந்தனக்குழம்பினால் அபிஷேகஞ்செய்துவைத்தபேர்கள், காந்தர்வலோகமடைந்து வாழ்ந்திருப்பார்கள். ரசவற்கங்களினால் அபிஷேகஞ்செய்து வைத்தபேர்கள், இந்திரனுடைய பதியைச்சேர்ந்து வாழ்ந்திருப்பார்கள். பாதிரி, புன்னை, அலரி, செங்கழுநீர் முதலிய புட்பவாசனைகள் கட்டிய ஜலத்தினால் அபிஷேகஞ்செய்து வைத்தபேர்கள், அவர்களுடைய குற்றங்களெல்லாம் அகன்று, சிவலோகபதவியைப்பெற்று வாழ்வார்கள். திவ்யமான ஏலம், கிராம்பு, ஜாதிக்காய், ஜாதிபத்ரி, வெற்றிலைப்பாக்குகள், நிவேதித்து, கற்பூரவாசனைகட்டிய ஜலங்களாலே அபிஷேகஞ்செய்துவைத்தபேர்கள், அக்கினிலோகஞ்சேர்ந்து வாழ்வார்கள். பித்தளையினாற் குடஞ்செய்துகொடுத்து, அதனால் ஜலமெடுத்து அபிஷேகஞ்செய்து வைத்தபேர்கள், இலட்சுமி கடாட்சம்பெற்று, பூமியிலே வாழ்ந்திருப்பார்கள். அபிஷேகத்துக்கு தாம்பரத்தினாற் குடஞ்செய்து கொடுத்தபேர்கள், தெய்வலோகத்தை யடைவார்கள். வெள்ளிக்குடங் கொடுத்தபேர்கள், சிவலோகத்தை யடைவார்கள். தங்கக்குடம் கொடுத்தபேர்கள், வைகுந்தத்தைப்பெறுவார்கள். இதல்லாமலும், ஸ்ரீராமநாதனுக்கு நிவேதனமாகும்பொருட்டு, பாற்பசு கொடுத்தபேர்கள், அசுவமேதயாகஞ்செய்த பலனைப்பெற்று, பரசிவசொரூபமாய் சிவலோகத்தை யடைந்திருப்பார்கள். எப்போதும், இராமநாதனை தரிசித்து, இராமதநுக்கோடியில் தீர்த்தமாடப்பட்டவர்கள், இதர தேசங்களிற் சென்றகாலையில், எந்த ஜலங்களில் தீர்த்தமாடினாலும், இராமநாதாவென்று மஞ்சனமாடினால், சேதுஸ்நாநஞ்செய்த பலன் பெறுவார்கள். ஸ்ரீராமநாதனுடைய ஆலயத்திற் கிலப்பட்ட பணிகளை நடத்திவைப்பார்களாகில், அவர் செய்துவைத்த செலவுக்குப் பதின்மடங்கதிகமாகப் பொருளைப்படைத்துச் சுகித்திருப்பார்கள். ஸ்ரீராமநாதனுக்கு தீப்பணி செய்தபேர்கள்.



இராமலிங்கப்பிரதிட்டை.

மனத்துள்ள அஞ்ஞானங்களகன்று சுஞ்ஞானிகளாய் வாழ்வார்கள். சற்கரை, பருப்பு, அரிசி, வெல்லம், எண்ணெய், கண்ணாடி, சாமரை, கொடுக்கப்பட்டபேர்கள், செய்தபாபங்களெல்லாமகன்று, இரதகெஜதுரகபதாதிகளையுடைய வேந்தர்களாகப்பிறந்து, போகபாக்கியங்களைப்பெற்று முடிவிற் சிவலோகத்தை யடைவார்கள், ஸ்ரீராமநாதனாலயத்துக்கு முரசு முதலிய வாத்தியக்கருவிகள் வாங்கி யளித்தபேர்கள், இராஜ போகத்தைப்பெற்று வாழ்ந்து, முடிவிற் சிவலோகத்தை யடைவார்கள். ஸ்ரீராமநாதனைப் பூசிக்கவும், வணங்கவும், தோத்திரஞ்செய்யவும், ஆசைப்படுவார்களாயின் அவர்களுக்கு சம்பவித்த இடுக்கண்களெல்லாமகன்று, ஆனந்தபோகபாக்கியங்களை எழுபத்தொருகோடி சதுர்யுசம்வரையில் அநுபவித்திருந்து, முடிவிற் பேரின்பத்தைப்பெற்றுச் சைதன்ய சொரூபமாய் விளங்குவார்கள். மராமரங்களேழும், ஓரம்பினால் ஊடுருவச்செய்த, ஸ்ரீராமச்சந்திரனாற் பூசிக்கப்பட்ட இராமநாதனுக்கு பூசை நிவேதனத்துக்குத் தகுந்த கிராம பூமிகள்விடுத்து, அன்பினால் அவரடிமைப்பணி செய்யப்பட்டபேர்கள் சாயுச்சியபதத்தை யடைந்து, சிவசொரூபமாகி என்றைகளும், ஸ்ரீராமநாதனைப்போல விளங்குவார்கள். சொற்க மத்ய பாதாளமென்னு மூன்றினும், இராமநாதனுக்கு மேலான தெய்வமும், கந்தமாதனத்துக்கு மேலான புண்ணிய க்ஷேத்திரமும், சேதுதநுக்கோடிக்கு மேலான தீர்த்தமும் இல்லையென்று சுருதிவாக்யப் பிரமாணங்களினாலே சொல்லப்பட்டிருக்கின்றபடியால், அந்த ராமநாதனுக் கற்பிதமாய் கொடுக்கப்பட்ட புண்ணியத்துக்கு மேலான புண்ணியம் கிடையாதென்றும், மேலோர்கள் கூறுவார்கள். இதன்றியும், ஸ்ரீராமநாதனுடைய சந்நிதானத்தை திருவலகிட்டு மெழுகி, நந்தவனங்கள்வைத்து, புட்பங்களெடுத்து மாலைகள் தொடுத்துச் சாத்தித் தோத்திரஞ்செய்யப்பட்ட அன்பர்களை, ஸ்ரீராமநாதனே புகழ்ந்து கொண்டாடி அவர்கள் பெருமையைச் சொல்லவேண்டுமேயல்லது. நம்மாற் சொல்லமுடியாது.

இதன்றியும், பூலோகத்தில்ஜனித்த மானிடரானவர்கள், இந்திரியங் கெட்டுப்போகுமுன்னே, தேகத்தில் நரையுண்டாகி, மனங்கலங்கித் தலைநடுக்குற்று, கண் பஞ்சடைந்து, கபமேவிட்டு, காலன்வந்து கிட்டுமுன்னமே வீண்காலங்கழிக்காமல், ஸ்ரீராமநாதனுடைய பணியைக்குறித்தும், தரிசனத்தைக்குறித்தும், அவாவுற்று ஆகமபுராணங்களால் ஸ்ரீராமநாதனைத்தொழுது வணங்கித் தோத்திரஞ் செய்வாராயின், அவர்களை அந்த ராமன், தன்னுடைய அற்புதசின்மய மதுர சாம்பிராச்சிய வைபவ மோகானந்த சுகிர்த பல விசேட காருண்ய கருணாநிதி பிரசாத மகிமை யுடையவர்களாய்ச் செய்வாரென்று சூதமாமுநிவர் சொல்ல, அதைக்கேட்ட நைமிசாரண்ய முநிவர்கள், தங்கள் கண்களினின்றும், ஆனந்த பாஷ்பந் தாரைதாரையாய்ப் பொழிய இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பி அவரவர்களிருந்த ஸ்தானத்திற்றானே சமாதி நிஷ்டராய், ஸ்ரீராமநாதனுடைய சரணாரவிந்தங்களை நினைந்து ஆனந்தக்கூத்தாடினார்கள்.

இராமநாதச்சருக்கம்

முற்றுப்பெற்றது.

---

## இராமன் அருச்சனைச்சருக்கம்.

இவ்வாறு ஸ்ரீராமநாதனுடைய மகிமைகளைக்கேட்ட நைமிசாரண்ய மகாரிஷிக ளியாவருஞ் சந்தோஷசாகரத்துட் டோய்ந்தவர்களாய் சூதமகாமுநிவரைநோக்கிக் கூறுவார்கள். சுவாமி, தேவரீருடைய பெருமையை அடியோங்களென்ன சொல்லப்போகின்றோம். வேதங்களின்முடிவை யறிந்துணர்ந்து அதன் உண்மைகளைத் தெரிந்துகொண்டதும் பலபல வேதாகம புராணங்களை அறிந்திருப்பதும், கல்விக்கடலுள் நீந்தித் திரிவதும் தேவரீரை அன்றி வேறொருவரை யாங்கள் கண்டதுமில்லை கேட்டதுமில்லை, வேறொருவரை நிகராகச்

சொல்லவுங் கூடாது. ஆதலால், ஸ்ரீவேதவியாசமகாரிஷியி னுடைய கிருபையை மென்மேலும்பெற்றுச் சகல கேள்வி களையும் உணர்ந்திருக்கப்பட்ட தேவரீருடைய வாக்கினுற் சேதுமான்மியங்களைக்கேட்டறிந்த எங்களுக்கு வேறே ஒன் றுந்தேவையில்லை, சகல சாம்பிராச்சிய மோக்ஷானந்தங்களுங் கைகூடிய தாகையால் எளியோங்கள் ஓர் விண்ணப்பஞ்செய் கின்றேம். அதுயாதெனில் அண்டசராசரத்தின்கண் ஓது தற்கரிய ஸ்ரீராமநாதக்கடவுளை தசரதகுமாரனுகிய ஸ்ரீராம சந்திரமூர்த்தியானவர் எவ்வண்ணம் பூசைசெய்தனரோ, அதனை எங்களுக்குச் சொல்லவேண்டுமென்று நைமிசாரண் யர்கள் கேழ்க்க, அதைக்கேட்ட, சூதமகாமுநிவர் கூறுவார். கேளுங்கள் மகாரிஷிகளே, ஸ்ரீராமசந்திரரானவர் வானராதி களுடனே பிரயாணப்பட்டுப்போய் தெற்பாசயனஞ்செய் திருந்து முன்சொல்லியிருக்கின்றதுபோல், நளன்முதலிய வானரவீரர்களோடும் சேதுபந்தனஞ்செய்து ஸ்வேதகிரியிற் பாளையமிறங்கி இராவணுதிகளுடனே எதிர்த்து யுத்தஞ் செய்து ஜெயித்துச் சீதாபிராட்டியோடும் புட்பகவிமானத் தேறி வருகிறபோது விபீஷணனுக்கு இலங்கையைப் பட் டாபிஷேகஞ்செய்து அழைத்துக்கொண்டு வானராதிக ளோடுங் கந்தமாதனத்திற்சேர்ந்து தநுக்கோடி உண்டுபண்ணி அக்கந்தமாதனக்கிரிச் சார்பிற் றபஞ்செய்துகொண்டிருந்த, தபோதனர்களியாவரும் ஸ்ரீராமசந்திரன் நமது துன்பங்கள் தீரும்படியாய் இராவணசம்மாரஞ்செய்து வந்தாரென்னுஞ் செய்திகேட்டு மகாசந்தோஷத்துடனே அவரவர்கள் பத்தினி மார்களோடுஞ் சீடர்களோடும் தனித்தனியே பிரயாணப்பட்டு வந்து ஸ்ரீராமசந்திரனைக்கண்டு ஆசிகூறிப்புகழ, அதற்கு ஸ்ரீராமசந்திரன் ஆனந்தமுற்றவராய் தன்னைக்கண்ட முநிவர் களுக்கெல்லாம் அற்கியபாத்தியமளித் துபசாரஞ்செய்து தெற்பாசனங்களில் எழுந்தருளப்பண்ணி ஏகாந்தமாய்ப் பேசிக்கொண்டிருக்கிறபோது ஸ்ரீராமசந்திரன் அவ்விருடி களைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுவார். வாருங்கள், தப

சிரேஷ்டர்களே, உங்களுடைய தபோபலத்தினால் இராவணாதி ராக்ஷதர்களை நாம் சம்மாரஞ்செய்துவந்தபோதினும் உங்களுடையவாக்குப் பிரசாதத்தைப்பெறவேண்டி ஓர் காரியஞ்சொல்லுகின்றோம் அதைச் செவ்வையாயோசித்து அதன் உண்மையை அறிந்துரைக்கவேண்டும். யாதெனில் கேளுங்கள், ஓ முநிவர்களே, இலங்கைவேந்தனாகிய இராவணனைக் கொன்றதோஷம் என்னைவிட்டு நீங்கும்படியாய் ஒருபரிகாரஞ்சொல்லவேண்டுமென்று கேட்க, அதைக்கேட்ட முநிவர்கள் சந்தோஷத்தை யடைந்தவர்களாய் செவ்வையா யோசித்துச் சொல்லுவார்கள். வாருமையா இராமசந்திரமூர்த்தியே, தேவரீருக்குத் தெரியாதவையொன்றில்லை யாயினும் எங்களை ஒருபொருட்டாக எண்ணிக் கேட்டபடியினாலே சொல்லுகின்றோம், யாதெனில், தாங்கள் பூலோகத்திலே வந்துபிறந்து இராஜரீகத்துக் குட்பட்டிருப்பதிலும் க்ஷத்திரியதருமப்படிக்கு தங்களுக்குண்டான தோஷம்போகவேண்டுமாயின் இந்தகந்தமாதனத்திலேவேதவிதியின்படிச்சிவபூசைபண்ணினால் சகலதோஷங்களும் நிவாரணமாய் மோட்சானந்தத்தைக் கொடுக்குமாதலால் அதுபோற் றுங்கள் செய்வீர்களாகில் அதைக்கண்டு தரிசித்தபேர்களுக்கு காசிமகாக்ஷேத்திரத்திலே கோடாநுகோடி லிங்கப்பிரதிஷ்டைசெய்தபலன் உண்டாகும். அதன்றியும், தேவரீராற் பூஜிக்கப்பட்ட லிங்கத்தின் மகிமையினாலே இந்த இடத்துக்கு எப்போதும் இராமீச்சரமென்றும் பெயர்விளங்கிக்கொண்டே இருக்குமாதலால் தேவரீர் அதிதீவிரத்தோடும் சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்ய ஆரம்பிக்கவேண்டுமென்று சொன்னார்கள். அவ்வார்த்தையைக் கேட்ட இராமசந்திரன் மனமகிழ்ச்சியோடுங் கூறுவார். வாருங்கள் மகாரிஷிகளே உங்கள் வாக்கியப்படி சிவலிங்கப் பிரதிஷ்டை செய்வதற்கு பொருந்தியதினமாய் ஓர் தினம் பார்த்துச் சொல்லுங்களென்றுகேட்க, அகஸ்தியர்முதலிய முநிவர்களெல்லாஞ் சந்தோஷமடைந்து ஸ்ரீராமசந்திரனாலே இக் கந்தமாதனச்சார்பில் சிவலிங்கப்பிரதிஷ்டை உண்டாகு

மாயின் அத்தேவனை நாமனைவருங்கண்டு தரிசிக்கலாமென்று விருப்பத்தோடுஞ் சகலருங்கூடிச் சாஸ்திரபுராணங்களை ஆய்ந்துபார்த்துச் சொல்லுவார்கள். ஐயா, ராமமூர்த்தியே, ஆனிமாத சுக்லபட்ச புதன்கிழமை அஸ்தநட்சத்திர தசமிதிதியும் விதிபாதயோகமுங்கூடிய சுபதினத்தில் அருணோதயவேளையாகும் விருஷபலக்கினத்தில் சிவலிங்கப்பிரதிஷ்டைசெய்ய தேவரீருக்குப் பொருந்திய தினமாக இருக்கின்றதென்று சொன்னார்கள். அவ்வார்த்தையைக்கேட்ட ராமசந்திரன் சந்தோஷத்தையடைந்து உடனே அநுமானையழைத்துச் சொல்லுவார். வாரும் அநுமானே, நீர் இதுவரையிலுஞ்செய்தவுபகாரங்களெல்லாம் பெரிதல்ல, நாளை உதையகால பூசைக்கு ஆகும்படியாய் சிவலிங்கங்கொண்டு வரவேண்டுமாதலால் அதிதீவிரத்தோடும் பூலோககயிலாசமாகிய காசிமகாக்ஷேத்திரத்தையடைந்து இலிங்கங்கொண்டுவாருமென்று விடைகொடுத்தநுப்பி, பின் சிவப்ரதிஷ்டைக்காகவேண்டிய சாமக்கிரியைகளைக் குறைவில்லாமல் அதிசாக்ரதையோடுஞ் சேகரஞ்செய்துகொண் டிருக்கையில் அநுமாரானவர் இராமசந்திரனிடத்தில் விடைபெற்று சகலத்ராளுங் காணும்படியாய் கந்தமாதனத்திலேநின்று விசுவரூபங்கொண்டு ஆகாசமார்க்கத்திலெழும்பிப் பின்னும் பூமியிற்றாழ்ந்து லாகுகொண்டு பாய்ந்து பூலோககயிலாசமாகிய காசிமகாக்ஷேத்திரத்தை யடைந்து கெங்கையில் ஸ்நாநம்பண்ணி தெற்பையைக் கீழேபரப்பி, அவ்வாசனத்திருந்து இந்திரியங்களையடக்கி, இடைகலை பின்கலை சுழிமுனையைக்கூட்டி நிருவிகற்பநிட்டை பொருந்தியிருந்து ஈஸ்வரப்பிரசாதங்களைப் பெற்று இலிங்கங்கொண்டு வருமுன்னதாக ருஷீஸ்வரர்களாலமைத்த முகூர்த்தம் சமீபித்துவிட்டதனாலே ஸ்ரீராமசந்திரனும், அநுமார் வரவில்லையேயென்று வரும்வழியைநோக்கிச் சிந்தித்துக்கொண்டிருக்க, அச்சமயத்தில் சீதாலட்சுமியானவள் மிர்த்திகையான மணலைக் கையினாற்குவித்து இலிங்கம்போற்செய்து விளையாடிக் கொண்டிருக்கிறபோது அதை சகலமுநீஸ்வராளும் ருஷீஸ்வ

ராளுங்காண அவர்கள்கண்களுக்கு அவ்விலிங்கமானது தெய்வீகமாய்த்தோன்ற, சகலரும் ஸ்ரீராமசந்திரனிடத்தில்வந்து சொல்லுவார்கள், சுவாமி, அநுமாரானவர் வருவதற்குள் முகூர்த்தவேளை தப்பிப்போகின்றதாக இருப்பதால், மகாலட்சுமியாகியசீதாதேவியார் தமதுகரத்தினால்மிர்த்திகையான மணலைக்குவித்து இலிங்கம்போற்செய்து விளையாடிக்கொண்டிருப்பதைப்பார்த்தால் அவற்றில் தெய்வீகம் விளங்குகின்றபடியினால் மிகவுஞ்சிலாக்கியமாயிருக்கும் அவ்விலிங்கத்தையே தேவரீர் பூசிக்கவேண்டியதென்று முனிவர்கள் சொல்ல, அதைக்கேட்ட இராமசந்திரன் சந்தோஷத்தையடைந்து எல்லாம் பிரம்மமயமென் றறிந்துகொண்டவராய் தாமுஞ் சீதாபிராட்டியும் இளையபெருமாளுந் தீர்த்தமாடி நியமநிஷ்டைகளைமுடித்து விபூதிருத்திராக்ஷங்களைத் தரித்துக்கொண்டவர்களாய் சீதைகையினாற் குவிக்கப்பட்ட மகாலிங்கசொரூபத்துக் கருகாமையாகவிருந்து சிவபூசைக்குண்டான சாமக்கிரியைகளும், பத்திரபுட்பங்களுமெடுத்து ஸ்ரீராமசந்திரமூர்த்தியானவர் சாந்தபதத்தைப்பொருந்தி அவ்விலிங்கத்துக்குத் தென்பாரிசத்திலே வியாக்ராஜிநமுதலிய ஆசனத்தின்பேரில் வடக்குமுகமாயிருந்து பூஜாஸ்தானத்தைத் திக்குபந்தனம் பண்ணி, அவகுண்டனமுதலிய தேனுமுத்திரை மகாமுத்திரையுங்கொடுத்து, இடைபிங்கலைநாடி இரண்டும் இரண்டு காற்பெருவிரலிலே நின்றுகிளம்பி மூலாதாரத்தளவு மிரண்டுரூபமாயிருந்து மேற்சுழுமுனையுடனேகூடி ஏகமாய்பிரம்மாந்திரமளவும்போயிருப்பதை இருதயகண்டத்தாலும் மூலம் புருவநடு பிரமரந்திரம் இந்தஸ்தானங்களிலே இடைபிங்கலையினாலேகூடி யொத்திருக்கும்படியாகவும் அந்த இருதயமுதல் ஐந்துதானங்களிலேயும், தாமரையரும்பு கீழ்நோக்கி இருப்பதில் உள்ளும்புறமும் பொருந்தியிருக்கிற பரமவியோமரூபினி என்னுஞ் சத்தியை யுடைத்தானதாயிருக்குஞ் சுழிமுனைநாடியை தியானம்பண்ணி, அதின்நடுவிலே ஊங்காரஞ்ஜொலிக்கும்படியாய்ச்செய்து, வாயுவைக் கும்பித்து நாசியினாலே

விடுத்து, மீளவும் வாயுவை மேல்நோக்கி சோபிகாமுத்திரையி
ஞலே கீழ்நோக்கியிருக்கிற தாமரையரும்புமேல்நோக்கி யலர்
ந்ததாகப்பாவித்து, சாந்தரசமயமாய் இதயசம்படிதனக ஊங்
காரத்தினுடைய சிகையிலே பிஜவிக்ரகனுய் ஊங்காரசிகாரி
தத்தனுய் புரியட்டகதேகத்திலேநின்றும் விடப்பட்டவனுய்
சூக்குமரூபனுய் நிராமயனுக ஆத்துமாவை தியானம்பண்ணி
வாயுவைக்கும்பித்து மேலெழும்பிச் சங்காரமுத்திரையினுலே
பிரமாதிகாரணத்தை தியாநக்கிரமமாக உச்சரித்துக்கொண்டு
ஆத்துமாவை மீளவும் தேகத்திருத்தி யோகங்களைப் புசிக்கி
றவனுக சங்காரமுத்திரையினுலே கொண்டுபோய் துவாதசாந்
தத்தினுற் சிவனிடத்திலே யோசித்துப் பின்பு பிராதவோம
தாரணத்தினுலே இதயம் கண்டம் தாது மூலம் புருவநடு
பிரம்மாந்திரதத்துவ முப்பந்தாறையும் தோற்றமொடுக்கஞ்
செய்து அவைகளிலே சத்தபரிசத்தை பிரம்மாவினிடத்திலும்
இரசத்தைவிஷ்ணுவினிடத்திலும் ரூபத்தையுங்கந்தத்தையும்
உருத்திரனிடத்திலும் மனதையும்விந்தையுஞ் சதாசிவனிடத்
திலும் யோசித்துச் சூக்கும தேகத்தைச் சுத்திபண்ணினவ
ராய் பின்பு தூலதேகத்தை சுத்திசெய்யும்படி பிருதிவிமண்ட
லம் நாற்கோணமாய் பொன்னிறமாய்க் கடினகுணமாய் லவ்
வென்னு மக்ஷரமாய் நிவர்த்திகலையாய் சத்தியோசாத மந்திர
மாய் அதிதேவதை பிரம்மாவாய் ஆயுதம் வச்சிரமாய் கெந்
தாதி ஐந்துகுணத்தையு முடைத்தாயிருக்கிற பிருதிவியைப்
பூரககும்பகஞ்செய்து மேனேக்கி யுச்சரித்துச் சத்தமுதலான
ஐந்துகுணத்தையும்போக்கிச் சோதனைசெய்து, பின்பு அப்பு
மண்டலமானது உயர்ந்த சந்திராகாரமாய் வெள்ளை நிறமாய்
நெகிழ்ந்தகுணத்தையுடைத்தா யிருக்கின்றதாய் யவ் வென்
னும் அக்ஷரமுடையதாய் தேவதை பிரம்மாவாய் ஆயுதம்
வச்சிரமாய் பிரதிஷ்டாகலையாய் வாமதேவ மந்திரமாய் அதி
தேவதைவஸ்துவாய் ஆயுதந் தாமரையாய்ப் பூரககும்பகம்
பண்ணி மேல்நோக்கியுச்சரித்து, ரசாதிமுதலிய நான்குகுணத்

தையும்போக்கிச் சோதனைசெய்து பின்பு தேயுமண்டல மானது மூன்றுகோணமாய் சிவந்தநிறமாய் வெப்பமான குணத்தை யுடைத்தாயிருக்கின்றதாய் ரவ் வென்னும் அட்சர முடையதாய் வித்யாகலையாய் அகோரமந்திரமாய் அதிதே வதை உருத்திரனாய் ஆயுதஞ் சுவகத்திகமாய் ரூபாதிமூன்று குணத்தையு முடைத்தாயிருக்கிற தேயுவைப் பூரக கும்பகம் பண்ணி மேல்நோக்கி உச்சரித்து ரூபாதிமுதலான மூன்று குணத்தையும்போக்கிச் சோதனைசெய்து, பின்பு வாய்வுமண் டலமானது அறுகோணமாய் கறுப்புநிறமாய் தண்மையான குணமுடையதாய் யவ் வென்னும் அட்சரமாய் சாந்திகலை யாய் தற்புருஷமந்திரமாய் அதிதேவதை மஹேசுரனாய் ஆயு தம் அறுபுள்ளியாய் பரிசாதி இரண்டு குணத்தை யுடைத்தா யிருக்கிற வாயுவைப் பூரகம்பகஞ்செய்து மேல்நோக்கி உச்ச ரித்துப் பரிசாதி இருகுணத்தையும் போக்கிச் சோதனை செய்து, பின்பு ஆகாசமானது வட்டமாய்ப் படிகநிறம்போற் பூரணகுணமாய் ஸவ் வென்னு மட்சரமாய் சாந்திதாகலையாய் ஈசானமந்திரமாய் அதிதேவதை சதாசிவமாய் ஆயுதமமுத விந்துவாய் சத்தகுணமொன்றும் உடைத்தாயிருக்கின்ற ஆகா சத்தைப் பூரக கும்பகம் பண்ணி மேல்நோக்கி யுச்சரித்து சத்தகுணமொன்றையும் போக்கிச் சோதனைசெய்து, ஆகாசத் தை சத்தியினால் மறைக்கப்பட்டதாய்ப் பாவனைசெய்து, இவ் விதந் தன்னுடைய தேகத்தைச் சோதித்துச் சர்வசூன்னிய மானபின்பு பிரமரந்திரபரமத்திலேநின்று வீழாநின்ற அமிர்த தாரையினாலே தன்னுடைய சரீரமுழுதும், நாடிகளிலே அமிர்தத்தைக்கொண்டுவந்து தேகமுழுதும் நனைத்து, இதய பரமாசனத்தில் கன்னிகையிலே நான்குகலையுடனே பிரண வத்தினாலே பிரமன் முதலிய ஐந்துபேர்களிடத்தும்போய் அடங்கியிருக்கின்ற புரியட்டக தேகத்தைக் கொண்டுவந்து அந்த தேகத்தின் துவாதசாந்தத்திலே, பீஜரூபமாய் சிவமாக இருக்கிற ஆத்மாவை ஆரம மந்திர பூரகத்தினாலே சிருஷ்டிக் கிரமமாக சங்காரமுத்திரையினாலே கொண்டுவந்து சேர்த்து

மந்திரத்தினுலுச்சரித்து, சிவன் சத்தியினுற் கலக்கப்பட்டிருக்கிற விந்துவினிடத்தினின்றும், பெருகாநின்ற அமிர்தத்தினுலே அந்த ஆத்மாவை அபிஷேகம்பண்ணினவராய், தூலதேகசுத்தி செய்துகொண்டு, பின்பு நாபிகந்தத்திலே எட்டங்குலமான ஞாயத்தையுடைத்தாய், எட்டிதழ்களுடனே கூடிய வெண்டாமரைப் புட்பம்போலிருக்கிற இதயாசனத்திலே சோதிமயமாக யிருக்கின்ற இலிங்கத்தில், துவாதசாந்தத்திலிருக்கிற சிவனை யாவாகனம்பண்ணிச் சகல மந்திர தந்திரங்களுடனே அபிஷேக நிவேதன சோடச உபசாரத்துடனே பூசையும், பகிர்முகாற்கிய முடிவாக மானதபூசையாகப் பண்ணினவராய், மந்திரங்களினுலே தானத்ரையம், திக்குபந்தனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, மகாமுத்திரையுங் கொடுத்து, பூஜாஸ்தானத்தை சுத்திசெய்து, விந்துஸ்தானத்திலே நின்றும், பெருகாநின்ற அமிர்தமாகுஞ் சுத்தஜலத்தினுலே பூரித்து, மந்திரங்களினுலே அற்சித்து, அபிமந்திரித்து, திக்குபந்தனம், அவகுண்டனம், தேநுமுத்திரை, மகாமுத்திரையுங்கொடுத்து அந்த அற்கிய ஜலத்தினுலே தன்னையும் புரோட்சித்துக்கொண்டு பூசையும் ;காண்டத்ரவியங்களையும் பிரோட்சித்து திருமஞ்சனகுடத்துக்கு பந்தனம் அவகுண்டனம், தேனுமுத்திரை, மகாமுத்திரையுங்கொடுத்து, திவ்வியசுத்தி பண்ணிக்கொண்டவராய் தன்னுடைய ஆசனத்தை மந்திரத்தினுலே பூசித்து, லலாடத்திலே சந்தனமிட்டு, மந்திரத்தினுல் அற்சனைசெய்து, மூலமந்திரத்தைத் துவாதசாந்தமளவாகவும், பஞ்சப்பிரம்மமந்திரத்தை பிரம்மரந்திர மளவாகவும், சடங்களை விந்துபரியந்தரமாகவும், மந்திரசுத்திசெய்துபின்பு சீதாலட்சுமிகையினுலே நியமிக்கப்பட்டவராசவிருக்குஞ் சிவலிங்கத்திலே அஷ்ட புஷ்பபஞ்சரத்திற் சுத்தஜலம்பண்ணி எண்ணைக்காப்பு, மஞ்சட்காப்பு, நெல்லிக்காப்பு, பஞ்சாமிர்தம், பஞ்சகவ்யம், பசுவின்நெய், இளநீர், வில்வக்குழம்பு, பச்சைகற்பூரம், பால், தயிர், தேன், சற்கரை, கருப்பஞ்சாறு, வாழைப்பழம், மாம்பழம், பலாப்பழம் முத

விய பழவற்கங்கள், ரசவற்கங்கள், இவைகளினாலே மந்திரவிதி யாய் அபிஷேகம் பண்ணி, இடையிடையே சுத்தஜலமான கோடிதீர்த்தமும், அபிஷேகம்பண்ணி அஷ்டபுட்பமுந் தீப மும் அற்கியமுங்கொடுத்து, பின் சுத்தஜல வபிஷேகஞ்செய்து, மறுபடியும், சுத்தஜலங்களினாலே ஒருதரம், சகஸ்ராவிந்த சந்தனக்குழம்புவரையிலும், விதிப்படி அபிஷேகம்பண்ணி ஆசமனாற்கியங்கொடுத்துப் பின்பு சுத்தஜலத்தா லபிஷேகஞ் செய்து, உயர்ந்த பரிவட்டம், பீதாம்பரங்கள் சாத்தி, அப் பால் மகாகணபதியையும் தியானித்துப் பூஜித்து, சன்னி தான அற்கியங்கள்கொடுத்துப்பிரார்த்தித்துக்கொண்டு, பீடத் துக்குக்கீழே பிரம்ம சிலைக்கு நடுவே கூரும சிலையிலே ஆதார சத்தியைப் பூஜித்து, பிரம்மசிலைக்குமேலே அனந்தாசனத்தை தியானம்பண்ணிப் பூஜித்து, அதன்மேல் நான்கு யுகமும், வெள்ளை, சிகப்பு, மஞ்சள், கறுப்பு நிறமாயும், ஒன்றுக் கொன்று பின்பார்த்த பார்வையாயும், தியானம்பண்ணி அத ற்குமேற் சட்டமும், அப்படியே தியானித்து, அவ்வாறு தியானித்த சிங்கக்காலின்மேற் சடரூபமாகத் தியானம்பண் ணிப் பூஜித்து, அதற்குமேல் ஈசான்யதிக்கிலே வெள்ளைநிற மாய் சுத்தசொரூபமாக ஊர்த்தச்சதனத்தை தியானம்பண் ணிப் பூஜித்து அதின் நடுவினும், மேலினும், மாணிக்கநிற மான கிழங்கும், பவழம்போன்ற முளையும், நீலநிறமான நாளமும், வெள்ளிநிறமான ஸ்தனங்களும், சொர்ன்னநிறமான கேசரமும், அதன்நுனியை முத்தைப்போலுந் தியானம் பண்ணிகிரமமாய் மந்திரத்தினாலே தியானித்துப் பூசித்து, அதினடுவே ஒடனைத்த பொன்னிறமான விரைகளையுடைத் தாயிருக்கின்ற கன்னிகையை தியானித்துப் பூஜித்து, பின்பு எட்டுத்திக்கிலுள்ள எட்டிதழிலும், வாமாதிகளாவிருக்கின்ற எட்டுச் சத்திகளையும், கன்னிகை ஈசான்யத்திலே மனோன் மணியையும், தியானித்துப் பூஜித்து, தளத்தின்நுனி வட் டத்திலே சூரியமண்டலம், சந்திரமண்டலம், அக்கினிமண் டலம், சத்திமண்டல முதலானதுகளையும், அதற்குரிய அதி

தேவதைகளையும் தியானித்துப் பூஜித்து, அதன்மேல் ஆதார சத்தி முதலாய், குடிலாசத்திபரியந்தம், வியாபகமாய் மந்திர வித்தாய், சிவாசனத்தை யோசித்துப் பூஜித்து, சிவமூர்த்தியைத் தெரிசனமாய் தெண்டாகாரமாய் தியானம்பண்ணிப் பூஜித்து, கையை முஷ்டியாகப்பிடித்து, சுவாமியினுடைய சிரம், முகம், இதயம், நாபி, முழங்கால்களிலே மந்திரங்களினாலே கிரமமாய் தெண்டபத்ரியாயம்பண்ணி, ஈசானம், தற்புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோசாத்தையும் கிரமப்படி அந்தந்ததிக்கிலே முண்டபந்தினியாசம்பண்ணி யோகபீடத்தைப் பூஜித்து, ஆதாரசத்திமுதலாய், குடிலாசத்திபரியந்தம், வியாபகமாயிருக்கிற மந்திர சிங்காசனத்திலே பரமாசனத்தில் முன்சொன்ன மகாலிங்க சொரூபமாயிலங்குபவராயும், சுத்த படிகநிறமாயும், முப்பத்திரண்டு லட்சணங்களையு முடைத்தானவராய் ஐந்துமுகமும், அம்முகங்கடோறும் ஞானசத்தி, கிரியாசத்தி, இச்சாசத்திசொரூபமாயும், விசாலமாயிருக்கின்ற திரிநேத்திரத்தையு முடைத்தானவராய், ஞான சந்திரகலையோடுங்கூடி இருப்பவராய் ஐந்து முகங்களும், ஐந்து வருணமாயிருப்பவராய், நாகாபரணராயும், சாந்தராயும், அர்த்தசந்திர ஜடாமகுடராயும், பத்துகரங்களை யுடையவராயும், வலப்புறமோங்கு மைந்துகரத்திலும், சுத்தி, கத்தி, சூலம், கட்டுவாங்கம், வரதமும், இடக்கர மைந்திலும், டமருகம், மாதளம்பழம், நாகம், செபவடம், நீலோற்பல முடையவராகவும், தியானஞ்செய்து, இலிங்க பாவனையை விடுத்து வித்தியாதேகமாய்ப் பாவித்து, அஞ்சலியஸ்தத்தினாலே இலிங்கத்தில் பிரம்மரந்திராந்த வியாபகப்பிரசாதமாக உச்சரித்து, மின்னின்சமுகம் அஞ்சலிக்குள்ளே யோசித்துத் தியானித்து பஞ்சமுகத்திலும் நேத்திரங்கொடுத்துப் புட்பங்களினாலே கைகளை நிறைத்து அஞ்சலிபண்ணிக்கொண்டு மூல மந்திரத்தினால் துவாதசாந்தமளவாக உச்சரித்து, சமனாந்தமான பாசசலத்தைக்கடந்துபோய், நிஷ்களமாய், சர்வகாரணமாய், வியாபகமாய், தத்துவாதீதமாய், ஞானாநந்த சொரூபப்

பிரகாசமாய் தியானம்பண்ணி சிருஷ்டிக்கிரமமாக விந்துஸ்தானமளவாக கொண்டுவந்து அதில் நின்று அஞ்சலிக்குள்ளே அநேகங்கோடி சந்திரப்பிரகாசம்போல எழுந்தருளச்செய்து, பேசித்து விந்துநாதசொரூபமாய் இலக்கியமாகவிருக்கின்ற மூர்த்தியிலே ஆவாகன முத்திரையினாலே மந்திரதிரத்தினால், ஆவாகனஸ்தாபனம், சன்னிதான சன்னிரோதனம்பண்ணிச் சுவாகாந்தம் விண்ணப்பஞ்செய்து அநுக்ரகம்பெற்றவராய் அற்கியங்கொடுத்து, இருகரங்களேயுஞ் சிரத்தின்மீது நியாசம் பண்ணிநாகத்வ மகாமுஷ்டிகரமாய்ச்செய்து, திக்குபந்தனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, மகாமுத்திரை, கோகர்ன்ன முத்திரை, இலிங்கமுத்திரை, நமஸ்காரமுத்திரை என்னும் பஞ்சமுத்திரையுங்கொடுத்து, அந்தந்தஸ்தானங்களிலே அற்கியபாத்தியங்களளித்து, மந்திரவிதியாய் அறுகு அக்ஷதை புட்பஞ்சாத்தி, தூபதீபங்கொடுத்து, பின்னும், ஆசமனற்கியங்கொடுத்துச்சாத்திப் புட்பத்தைக்கழித்து மறுபுட்பஞ்சாத்தி, எண்ணேக்காப்பு முதலிய அபிஷேக திரவியங்களே மனதிலே பாவித்து அபிஷேகம் பண்ணினதாக ஒருபுட்பத்தை விசேஷாற்கியத்திலேதோய்த்து, ஒரு துளி மூலமந்திரத்தினால் இலிங்கத்துக் கபிஷேகம்பண்ணி மெல்லிய பரிவட்டத்தினாலே திருப்பொன்னுடைசாத்தி, மந்திரத்தினால் ஓர் புட்பஞ்சாத்தி, மந்திரான்னம் நெய்வேதனம்பண்ணி சந்தனம், அக்ஷதை, அறுகு, தாமரைப்பூச்சாத்தி, பொன்னினரைநாண், கௌபீனமேகலை, உபவீதம், குண்டலம், ஆபரணம், விசித்ர வஸ்த்ரங்கள், கிரீட கேயூர மணியாபரணங்கள், தண்டை கிண்கிணி வண்டயஞ் சிலம்புகள் முதலிய ஆடையாபரண பூஷணுதிகளே மனதிலே பாவித்துச்சாத்தி, மூன்றுதரம் மந்திரத்தினாலே புஷ்பாஞ்சலிசெய்து புஷ்பஞ்சாத்தி, கொன்றைமாலே முதலிய திவ்ய புஷ்பாலங்கிருதஞ்செய்து, மணிநாதத்தொனிகள்செய்து மனோரத முத்திரையுங்கொடுத்து, லாயங்கம் பூசித்து அற்சித்து போகாங்கத்தைப் பூசிக்கும்படியாய் ஈசான்யமுதல், சத்தியோசாதம் வரையிலும்,

நேத்திரமுதற் கவசம்வரையிலும், மந்திரங்களினலே போகாங்கம் பூசித்து அற்கியங்கொடுத்து, ஈசானத்துக்கு தேனுமுத்திரையும், தற்புருஷத்துக்குப் பரமமுத்திரையும், அகோரத்துக்கு திரிசூலமுத்திரையும், வாமதேவத்துக்கு மகா முத்திரையும், சத்தியோசாதத்துக்குச் சுருக்குமுத்திரையுங்கொடுத்து, மற்ற அங்கங்களுக்கு நமஸ்கார முத்திரையுங்கொடுத்து, புஷ்பாஞ்சலிதிரையஞ்சாத்தி மகாமுத்திரையுங் கொடுத்து, பஞ்ச பிரம்மங்களும், இதயமுதலிய அங்கங்களும், சிவனுடனே கூடியிருக்கிறவைகளாகப் பாவித்து தீபதூப முதலாய சோடச உபசாரங்களுஞ்செய்து, ஆசமனற்கியங் கொடுத்து, திவ்யான்னங்களும், சித்ரான்னங்களும், பால், பழம், சற்கரை, நெய், பலகாரங்களும், நானுவிதமான கறிவற்கங்களும், வாசனை பொருந்திய ஜலமும்படைத்து நிரிக்ஷணுதி சுத்தி பண்ணி அற்கிய ஜலத்தினலேபுரோக்ஷித்து, மந்திரத்தினல் அபிமந்திரித்து, திக்குபந்தனம், அவகுண்டனம், தேனுமுத்திரையுங்கொடுத்து திவ்யமுத்திரையை தெரிசிப்பித்து, கௌரிகையினல் நிவேதித்துபாவனைசெய்து தற்புருஷ முகத்திலே நிவேதித்து, ஆசமனற்கியங்கொடுத்து, சோடச உபசாரங்களுஞ்செய்து, அஞ்சலிபுட்பஞ்சாத்தி கற்பூரதீபங்கொடுத்து, அனந்தாதிகளாலே தோத்திரம் பண்ணப்பட்டு, சந்துஷ்டியாயிருக்கின்றவராகச் சிவனைத் தியானம்பண்ணி, மூலத்தினலே புட்பாஞ்சலித்திரையஞ்சாத்தி, மகாமுத்திரை பஞ்சமுத்திரையுங்கொடுத்து, ஜெபவட்சதை நிரிக்ஷணுதி சுத்திபண்ணி அபிமந்திரித்து, இடதுகரத்திலே புட்பங்களை வைத்துக்கொண்டு ஜெபமாலையினலே நூற்றெட்டுரு ஜெபித்து, புட்பத்தை வலது கரத்தில்வாங்கி அற்கியஜலத்துடனே மந்திர பூர்வகமாய்ச் சாங்கிபோகாங்களுக்குந் தனித்தனியே மந்திரத்தினற் பத்துரு ஜெபித்துச்சாத்தி, சுவாமிக்கு அக்கினி திக்கிலே சடுத்தாசனம் பூசித்து, அதிற் சிவகுருவை ஆசனத்தினலே ஆவாகனுதி ஜெபாந்தமாகப் பூஜித்து தோத்திரம் பண்ணிப் பின்பு, சுவாமிக்கு மேற்புறத்திலே யோகபீடம்,

சித்தியாபீடம் பூஜித்து, அற்கியமுங்கொடுத்து, சுவாமிக்குப்
புட்பாஞ்சலித் திரையமாக நாமகரணம், இராமநாதரென்று
சாத்தி, அநேக வேதமந்திர சுருதிவாக்யப் பிரமாணங்க
ளாலே தோத்திரங்களுடனே சீதாதேவியார் பின்றொடர்ந்து
வரும்படியாயும், தான் இலட்சுமணருடனே எழுந்திருந்து
சகல தேவரிஷிகளும், தபோதனாதிகளும் புடைசூழ்ந்துவர
ஸ்ரீராமநாதனை முப்பிரதட்சணஞ்செய்து, மகா அன்போடும்
பூமியிலே விழுந்து, அஷ்டாங்க பஞ்சாங்கத்துடனே நமஸ்
காரஞ்செய்து எழுந்திருந்து, சிரத்தின்மேற் கரங்களைக்கூப்
பிக்கொண்டு ஆனந்தக்கூத்தாடி, தேகமயிர்க்குச்செறிய, வாய்
குளற, கண்ணீர் ததும்பி மலையருவிபோற் றாரைதாரையாய்ப்
பெருக, அடிக்கடி கைகளைக்கொட்டி யாதுந்தோற்றாமல்,
எங்குஞ் சுயம்பிரகாசமாய் மகா ஆனந்தத்துடனே அன்பு
பெருகி நிற்கும்போது, அந்த ராமலிங்கத்திலே யிருந்து
கோடிசூரியப்பிரகாசம்போல் ஓர் தேஜசுதோன்றி அதனோடும்,
மான்மழு சதுர்ப்புஜ காளகண்ட திரிநேத்திர சந்திரகெங்காதர
ஜடாதாரியாயும், மகரகேயூர குண்டல மணிமகுடதாரியாயும்,
ஆடையாபரண பூஷணாலங்கிருத அர்த்தநாரியாகாரயும், அர
வாபரண கங்கண உருத்திராக்ஷ விபூதிதாரியாயும், மச்ச
என்பு, கூர்மத்தின் ஓடு, வராகத்தின்கொம்பு, நரசிங்கத்தின்
நகங்கள், புலியுடை, ஆனையுரி, பிரமகபாலம் முதலிய பக்தா
ளுடைய சிரமாலை, வில்வக்குழை, துளசிமாலை, விருஷபவாக
னத்தின்மீது பார்வதிசமேதராய் முப்பத்துமுக்கோடி தேவர்
களும், சித்த, கின்னரர், காந்தருவர், கெணாதர், சிவபக்தர்
களும் புடைசூழும்படியாய் எழுந்தருளி, ஸ்ரீராமசந்திரனைப்
பார்த்து, வாரும் இராமசந்திராவென்றவுடனே, பிரமஹத்தி
யானது காற்றோடுகாற்றாய்த் தொலையப் பரமேஸ்வரன் கூறு
வார். நீரிந்த கந்தமாதனத்திலே சேதுதநுக்கோடி தீர்த்தமாடி
நம்மையும் விதிப்படி பூஜித்தமையினால் உம்முடைய பாபங்க
ளெல்லாம் நீங்கிவிட்டது. இனிமேல் பூலோகத்திலே சேது
தநுக்கோடி தீர்த்தங்களை விதிப்படியாடி நம்மைப் பூஜித்து

வணங்கிய பேர்களினுடைய சகலபாபங்களும் விமோசனமாகி நம்முடைய பதங்களைப்பெற்று மோட்சத்தையடைந்து பிரம்மானந்தத்தை யநுபவிக்கக்கடவார்களென்றும் வாக்களித்துப் பின்னுங் கூறுவார். இராமசந்திரரே, நம்மை இந்தகந்தமாதனத்திலே யாரொருவர் உம்மைப்போற் பூஜிப்பார்களோ, அவர்களுக்கு அநேகவரப்பிரசாதங்களும் இஷ்டகாம்மிய மோட்சகாம்மியங்களும் பிரம்மானந்தமும்பெருகி வாழக்கடவர்களென்றும் வாக்களித்துப் பின்பு அந்த இராமலிங்கத்திற்றானே, அத்தேஜசுடனே அயிக்யமாய் எழுந்தருளியிருந்தார். இப்படி இராமநாதன் தெரிசனந்தந்து வரப்பிரசாதங்கள் அளித்ததைக் கண்டிருந்த சகலதேவரிஷிகளும் ரிஷீசுவராளும் முநீஸ்வராளும் தபசிகளும், விபீஷணன் சுக்ரீபன்முதலிய வானராதிகளும், அவரவர் தனித்தனியே மிருத்திகைகளை வர்ணித்து வேதாகமப்பிரகாரம் தப்பாமற் சிவபூசைசெய்து முடித்து அநேக தோத்திரங்கள்செய்து, ஆனந்தக்கூத்தாடினார்கள். அப்போது ஸ்ரீராமசந்திரன் முதலானபேர்களெல்லாம், அப்படியே தோத்திரஞ்செய்துக்கொண் டிருந்தார்கள். கேட்டீர்களோ முநிவர்களே, இவ்வாறிருக்கையிற் கயிலாசபதியைப்போன்ற காசிமகாக்ஷேத்திரத்திற்குச்சென்று இலிங்கங்கொண்டுவரச்சென்ற, அநுமாரும் ஈசுவரப்பிரசாதமாய் இரண்டு லிங்கங்களைக்கொண்டு மகாஜாக்ரதையோடும் விகவசொரூபங்கொண்டு கந்தமாதனத்திற்குதித்து ஸ்ரீராமச்சந்திரனையும், சீதாதேவியையும் லட்சுமணரையுஞ் சுக்ரீபனையுங் கண்டு நமஸ்கரித்து பார்க்கும்போது, சிவபூசைநடந்தேறித் தோத்திரஞ்செய்துகொண் டிருப்பதைக்கண்டு வியசனங்கொண்டு பெருமூச்செறிந்து கூறுவார். சுவாமி, இராமசந்திரமூர்த்தியே, நான் வீணே நெடுந்தூரம்போய் இலிங்கங்கொண்டுவந்தும் பிரயோசனப்படாமல் போயிற்றே என்று கண்ணீர் தாரைதாரையாய்ச் சொரியவிடுத்து, தேவரீருக்கு இந்தமன துண்டாகியவிதம்யாதோ அறியேன், அந்தோ நான் இந்தஜன்மத்திலே இராகத்வேஷங்களுடனே கூடிக்கொண்டு

ஊன்றின்னும்பொருட்டாய் இன்பதுன்பங்களையறியாத மற் கடபுத்திக்குச்சரியாய்நடந்து தேவர் இராட்சதாள் மனிதர் களாலே இம்சைகளையடைந்து பிரயாசிக்கும்படியாய் எனது தாய்தந்தையர்கள் என்னைப்பயந்து வளர்த்துப் பரிபாலனஞ் செய்துவந்தவர்களாகிலும் இவ்வகைத்துன்பத்துக் கிடமாய்க் கரைகாணுமல் அலைந்துதிரிந்த என்னை, தேவரீர்தடுத்தாட் கொண்டு நான்பட்ட சிரமத்தையெல்லாந்தீர்த்து வெற்றி யடையும்படிக் கிருபைசெய்து அதனாலே, அநேகங் கீர்த்தி களைப்பெற்று சுத்தவீரதத்துவத்தோடும் விளங்கும் என் னைப் பெற்றபிள்ளையைப்போல, ஆதரித்துக் கொண்டுவந் திருக்க, இப்போது, அடியேன், என்னகுற்றஞ் செய்தேன் தேவரீராயினுஞ் சீதாபிராட்டியின் பொருட்டு இவ்வளவு பிரயாசையடைந்தும் சுக்ரீபர் விபீஷணர்முதலிய வானரவீரர் களியாவரும் அவரவர்கள் சுகமாய்ப் பட்டாபிஷேகஞ்செய்து கொண்டு வாழவேண்டுமென்றும் தேவரீர் பின் ஏவற்பணி செய்து நடந்துவருகிறார்கள். அடியேன், என்னகாரணத்தால் இதுவரையில் பணிசெய்துவந்தேன், மேலும், இவடத்தில் சகலதேவர்களும்,முநீஸ்வரராலும் வானராதிகளுஞ் சுத்தவீரர் களுமாகிய கோடானுகோடிபேர்களிருக்க அவர்களை எல் லாம் விடுத்து என்னைப்போய்ச் சிவலிங்கங் கொண்டுவரச் சொல்லி யான் கொண்டுவந்தபிறகு அதனை உபயோகப்படுத் தாமல் என்னை அவமானப்படுத்தவோ நான் கயிலாசம்வரைக் கும்போய்ச் சருகாகத் தேகத்தையுலர்த்தி நிஷ்டைசெய்து வரப்பிரசாதத்தினால் நான் இலிங்கங் கொண்டுவருவதற்குள் ளாக மணலைக்குவித்து என்ன அவசரநிமித்தமாய்ப் பூசையை முடித்தீர்கள். ஆயினும், மகாலிங்கசொரூபத்தை முன்செய்த தபோபலத்தினால் பூசைசெய்யும்படியான நன்மையும் புண் ணியமும்பெற் றிருக்கவேண்டும். அவ்வாறு புண்ணியங்கள் செய்யாதபேர்களுக்கு ஒருபோதுங் கிட்டாதென்று சுருதி வாக்கியஞ் சொல்லியிருப்பது என்னளவிலே பலித்ததென்று மிகவுந் துன்பத்தையடைந்தவராய் பின்னுஞ் சொல்லுவார்.

தேவரீர், இப்படி நினைத்து அடியேனைக் கைவிட்டபோதே, இனி என்னகதி இருக்கின்றது. யான்செய்தபாபமே இப்படி வந்து சம்பவித்ததுபோலு மிருக்கின்றதென்றும் தேவரீருக்கு ஊழியஞ்செய்தவுடலை வைத்திருக்கப்படாதென்றும் உயிரை மாய்த்தாலொழிய இத்துன்பந் தீராதென்றும் அநுமார் ஏங்கி யேங்கி நெடுமூச்செறிந்து என்னமாய்முடிந்தது நம்முடைய சுத்தவீரத்தன்மையென்று வாய்விட்டலறி, ஸ்ரீராமசந்திர னுடைய பாதாரவிந்தத்திலேவீழ்ந்து அடித்துமோதி, என் பழியை ஏற்றுக்கொள்ளுமென்று கூக்குரலிட்டார். அப் போது ஸ்ரீராமசந்திரமூர்த்தியுங் கருணையோடு அநுமாரைக் கட்டி யணைத்தெடுத்து அவர்மேற்பட்டிருக்கிற தூசுகளைத் துடைத்து முதுகைத் தடவிக்கொடுத்துச் சொல்லுவார். வாராய் அநுமானே, யான் என்னுடைய நிலையையும் என்னை யன்றி நின்னைப்போன்றவர்களினது நிலையையும் அறிவேன். அஃதெப்படியெனில், உலகின்கண் ஆன்மகோடிகளுடைய உயிர்களெல்லாம் ஒன்றேயல்லாமல் இரண்டிலையே அதுபோல் உள்ளதை உள்ளதாய்ப்பார்க்கிறபோது நீவேறு நான்வேறாக மாட்டாது. ஆதலால் பிறப்பதும் இறப்பதும் முன்செய்த கன்மாநுபவப்படியே நடக்கும். அவ்வினைக்கீடாய் நன்மை தீமைகளும் நரகசொற்கமும் கிடைக்கும், இவ்வளவுகாரியங் களும் நடத்தும்பொருட்டு சைதன்யமே எங்குந் தானாக விருந்து நானாவிதரூபமான பேதாபேதங்களெல்லாம் மனக் கட்டேயன்றி வேறில்லை. இதல்லாமலும் நீ என்றும் நானென் றும் பேதமுண்டோ, நான்செய்தது நீ செய்ததல்லவோ, நீ செய்தது நான்செய்ததல்லவோ, எங்குஞ் சுயம்பிரகாசமாயும் சுயஞ்சோதியாயும் ஆண்பெண் ணலியல்லாமலும் ஆதியந்த மில்லாமலும் விளங்கிக்கொண்டிருப்பதுவே ஆத்துமசொரூப மாக்கும், அப்படிக்கொத்த ஆத்துமசொரூபமே நீயாய் தான வனுய்ப்பார்த்து விளங்காமல் அகங்காரமுறுவது சரியல்ல, ஆதலால் தருமத்தை மனதிலே சிந்தனைசெய்து சாவகாசத் தையும் இந்திரியாதி நாட்டங்களையும் பொறுமையையுந் தவிர்

த்தாச் செவ்வையா யோசித்துப்பார்த்தால் சகலதேவர்களுந் துதிசெய்யப்பட்ட கர்த்தனுடைய பாதாரவிந்தத்திலே வந்தனைசெய்து வணங்கி தோத்திரஞ்செய்து உள்ளும்புறமுமாய் ஒன்றாய் நிறைந்து அறிவேசொரூபமாய் விளங்கப்பட்ட பிரமமே நிச்சயவஸ்துவாகவும் மற்றவை எல்லாம் பொய்யாகவும் ஒரு கற்பனை உண்டாகிறபோது, சயிதன்யத்தின் அருள் உண்டாகும். அப்படியல்லாமல் இராகத்வேஷங்களினால் தேவர் மக்கள் விலங்கு புள் ஊர்வாழ்வன நீர்வாழ்வன தாவரமென்னும் கோடாநுகோடி ஜென்மங்களாய்ப் பிறந்து வழி தெரியாமற் சகலருங் கெட்டுப்போகின்றார்கள். அப்படி எடுத்த நாற்றவுடலத்தை சந்தனகளபங்களால் மறைக்கவேண்டி இருக்கின்றது. பின்னும் நெய்பால் தயிர்சற்கரை இவைகளைச் சாப்பிட்டாலும் அதற்குந் துற்கந்தமுண்டாவதறிந்தும் இத் தேகத்துக்கு ஆடையாபரணதிகளை நிறைத்து அழகுசெய்யாமற்போனால் மலஜலக்கோளை மாம்சஞ் சீ இரக்தங்களானது இச்சடத்தினுடைய துவாரத்துக்கு துவாரம் மயிர்க்கால்களின்வழியாய்ப் பெருகிக்கொண்டேயிருக்கும் அத்தன்மை பொருந்திய இப்புழுக்கூட்டைச் சுதந்தரமாயெண்ணி நீ நானென்னும் வேற்றுமைசெய்யவேண்டுமோ, அப்படி ஊறப்பட்ட நாதவிந்துகள்கூடி ஓர் புழுக்கூடாகவெடுத்த நமக்கு என்னபேதமிருக்கின்றது. இங்ஙனம் அடையும் இன்பதுன்பம் யாராலே எண்ணக்கூடும்.

இவ்வித அவமானத்தினாலே மானமென்பதைப் போக்கடித்தபேர்களுக்குப் பிறப்பிறப்புக்களில்லை. இதன்றியும், இந்தப்பிறப்பிலே இடும்பையும் பொய்யும் விடுமாயின் இன்பதுன்பமும் போய்விடும். ஆதலால், இப்படியே சகல உயிர்களும் பிறந்துபிறந்து அழியும், உன்னைப்போல் விவேகமுள்ளபேர்கள் இடும்பையாகிய கோபத்தைப் பொருளென்றெண்ணுவார்களோ, பின்னும் கண்ணில்லாத அந்தகன் மார்க்கத்திற் போகும்போது, அம்மார்க்கத்திலிருக்குங் குழியையறியாமல் விழுவானாயின் மறுபடியும் அம்மார்க்கத்தை யுன்னுவானோ,

அதுபோல் இந்த மானத்தினலே உண்டாகிற இன்பதுன்பம் நீங்கிவிட்டால், எப்போதுஞ் சுகத்தை யநுபவிக்கலாம், பின்னும் வேதாந்தங்களினற் சொல்லப்பட்ட ஞானத்தை யறிந்து பார்த்தால் அதில் மூன்றுவாக்கியங்களுக்குள்ளே சகலமும் ஓடுங்கியிருக்கும், அப்படிக்கொத்தவாக்கியம் எப்படிகிடைக்குமெனின், ஓர் வீட்டில் தீப்பிடித்து நான்குபக்கமுஞ்சுற்றி வளைத்துக்கொண்டு எரிகிறபோது அவ்வீட்டுக்குடையவன் அவற்றிலுள்ள வஸ்துக்களை எடுக்கத் தோன்றுமற் சகலத்தையும் வெறுத்துத் திரும்பிப்பாராமல் எப்படிச் செல்வனே, அதுபோல் தன்னுடைய அக்யானவீட்டிலே ஞானத்தீயானது பற்றி எரிந்து அதனற் சகலபண்டபதார்த்தம் பெண்டு பிள்ளைகள் தனகனகவஸ்துவாகனங்களையும்வெறுத்து, திரும்பிப்பாராமல் வந்து குருசன்னிதானத்திலே தொண்டுசெய்து அவருடைய கிருபாகடாக்ஷத்தினலே அறிந்துக்கொண்டால் அவ்வுண்மையானது ஒன்றுய்த்தெரியப்படும். அப்படிக்கல்லாமல் இடும்பையான கெருவத்தை மனதில் வகித்தபேர்களுக்கு அந்தப்பிரமையானது இப்படியே வாதிக்கும், அப்படிக்கொத்த வாதனைகளுண்டாகி ஞானமழிந்துபோய் யாதொருபுண்ணியமு மடையாமல் உணவருந்தி உறங்கிவிழிக்கின்ற பேர்களுக்காகவே காலனென்றுருவனையுண்டாக்கி யிருக்கின்றது, மேலும் நாம் காண்பனவெல்லாம் அழியும், உயர்வெல்லாந் தாழும், தாழ்வெல்லாம் உயரும், பழுத்தமரமானது எப்போதும் உதிர்ந்துகொண்டே இருக்கும், அதுபோற் பிறந்தசரீரம் இறப்பதே வழக்கமாயிருப்பதனலே, இச்சரீரம் நிலையல்ல, அழிந்த சரீரம்வரமாட்டாது, சென்றநாட்களும் வரமாட்டாது, பின்னும் தான் அழியாமலிருக்கவெண்ணி, அடவியிலும் குகைமுதலிய விடங்களிற்போய் ஒளித்தாலும் ஆகாசமார்க்கமாய்ப் பறந்தாலும் ஆடகலோகம் போயிருந்தாலும் அலைகடலில்ஒளித்தாலும், பிறப்பிறப்பு ஒற்றுமையானதனலே ஓர் நிமைப்போதுகூடவுந் தப்பாமற் காலன்வந்து கொண்டு போய்விடுவான். இதல்லாமலும் உலகிற் ஜனித்த எச்சடத்தி

னும் உயிர்வந்துகூடுகிறதும் பிரிகிறதும் எப்படியிருக்கிறதென்றால் சமுத்திரத்திலோர் துறையில் நாவாய்கள் தோணிகள் கூடியிருந்து அப்பால் அவரவர்கள் நினைத்த இடங்களுக்குக் கொண்டுபோய்விடுகிறதுபோலும், வழிப்போக்கரானபேர்கள் இரவுகாலங்களில் ஓர் இடத்திற் கூடியிருந்து விடிந்தவுடனே, அவரவர்கள் எவ்வாறு மார்க்கங்கொண்டு பிரிந்துபோய்விடுவார்களோ அதுபோலும், காலனானவன் கைப்பற்றவந்தகாலையில் அவரவர் பெண்சாதிபிள்ளைகளும் தாய்தகப்பன்முதலிய சுற்றத்தார்யாவரும், அப்படியே பிரிந்துபோவார்களாதலால், அப்படிச்செல்லாமல் ஒன்றாயிருக்கும்படியாய் நிறுத்துவதற்கு வேறேமருந்தும் மந்திரமுந் தெய்வங்களுங் கிடையாமையாலும் இறந்தபேர்கள் மறுபடியும் முன்ஜனித்த தாயின் வயிற்றிலேதானே எல்லோரும்பிறந்துவளர்ந்து இருக்கவுமாட்டார்களாதலால் முன்ஜென்மத்திலே அவரவர்செய்த கர்ம்மாநுபவப்படியே பிறந்துவளர்ந்துவரும் பிறப்பிறப்பென்னுந் துன்பம்வந்த வகையாதெனில், சூரியப்பிரகாசத்துக்கு முன்னே அந்தகாரந்தோன்றியதுபோல ஆத்மாவுக்கு இல்லறதுக்கந்தோன்றி இருக்கின்றது, அவை எதினாற்றோன்றியதென்றால், கருமத்தினாலே தன்னிடத்தில் தோணப்பட்டது. அன்றியுங் கருமமேன்வந்ததென்னில், காமக்குரோதங்களால் உண்டாயிற்று, காமக்குரோதமேன்வந்ததெனில், அவமானத்தினால்வந்தது, அவமானமெவ்வகைவந்ததென்னில், அவிவேகத்தினால்வந்தது, அவிவேகமெத்தன்மையாய் வந்ததென்னில், அக்கியானத்தினால் வந்தது, அக்கியானம் என்னவகையாய் வந்ததென்னில் தன்னைமறந்ததனாலே சம்பவித்ததானபடியால் ஞானமென்னும் அறிவினால் அக்யானத்தையும் அபிமானத்தையும்போக்கினால் அவனுடைய ராகாதிகள்கெட்டு, நீயே நானென்றும் நானே நீயென்றும் சொல்வதுதெளியும், அப்படி தெளிந்துபார்ப்பையேயாகில், இந்த காலதேசவர்த்தமானமெல்லாம், ஒன்றாய்ச் சுயம்பிரகாசமாய் வேறுபாடில்லாமல் தோற்றப்படும். அதை விட்டுவிட்டு நீயுந் துராங்காரத்தி

ளாலே உன்னைமறந்து இவ்வகைத் துன்பத்தையடைகின்றது என்னகாரணம். மேலும், யாவும் ஒரேமயமாய் விளங்குவதால் நீ நானென்று இரண்டில்லை. ஆதலால், இவையெல்லாம் பிராந்தியினாலே உண்டாக்கப்பட்டது மனத்தின் வேற்றுமையேயன்றி வேறல்ல. ஆதலால் யான் உனக்கு வஞ்சகம் நினைத்து அவமானப்படுத்தவில்லை. மேலும், ருஷீஸ்வரராளால் சிவலிங்கப்பிரதிஷ்டைக்கு நியமித்த முகூர்த்தம் தப்பிப் போகின்றதாயிருந்தமையாலும், நீ வருவதற்குக் காலந்தாழ்த்தமையாலும், இவண் சீதையின் கையினாற்பிடித்து விளையாடிய மிருத்திகையானது இலிங்கம்போலுந் தெய்வீகம் விளங்கியிருப்பதைக்கண்ட யாவரும் அதனையே பூஜிக்கும்படியாய்ச்சொன்னதால் அவ்வாறே நானும், முகூர்த்தவேளை தப்பிப்போகின்றதாக விருக்குதென்று பூஜைபண்ணியதேயன்றி வேறில்லை. அப்படியிருக்க நீ இதனையோசியாமல் வியாகுலப்படுவதும், கோபிப்பதும், தகுதியல்ல. ஆதலால், நீ மிகவும் பிரயாசை யெடுத்துக்கொண்டு கயிலாசத்திலிருந்து கொணர்ந்த இலிங்கத்தை உன்னுடையபெயராற் பிரதிஷ்டை செய்து வணங்குவையேயாகில் உன்னைப்பற்றிய பாபங்களெல்லாம் நீங்கும்படியாய் சாம்பமூர்த்தியின் கிருபைபெற்று, பூலோகத்திலே சகலத்ராளும் உன்னாற் பிரதிஷ்டைசெய்த அநுமலிங்கத்துக்கு முன்வணங்கிப் பின்பு நம்மாற்பிரதிஷ்டை செய்யப்பட்ட இராமலிங்கத்தை வணங்குவார்களாயின், அவர்களுக்குச் சகல பாபங்களும், சகல தோஷங்களும், பூத வேதாள பசாச கணங்களும் விலகி இஷ்டகாமியங்களைத் தருவதன்றியும், மோக்ஷாநந்தமும்பெற்று வாழக்கடவர்களென்று கூறிப் பின்னும் கூறுவார். ஓ அநுமானே, உன்னாற் கொண்டுவரப்பட்ட அநுமலிங்கத்தையும், இராமலிங்கத்தையும், துதிசெய்யப்பட்ட புண்ணியசாலிகளுக்கு எக்யங்கள், யாகங்கள், அநேக தானதருமங்கள், தலதரிசனங்கள், இவையாவும் வேண்டியதில்லை. ஆதலால், இந்த கந்தமாதனத்திலே யான், சீதை, இலட்சுமணன் முதலியபேர்களோடும், பூசை

செய்திருக்குஞ் சிவலிங்கத்திலே பரமேஸ்வரன் நிறைந்து விளங்குவதிலும், உன்றாற் பிரதிஷ்டைசெய்யப்பட்ட சிவலிங்கத்திலே பரமேஸ்வரன் பிரதானமாய் விளங்கக்கடவனென்றும், ஸ்ரீராமசந்திரன் வரமளித்ததல்லாமலும், பின்னும் சொல்லுவார். வாரும் அநுமானே, உன்னுடைய துன்பங்களெல்லாந் தீரும்படியாய் நீ கயிலாயத்திலிருந்து கொண்டுவந்த சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து வணங்குவையேயாகில், அப்படி வணங்கிய அநுமேசனையும், நம்மாற் பூசிக்கப்பட்ட இராமீசனையும், ஆயிரம்யோசனை தூரத்திலிருந்து நினைக்கப்பட்ட பேர்களுக்கும், அநேக புண்ணியங்களுண்டாகி அஞ்ஞான முதலிய பாசங்களெல்லாம் அற்று பரமபதத்தை அடைவார்களென்று ஸ்ரீராமசந்திரன் திருவாய் மலர்ந்து, அநுமாரை இலிங்கப்பிரதிஷ்டை செய்யும்படியாய்ச் சொல்ல, அப்போது மாருதி கூறுவார். சுவாமி, இராமசந்திரமூர்த்தியே, தேவரீர் பூஜித்த இலிங்கத்தைப்பெயர்த்தெறிந்துவிட்டு அடியேன் கொண்டுவந்திருக்கும் மகாலிங்கத்தை உம்முடைய கையினாற் பிரதிஷ்டை செய்யவேண்டுமென்றுசொல்ல, அதைக்கேட்ட இராமசந்திரன், வாராய் அநுமானே, இப்போது என்றாற் பிரதிஷ்டை செய்திருக்கும் இலிங்கத்தை பேநிக்கப்படாது. ஏனெனில், அது பாதாளபரியந்தம் தட்டுதட்டாய் வேரூன்றி எங்கும் வியாபித்திருக்குமாதலால் உன்னால் அசைக்கப்படாது. மேலும், முன்னொருகாலத்தில் இச்சிவலிங்கமானது அக்கினிமலையாக விருந்தபோது அதினுடைய அடியைக்கண்டாலும், மகாமேருமுதலிய அஷ்டகுல பருவதங்களினது அடிமுடிகளை மாறிமாறிப் பிடுங்கிவைத்துக் கயிறாகத்திரித்தாலும், இவ்விலிங்கத்தை மாத்திரம், சற்றேனும் அசைக்கப்படாது. மேலும், அப்படி உனக்கு அதிக பெலனிருக்குமாயின் நாம்செய்த சிவலிங்கப் பிரதிஷ்டையை யெடுத்துப்போட்டு நீ கொண்டுவந்திருக்குஞ் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய் யென்று ஸ்ரீராமசந்திரன் சொல்ல, அதைக்கேட்ட வாயுகுமாரன் மகாபூரிப்போடும்,

அவ்விலிங்கத்தைநோக்கி, இந்த மிருத்திகையான மணலைப் பெயர்த்தெறிவது எனக்கோர் பெரியகாரியமோவென்று தாவிக் குதித்து, அங்குள சகலதேவர்களும், ருஷீஸ்வராளும், முநீஸ்வராளும், யாவருங் காணும்படியாய் குபீலெனப்பாய்ந்து இராமலிங்கத்தைப்பிடித் தசைத்தார். அவ்வாறசைத்த தற்கு இலிங்கமானது அசைவில்லாததுகண்டு பின்னும் மிருத்திகையான இம்மணலுக்கு இவ்வளவு வலுவுளதோவென்று அநுமாரானவர் தனது பஞ்சபூதங்களையு மடக்கிச் சுவாசபந்தனஞ்செய்து மகாபலத்தோடும், பலதரமும் அசைத்துப்பார்த்தார். அப்படி அசைத்தும், இராமலிங்கமானது அணுவளவும் அசையாமலிருப்பதுகண்டு ஆங்காரங்கொண்டு, வாலை முறுக்கிப் பற்களை நெறநெறவென்று கடித்து வாலிற்கட்டியிருக்கும் மணியானது கணகணவென்று சத்தாடம்பரஞ்செய்யத் தலைக்குமேல் ஆகாசவெளியைப்பார்க்க வாலைநீட்டிக்கொண்டு மகாகருவத்தோடும், இராமலிங்கத்தைப்பிடித்தசைத்தார். அப்போதும் அசையாததுகண்டு, மகிமையறியாதவராய் மலையைப்போலும், மரத்தைப்போலுமெண்ணி, இந்த மிருத்திகையான மண்ணிலிங்கத்துக்கு இவ்வளவு வலுவாவென்று விசுவசொரூபங்கொண்டவராய் இரண்டு கரங்களையும் பூமியிலூன்றி வாலினால் இராமலிங்கத்தைச் சுற்றி இறுக்கி மகாகோபாவேசத்தோடும், பூரணவலுவைக்கொண்டு ஆகாசவீதியில்வாழும் சூரியசந்திரான் நக்ஷத்திரங்கண் முதலிய உம்பர்களியாவருந் திடுக்கிட்டு நடுங்கும்படியாய் லாகுசெய்து காலிரண்டையு முயரத்தூக்கி வெகு பராக்ரமத்தோடும் விசைகொண்டு அசைக்கிறபோது, பூமி யந்தர சொற்கமென்னு மூன்றுலோகமும், அஷ்டதிக்குகளும், அண்டசராசரங்களும், அஷ்டகுல பருவதங்களும், சப்தசாகரங்களும், எறும்புமுதல் யானை யீறாகும் எண்பத்துநான்கு நூறாயிரஞ் ஜீவகோடிகளும் அசைவுகொண்டு அல்லோலகல்லோலமாய்ச் சுழன்றதேயன்றி, ஸ்ரீராமசந்திரனாற் பூசித்த இலிங்கமானது அசையாததுகண்டு, ஒன்றும் தோற்றாதவராய் பின்னும்

வாலேமூறுக்கி இறுக்கி விசைகொண்டு அசைக்கும்போது அநுமாருடைய வாலானது நீண்டு நைந்து இளகிப் படீலென்று அறுந்துவிட்டது. அப்படி அறுந்தவுடனே அவ்விராமலிங்கத்தின் வடபாரிசத்திலே கூக்குரலிட்டுத் தலேகுத்தாகக் கரணம்போட்டு விழுந்தார். அவை எப்படியிருந்ததென்றால், முன்னொருகாலத்தில் வாயுபகவானுடைய பெலத்துக் குட்பட்ட ஆதிசேடன் மகாமேருவின் கொடுமுடியைப் பெயர்த்தெறிந்தானென்னுந் தன்மைக்கிணங்க தானுமோர் கொடுமுடியைப்போல் அலறிகொண்டு விழுந்தமாத்திரத்தில் வாயினாலும், மூக்கினாலும், இரத்தங்கள் குபீர்குபீரென்று பெருக, எலும்புகளெல்லாம் நொருங்கிக் கண்விழிபிதுங்கி விழுந்த அதிற்சியினால் மண்டையுடைந்து பூமியானது பெலத்வாரம்போற் பளளப்பட்டுத் தண்ணீருறறுவரையிலும் பேதித்து, அதிலூறிய ஜலமும், இரத்தமும் ஒன்றாய்ச் சேறுடிச் சமுத்திரத்தில் பிரவாகமாய்ப்போய்ச்சேர, அப்போது அநுமாரானவர் தலேக்குப்புற்று நாக்கை நீட்டிக்கொண்டு மூற்சையோடும், பூமியின்பேரில் அசைவற்றிருப்பதைதேவர்முதலிய ருஷீஸ்வரரள், முனீஸ்வரரள் வானராதிக ளியாவருங்கண்டு ஆச்சர்யங்கொண்டு, ஸ்ரீராமசந்திரனுடைய அன்பையும், ஸ்ரீராமநாதனுடைய கிருபானந்தப்பெருக்கையு நினைத்து புகழ்ந்துகொண்டாடி நின்றவர்களாய், ஸ்ரீராமலிங்கத்தின்பேரிற் பாதிவால் சுற்றியிருக்கப் பாதிவால அறுப்புண்டதோடுங் கூப்பிடு தூரத்திற்போய் விழுந்து மூற்சித்திருக்கும் அநுமாரைக் கண்டு நடுங்கி வெறுத்து யாவருஞ் சகிக்கமாட்டாதவர்களாய் துன்பக்கடலுட் டோய்ந்திருப்பதை இராமசந்திரன்கண்டு, மிகவும் பதறிக் கண்ணீர் தாரைதாரையாய்விடுத்துக் கதறும்போது, இலட்சுமணரானவர் வயிற்றிலும் வாயிலு மறைந்துக்கொண்டு புலம்ப, சீதாதேவியுங் கோவென்றலறிப் பூமியின்மேற்சாய்ந்துபுரண்டுபுரண்டழுது, ஐயோ பாழுந்தெய்வமேயென்று வாய்விட்டலறி தன்னுடைய இரண்டு கைகளாலும், அநுமாருடைய அங்கத்தை இரத்தவெள்ளத்தினின்றுந் தூக்கி

யெடுத்தாள். அவ்வாறு அம்மனுனவள் எடுத்துப் பார்க்கும் போது, அநுமாரானவர் நைந்து குழைந்து சுருண்டிருப்பு தைக்கண்ட வானராதி முதலிய யாவரும், ஐயையோவென்று அபயமிட்டு முகத்திலறைந்து கோவென்றழுதார்கள். அது கண்ட இராமமூர்த்தியும், அநுமாரைத் தோளோடேசேர்த் தணைத்துக்கொண்டு இக்கன்றாவியைப்பார்க்கவா இருந்தோ மென்றும், மாருதியின் தலையைத்தாங்கி தனது மடியின்மே ரில் உட்காரவைத்தபோது அம்முடியானது நிற்கமாட்டாமற் சோர்ந்து சாய்வதைக்கண்ட சீதாதேவியானவள் அடித்து மோதி விழுந்து எழுந்திருந்து தனது இருகரங்களாலும், அநுமாருடைய தலையைத் தாங்கிக்கொள்ள, ஸ்ரீராமசந்திரன் முதலிய யாவரும், அநுமாருடையதேகத்திற் படிந்திருக்கும் தூசுகளையும், இரத்தங்களையும் துடைத்து, ஆ எங்கள் தெய் வமே என்றும், எமகளையனே என்றும், எங்கள் கண்மணியே என்றும், தூக்கித்துக்கூவி, அந்தோ, பம்பையாற்றங்கரையில் எங்களை நட்புக்கொண்ட நாள்முதல், சுக்ரீபன்முதலிய வான ராதிகளையெல்லாஞ் சேர்ப்பித்துவைத்து உனது தாயாகிய அஞ்சனாதேவியையும், தாதையாகிய வாயுபகவானையுமறந்து, எங்களைச் சதமென்றெண்ணியிருந்து, எங்களெண்ணப்படி நடந்துவந்த உன்னை எப்போது காண்போம். ஐயோ, உனது வாய்திறந் தோர்வார்த்தை பேசாயோ, கண்ணைத்திறந்து பாராயோ, எங்கள்பொருட்டாய் நைந்து மெலிந்தனையே, மகேந்திரகிரியினின்றுமெழுந்த நினது கால்களும், இலங்க ணியைச் சம்மாரஞ்செய்து திருவாழியைக் கொண்டுபோய் கொடுத்த கரங்களும், இலங்கையைச்சுட்டுச் சாம்பலாக்கிய வாலும், அசோகவனத்தில் பஞ்சசேனாபதிகள் முதலிய இரா க்ஷதவீரர்களை வெற்றிகொண்ட புஜபல பராக்ரமங்களும், எங் கே யடக்கினாய், அப்பனே, எனதாருயிர்த்துணையாகிய நீ மூற் சித்திருப்பதைப்பார்த்து சகிக்கவுங் காலமாயிற்றே என்று நின்றுங் கூறினார். ஆ என்து செல்வமே, விபீஷணனை அடைக்கலங்கொள்ளும்படியாய் அநேக நீதிவாக்கியங்களை

எடுத்தோதிய விவேகசாலியாகிய உனக்கு எவ்வளவுந் தோற்றுமல் இப்படி அவதிக்குள்ளாய் அயர்ந்தனையே யென்றும், நான் இராவணனைச் சங்காரஞ்செய்து வெற்றிமாலைபூண்டது நின்வலுவாலன்றி வேறில்லையே என்றும், ஐயோ என் னிரு கண்மணிபோன்ற உன்னை இவ்விடத்திற் பறிகொடுத்துவிட்டு அயோத்தியாபுரிக்குப்போய் பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு அரசாட்சிசெய்து வாழவும் மனமெழுமோ, அநுமானே, எங்களை அயோத்தியாபுரியிற் றம்பிமார் தாயாருடனேகொண்டுபோய் சேர்த்துப் பார்க்காமல் இப்படி நாங்கள் பரதவிக்கப் பார்க்கின்றனையேயென்றும், ஸ்ரீராமசந்திரன் புலம்பிக் கண்ணீ ராறுபோற்பெருகவும், அதுகண்ட சீதாதேவி முதலாகியபேர்களும், அழுது புலம்புங் கண்ணீரும், அநுமார்தேகத்தில் வீழ்ந்து தேகத்தின் மயிர்க்கால்கடோறும் புகுந்து அதனால் அவர் அடைந்த தாபசோபங்கள் தீர்ந்து உடம்பில் வலுவுபொருந்தி அசைவுண்டாகிக கண்களை விழித்துப்பார்த்து, ஸ்ரீராமசந்திரன், சீதாதேவி, இலட்சுமணப்பெருமாள் முதலானபேர்களினுடைய கண்ணீரால் ஸ்நானம் பண்ணப்பட்டதினல், அக்கந்தமாதனத்தில் விளங்கும் இராமநாதனைத் தொட்டுப் பிடுங்கி எறியவேண்டுமென்று நினைத்து அபசாரஞ்செய்த பாபமும் விமோசனமாகி, அஞ்ஞானங்களெல்லாம் அகன்று ஞானோதயமுண்டாகி எங்குஞ் சச்சிதானந்தமயமாய்த் தோன்றப்பட்டதினலே, ஸ்ரீராமசந்திரமூர்த்தியையும், சீதாதேவியம்மையையும், தோத்திரங்கள்செய்து வணங்கிச் சகஸ்ர நாமங்களையும், தசாவதாரங்களையும், ஸ்ரீராமசந்திரனுடைய கருணாநிதிப் பிரவாகங்களையும் சொல்லித் துதித்து, அடியேன்செய்த அபசாரங்களைப்பொறுத்து ரட்சிக்கவேண்டியதென்றும், ராமசந்திரனது பாதகமலங்களைவணங்கி நமஸ்கரித்து எழுந்திருந்து கைகட்டி வாய்புதைத்து நின்றார். அப்படிநின்ற மாருதியைச் சகலத்ராளுங்கண்டு சந்தோஷித்துக் கொண்டாடினர்கள். அதுகாலையில் ஸ்ரீராமசந்திரனும், அநுமானைப்பார்த்துக் கூறுவார். வாரும் அநுமானே, நாம் மகா

ரிஷிகள் வாய்மையின்வண்ணம், சீதைகரத்தினல் பிடித்துப் பாணித்த சிவலிங்கத்தைப் பூஜித்து இருப்பதின் மகிமையறி யாது இறுமாப்புக்கொண்டு கோபித்துக்கொள்ளலாமோ, அதன்றியும், நான்பூஜித்த இராமலிங்கத்தை முப்பத்து மூக் கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகளும், கருட காந்தர்வ சித்தவித்யாதர ருரகராகாயவாசியர் போகபூமியர் முதலிய சிவகணங்களும், பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் முத லாகியபேர்களும் ஒன்றாய்க்கூடி பேதிக்கவேண்டுமென்று லும், பேதிக்கக்கூடுமோ, அப்படி இருக்க, நீ சிறுபிள்ளைபுத்தி யாய் வீணே இப்படிக்கொத்த துற்புத்தியைநினைந்து துயருற் றனையே, ஆயினும், உனக்கு இன்னங் கூறுகின்றேம். யாதெ னில், இப்போது என்னுல் இறக்கப்பட்ட இலங்கைவேந்த னுனவன் முன்னொருகாலத்தில் என்னையனுகிய சாம்பவமூர்த் தியானவர் எழுந்தருளியிருக்கும், ஸ்ரீகயிலாசத்தை பெயர்த் தெடுக்கவேண்டுமென் றெண்ணங் கொண்டவனுய் அவன் பட்ட பாடுகளையெல்லாம் நீ கேட்டறிந்திலையோ, இதல்லா மலும், அந்தபரமேஸ்வரன் தேவர்களை கெருவபங்கஞ் செய்ய வேண்டி ஓர் துரும்பைஎடுத்து முன்னெறிந்து பேதிக்கச் சொன்னபோது சகல தேவரும் ஒருங்குகூடி எடுத்தும், உனது தந்தையாகிய வாய்வுபகவான் மகா வலுவுகொண்டு சூறுவளியாய்த் தன்னுடைய பூரணவலுவோடு சுழன்று சுழன் றடித்தும், பேதிக்கப்படாதவையை யாவருங்கண்டு மயங்கித் தியங்கி நின்றனரே யன்றி அத்துரும்பை அசைக்கக் கூடாதவைக்கு அவனசையாமல் அனுவசையாதென்றும், ஓர் வதந்தி தேவர்களால் உண்டாகி யாவரும் வணங்கித் தோத் திரஞ்செய்ததை நீ கேட்டதில்லையோ, மேலும், இச்சதுர்த்தச புவனமும், அண்டபிண்டசராசரமும், விளங்காநின்ற எறும் புக்கடை யானைமுதல் எண்பத்துநான்கு நூறுயிரஞ் ஜீவாத் மாக்களிலும்நிறைந்து எள்ளுக்குள் எண்ணெய்போலஎங்கும் வியாபகமாய் உள்ளும், புறமும் ஒன்றாய் ஆதிமத்யாந்த ரகித மாய் திரிநேத்திரதாரியாய் விளங்காநின்ற கர்த்தனுடைய மகி

மைகள் உனக்குத்தெரியாததுண்டோ, அந்தோ, நவவியா கரணபண்டிதனாகிய உனக்கு நாம் சொல்லவேண்டியதென்ன விருக்கின்றது. மேலும், ஸ்ரீகயிலாசபதியாகிய சிவபெருமான் எவ்வணமிருப்பாரெனில், காலனுக்குக் காலனாகவும், கருதித் துதிப்பவர்களுக் கெளியவனாகவும் இருப்பவனை அறியாமற் செய்த அபசாரத்துக்குப் பொறாதவராய் உனக்கு இத்தன்மை யாகிய துன்பங்களைச் செய்தார். ஆயினும், நீ செய்த அபசாரத்தை அக்கடவுள் எப்போதும், அவர் திருவுளத்தில் வையார். ஏனெனில், அடியர்களானோர் தீங்குசெய்தால் அன்னவரைத்தெண்டித்தும், பாங்குசெய்தவர்களைக் கடாக்ஷித்து வரும் பக்குவத்தையுடையவராதலால் நீ செய்த பிழையைப் பொறுத்துக் கருணாகடாக்ஷஞ் செய்வரேயன்றி, கைவிடமாட்டார். ஆதலால், நீ விழுந்த அதிற்சியினாலுண்டாகிய பிலத்வாரமானது பூலோகத்திலே உன்பெயரால் உண்டாக்கப்பட்ட தீர்த்தமெனச் சிந்தித்து, அதில் தீர்த்தமாடும் பேர்களுடைய பாபங்களையெல்லாங்கொடுத்துப் புண்ணியங்களைக் கொடுத்துக்கொண்டிருக்கும், அஃதெப்படியெனில், அந்த இடத்திலே ஊறி இருக்குஞ் ஜலமானது ஆதி பரமேஸ்வரனுடைய சடாடவியில் விளங்குங் கௌரி, கங்காபவானி, கௌதமி என்று சொல்லப்பட்ட நாமதேயங்களையுடைய கங்கையானவள் பாதாளவாகினியாய்ப் புறப்பட்டிருப்பதனாலே அத்தீர்த்தத்திலமூழ்கும் பேர்களுக்கெல்லாம், ஆயிரம் அஸ்வமேதயாகஞ்செய்தபலன் கிடைக்கும். இதல்லாமலும் கங்கை, யமுனை, சரஸ்வதி என்னு மிம்மூன்று நதியினும் தீர்த்தமாடினால், எவ்வளவுபலன் கொடுக்குமோ, அவ்வளவு பலனைக் கொடுக்கும். அன்றியும், நீ விழுந்தவிடத்திற் பெருகியிருக்கும் தீர்த்தம், அநுமதீர்த்தமென்று உன் பேரால் இதுமுதல் பூலோகமுள்ளளவும் விளங்கிக்கொண்டு இருக்கும். அல்லாமலும், அந்த தீர்த்தக்கரையில் பிதுர்களைக்குறித்து திலதர்ப்பண சிராத்தபிண்டங்கள் யாரொருவர் செய்கின்றார்களோ, அவர்களுடைய செய்வினைகளால் அவர்பிதிர்களெல்

லப்படாது. மேலும், உன்னால் உண்டாயிருக்கும் அநும குண்டத்தில் சிரார்த்த பிண்டங்கள் செய்யாமல் மற்ற இடங்களிற் செய்வாராயின், அன்னவர்களை அவர்களுடைய பிதுர்க்கள் கோபித்து விரும்பமாட்டார்கள். ஆதலால், அவ்வளவு மகிமையுடையதாய் விளங்கு மத்தீர்த்தத்திலே முழுகாதபேர்களும், சிரார்த்தஞ் செய்யாதபேர்களும், மகா பாவிகளென்று சொல்லப்படுவார்கள். இதல்லாமலும், அத்தீர்த்தத்திற் றண்ணீர்முகந்து திலதற்பணஞ்செய்தால், அன்னவரைப்பயந்த மாதாபிதாக்களுக்கு நெய்யினால் தற்பணஞ் செய்ததற்குச் சமானமாய் ஒப்புக்கொண்டு சந்தோஷத்தோடும் வாழ்த்துவார்கள். இதன்றியும், உன்னாற் பிரதிஷ்டைசெய்து பூஜிக்கப்பட்ட சிவலிங்கமும், அவ்வாறே மகிமையோடும், விளங்கிக் கொண்டிருக்கும். அதினும் நம்மாற் பிரதிஷ்டைசெய்யப்பட்ட இராமலிங்கத்துக்கு நீ செய்யப்போகின்ற மகாலிங்கமானது முதன்மையாய் விளங்கும். அப்படி விளங்குவதுமன்றியில், அந்த மகாலிங்கத்துக்கு அபிஷேகம், நெய்வேதன முதலிய சோடசவுபசாரங்களும் முன்னுதாய்நடந்துப் பின் இந்த கந்தமாதனத்திலே நாம் பிரதிஷ்டைசெய்யுமுன்னம் கவுதமராலும், அகஸ்தியராலும், பூஜிக்கப்பட்டுக்கொண்டிருக்கிற அத்திர பூர்வ மகாதேவரென்னும் இரண்டு லிங்கத்திற்கும், அபிஷேக ஆராதனை முதலியதும்நடந்து அதன்பிறகு நாம் பூஜிக்கப்பட்ட ஸ்ரீராமநாதனுக்குப் பூசைநடக்கும்படியாய் வரமளித்தோமாதலால், நீ கொண்டுவந்திருக்கும் சிவலிங்கத்தை பிரதிஷ்டைசெய்து பூஜித்து வணங்கென்று மகா சாந்தகுணசாலியாகிய இராமசந்திரமூர்த்தியார் சொல்ல, அதைக்கேட்ட அநுமாரானவர் மனமகிட்சியடைந்து ஸ்ரீராமசந்திரமூர்த்தியாற் பிரதிஷ்டைசெய்த இராமலிங்கத்துக்கு வடபாலாகத் தான்கொண்டுவந்த சிவலிங்கத்தில் ஒன்றைப் பிரதிஷ்டைசெய்து லோகோபகாரமாய்ப் பூஜித்து, மற்றொரு லிங்கத்தை தன்னுடைய ஆத்மார்த்தமாய்ப்பூஜித்து வணங்கி ஸ்தோத்திரஞ் செய்தாராதலால், நைமிசாரணியர்களே, மூன்

னர் அநுமானுடையவாலினுல் மூன்று சுற்ருகச் சுற்றப்பட்டு இழுத்தகாலேயில், அந்த இராமலிங்கத்துக்கு மூன்று இரேகை போல் வடுத்தோன்றி இருப்பதனுல் யாவருங் கண்டறிய லாமென்று சூதமாமுநிவர் சொல்ல, அதைக்கேட்ட நைமி சாரண்யர்கள் மெத்தவும் பிரம்மானந்தங்கொண்டு, சுவாமி, தேவரீர் இதுவரையிற் சொல்லிவந்த புண்ணியகதைகளில் இவை மிகவும் மகிமைதங்கியிருப்பதை நோக்கின் தேவர் களுக்கு இம்சையைத்தரும், ஸ்ரீராமசந்திர மூர்த்தியி னுடைய மனதையும் வருந்தச்செய்ததால் அச்சண்டாளனுகிய ராவணனைக்கொன்றதோஷம், ஸ்ரீராமசந்திரனுக்குத்திரவேண் டியதாய் சிவலிங்கப்பிரதிஷ்டைசெய்து பூஜித்தாரென்றுஞ் சொல்லியதால் அப்படி அவனை வதஞ்செய்தநிமித்தம் ஸ்ரீராம சந்திரனுக்கு பிரம்மஹத்தி வருவதற்கு அவன் பிராம்மகுலனுக விருந்தாலன்ருே சம்பவிக்கும். ஆதலால், அவ்வரக்கனுடைய வரலாற்றையும், அவ்வரசனுடைய வரலாற்றையும், தசரத தநயனுகிய இராமமூர்த்திக்கு பிரம்மஹத்தி அணுகிய விதத் தையுந் திருவாய்மலர்ந் தருளவேண்டுமென்று கேட்கச் சூத மாமுநிவர் சொல்லத்தொடங்கினுர்.

இராமசந்திரன் அர்ச்சனைச்சருக்கம்

முற்றுப்பெற்றது.

---

## பிரம்மஹத்திச்சருக்கம்

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முநிவர்களே, சத்தியலோகத்தின்கண் வெண்டாமரை யாசனத்தில் வீற் றிருக்கும், பிரம்மதேவனுடைய புத்திரரான புலத்திய மகா ரிஷியிடத்திலே, மகாபுண்யகுண வேதநீத ஒழுக்கத்தோடும், ஓர் புத்திரன்தோன்றி, விச்சிரவாவென்னும் பெயர்பூண்டு சொர்க்க மத்திய பாதாளமென்னுந் திரிலோகங்களும் மதிப்பதற்

